**THIS PURANIC DRAMA**

IS

DEDICATED

*(By Permission)*




TO

## Sreeman S. Rm. M. Ct. Pethachi Chettiar Avl., M. R. A. S.,

*Zemindar of Andipatty*

AND

*Vice-President of the Madura Tamil Sangam*

*as a mark of sincere respect*

*for his innate generosity*

AND

*his unstinted patronage of Learning*

*especially in Tamil.*

BY

His fervent admirer

The Author.



சிவமயம்.

# மாக்ஷிமைதங்கிய ஆண்டிப்பட்டி ஜமீன்தார் ஸ்ரீமான்-பெத்தாச்சி செட்டியாரவர்களுக்கு இந்நூலாசிரியரின் நன்றியுரை, உரிமையுரை, வாழ்த்துரைக் கவிகள்.



## நன்றியுரை.

வானாடும் மகிழ்கின்ற வளநாடு செழுங்கமல
வாவி நீந்தும்
மீனாடுங் கண்ணியர்பால் விளையாடி உறவாடு
மென்ம யூரம்
பூனாடும் பொன்னறுகாற் புள்ளாடுங் கானரசம்
பொருந்துஞ் சோலைக்
கானாடு காத்தானூர் மேனாடிப் புரிந்ததவக்
காக்ஷி யன்னாய் !

பற்பணியிற் பணியணியுங் கற்பபுரி வாசர்பசு
பதியா மீசற்
கெற்பணியுங் கற்பணியும் பொற்பணியு மிசைந்தெழில்பெற்
றிலங்குங் கோயிற்
கற்பணியிற் றிருப்பணிசெய் கனமரபின் கற்பகமே !
களிப்பி னுங்கு
நற்பணியிற் பைங்குனியி னற்புதம கோற்சவஞ்செய்
நலமிக் குள்ளோய் !

ஈசனத்தந் தனையுயர்த்தி யினக்கபயந் தந்தனனென்
றிசைக்கு மப்பேர்
பேசுநக ராதிபல வளநகர்கள் திறைசெலுத்திப்
பிறங்கு செல்வம்
வாசமுறு பிரசைகளின் நேசமிகு மாண்டிபட்டி
மகிப ரேறே!
போசமக ராசனெனப் புகழோங்கும் பெத்தாச்சிப்
புண்ய சீலா!

மலயமுனி திருவருளின் வழிவருசெந் தமிழணங்கு
மகிழ்ந்து வாச
நிலயமுறு மதுரைதனில் நலமொளிர்நான் காஞ்சங்க
நிருவா கத்தின்
தலைமையதற் குதவிசெயுந் தன்மையுபாக் ராதனமாந்
தலைமை பெற்றுக்
குலவிவளர்த் திடுகின்ற பெத்தாச்சி யென்னுமிளங்
கோவென் கோவே.

உலகனைத்தும் விரிந்தொடுங்கற் கிடமாய வொருவனைத்த
னுளத்தே கொண்டாய்
குலவுமிக பரமிரண்டுஞ் சுகமுறநன் கியற்றுதலே
கொள்கை யானாய்
பலவுயிர்க்கு மனையானாய் பாலர்கட்கப் பாவெனச்சொற்
பண்பும் பெற்றாய்
சொலவுனக்கிங் கீடில்லை சுமுகமுள பெத்தாச்சித்
துரைச்சிங் கேறே.

பொன்பதிவு றம்புய ! நின் பெத்தாச்சிப் பேருரைக்கிற்
பொருந்து நாவிற்
கின்பரஸ மெனலாகுந் தமிழ்ப்புலவர் சங்கநிறைந்
திலங்கு கின்ற
மன்பெரிய நின்ஸமுகம் வந்தடைந்த வெனைப்பெரிது
மகிழ்வித் தென்பா
லன்பதிகத் துடன்முகம னதுகூறி யாதரித்த
அருமை என்னே !

இன்னமுதா மெனுந்தமிழிற் சுபத்திரா பரிணயம்யா
னியம்பக் கேட்டுச்
சொன்னயமும் பொருணயமுங் கண்டுதலை துளக்கிநிதி
சொரிந்தா யெற்கே
கன்னனிகர் கொடையாளா ! இந்நூலச் சிற்பதித்துக்
களித்துக் காண்போம்
என்னவுரை தந்தஉன தருமையையான் மறவேனென்
றென்றுந் தானே.

## உரிமையுரை.

தற்பரனற் பசுபதிநா தன்னருள்சேர் சிதம்பரவே
டவத்தின் வந்தோய்!
விற்பனக விப்பர்குல மேருமலை மேற்சொலிக்கும்
விண்வி ளக்கே!
சொற்பொருளின் சுவைமல்குஞ் சுபத்திரா பரிணயநூல்
சொன்னேன் நிற்கே
அற்பணஞ்செய் தேனதனை அன்புடனங் கீகரித்தின்
னருள்செய் வாயே.

## மங்களவாழ்த்து.

மங்களங் திகழ்கின்ற தங்கமணி மௌலியின்
மன்னொளி வயங்கு ஸமுகம்
வட்டவெண் குடைநீழ லிட்டினிது ப்ரஜைகளின்
வாட்டந் தவிர்க்கும் ஸமுகம்
மனுநெறி வழாதுகோன் முனைமுகங் கோடாது
வாய்மை விலகாத ஸமுகம்
வந்தியர்கள் பாடமங் கையராட பேரிமுதல்
வாத்திய முழங்கு ஸமுகம்

திங்களணி செஞ்சடைப் பசுபதீச் சுரர்தநற்
றிருவருள் சிறந்த ஸமுகம்
திவ்யஸமு கஞ்சுகுண பவ்யஸமு கம்வறுமை
தீர்க்கின்ற பாக்ய ஸமுகம்
தேனாடு பூம்பொழிற் காநாடு காத்தான்
சிதம்பரச் செல்வ வணிகச்
சீமான் றவத்தின்விளை வேமான் மியமொடு
திகழ்ந்தோங்கு கின்ற ஸமுகம்

துங்கமுறு வித்வஜன பங்கயங் கட்கிளஞ்
சூர்யப்ர காச ஸமுகம்
துன்னலர் குலங்களுக் கின்னறரு வெம்புலித்
தோற்றத் தமைந்த ஸமுகம்
தூயதிரி கூடமதி லேயிருந் தன்பொடு
சுபத்திரா பரிண யத்தின்
சொற்றமிழ்ச் சுவைமாந்தி உற்றவெற் றிருநிதி
சொரிந்தாண்ட சுமுக ஸமுகம்

பொங்குநல் வளங்கண்மலி யாண்டிபட் டிச்சமீன்
பொலிவுற் றிலங்கு ஸமுகம்
புண்யஸமு கம்மிகக் கண்யஸமு கங்கருணை
பொழியுமிரு விழிகொள் ஸமுகம்
புகழ்மேவு பெத்தாச்சி மகராச னிந்திரன்
போலொளிர் கின்ற ஸமுகம்
புத்ரபௌத் ராதிபுரு டார்த்தங்கள் யாவும்
பொருந்திமேன் மேலும் வாழ்க.

முற்றிற்று.



# சாற்றுக்கவிகள்.



## அரிகேசநல்லூர், திராவிடகவிகேசரி மகா-௱-௱-ஸ்ரீ பு. அ. இராமஸ்வாமி பாரதியவர்களியற்றிய சாற்றுக்கவிகள்.

விருத்தம்.

விரத ராசன யோகியர் வேட்கைகொள்
விண்டு வின்கதை கொண்டது மேனுமே
பரத ராசக நாவலர் மெச்சுதேன்
பாகெ னத்தமிழ்ப் பாவினிப் பாயன
வரத ராச முகமதி வள்ளலாம்
வரத ராசமுன் னூல்வரன் றந்தபுத்
திரத ராசன நாநில மைவிடாச்
செம்மை யோயெனச் செப்புமெய்ப் பாவலன்.
சுபத்தி ராவிட மேன்மைகீர் வாணவித்
துவசி காமணி யாமுத்து சுப்பவேள்
சுபத்திராபரி ணீயஞ்செய் தானிதைத்
துதித்த பேருக்குண் டாகுங்க ளிப்பொடு
சுபத்தி ராகம் பொருளருள் சேர்முத்தி
சொல்ல வீதின் பெருமையைப் பார்சிர
சுபத்தி ராவண காதகன் பாயனுஞ்
சுருங்கு மேயெனில் யான்சொலற் பாலதோ.

வேறு.

உன்னுநவ ரஸந்தழுவிச் சுருதிலயந் தவறாம
னுயர்வுற் றோங்கி
மன்னுமிசைத் தமிழிலக்க ணம்பொருந்திப் பொருளடக்கம்
வாய்ந்த தென்னக்
கன்னன்மொழி சேர்சுபத்தி ராபரிணீ யத்தையுளங்
கனிவாய்ச் செய்தான்
அன்னவஞ்சு முலகமதி நாவலர்கா வலர்புகழ்கொண்
டாடத் தானே.

# அம்பாசமுத்திரம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் மகா-ா-ா-ஸ்ரீ ஹரிஹரபாரதியவர்கள் இயற்றிய சாற்றுக்கவி.

"நிலைமண்டில ஆசிரியப்பா"

தேங்கமழ் பொருளைப் பாங்கமர் முத்தமிழ்
தெரியருங் புலவர்க் குரியதா மரிகையில்
சொல்வே விரும்பு னல்வேலி நின்றுவந்
துறைதரு கிற்போன் மறைதரு நாவினுற்
செந்தமி ழாய்ந்த நந்தமிழ்ப் பாவலன்
வேதாந் தகிர்த்தனை வேதாந் தநாடகம்
நிகழ்கவி மாலை புகழ்கவி வடமொழிச்
சித்திரா மாயணம் மற்றிவை புகன்றருள்
ஒப்பறு முத்துச் சுப்பைய ருக்குப்
பேர னுஞ் செல்வக்கு பேர னாகிய
வரத ராசன் விரத ராசியின்
இத்தரை யுதித்த உத்தம குமார னும்
புறக்கடல் குடித்த அறக்கட முனிபோல்
வடமொழிக் கடலைநெஞ் சிடமொழி யாதுகொண்
டிங்கா னொரனுஞ் சங்கர னாருள்
பாடிய நிலைபொரு ளாடியி னிழலெனக்
காரிக்கை யாப்பலர் கோரிக்கை யாலளித்
தத்திற மேபவு லத்திய வதமோ
டெல்லிசார்ந் துயர்கொடி டில்லிசாம் பிராச்சிய
நாடக முதற்பல நாடகம் பரவத்
தந்தலக் குமண சூரி யந்தணன்
முன்னவ னுதவிய நன்னயச் சுத னும்
ஆகிய வெற்கோர் வாகியல் நட்பன்
முத்தமிழ் முத்துச் சுப்ப பாரதி
சீராட் டுயர்ந்த மாராட் டிரத்து
பலவர் தகவி பலர்வந் தனைசெயச்

சொற்சங் கீத சௌபத் திராவெனும்
அரிய நூலி னுரியநெறி பற்றி
விருத்தமு நடையு நிருத்தநற் றருவுமாத்
தமிழ்தனிற் புலவர்க் கமிழ்தினு டகமாய்ச்
சாற்றினன் உலகெலா மேற்றுதல் பெறவே.

---

அரிகேசநல்லூர், மகா-ா-ா-ஸ்ரீ L. முத்தையாபாகவதவர்கள் இயற்றிய சாற்றுக்கவி.

விருத்தம்.

"நசையுறுமித் தமிழ்நாட்டிற் சுபத்திரா பரிணயநா
டகந வின்றிங்
கிசைபெறுவீர்" எனயான்முன் னிசைத்தமொழிக் கிணங்கியிந்நூ
லியற்றி னானல்
வசையறுமென் மாமாதா மகர்தமுயர் வங்கிஷவா
ரிதியிற் றோன்றுஞ்
சசியெனவந் தான்நமோ மாமைந்தன் முத்துச்சுப்
பையன் றானே.

---

அரிகேசநல்லூர் வெ. முத்துகிருஷ்ணையரவர்கள் குமாரரும், இந்நூலாசிரியரின் மைத்துனரும், மாணாக்கருமாகிய M. ஹரிஹரமையரியற்றிய சாற்றுக்கவி.

வெண்பா.

பொன்னரிகை நன்னகர்வாழ் பூசுரகு லோத்துங்கன்
மன்னுபுகழ் முத்துசுப்ப மாமேலோன்—மின்னினிடை
மாது சுபத்திரையின் மன்றலதை நாடகமாய்
ஓதினா னுள்ளமுவந் து.

---

# சிறப்புப்பாயிரம்.

—:(o):—

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பண்டிதபரீக்ஷைகளிற் றேர்ந்தவரும்,
மதுரைத்தமிழ்ச்சங்கத்திலும், சேதுசமஸ்தானத்திலும், ஆண்டி
பட்டி சமஸ்தானத்திலும், பிறரிடத்திலும், தங்க மெடல்கள்
புரிசுபெற்றவரும், எதிர்க்கோட்டைத் திரு. நாராயணை
யங்காரவர்கள் மாணாக்கரும், இராமநாதபுரம் மகா-
ள-ள-ஸ்ரீ M. விஜயஞ்சேர்வைகாரர் அவர்கள்
குமாரருமாகிய, ஆண்டிபட்டிச் சமஸ்தான
வித்வான், மகா-ள-ள-ஸ்ரீ வி. திருஞான
ஸம்பந்தக்கவிராயரவர்கள் இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

### ஆசிரியவிருத்தம்.

பொன்பூத் திலங்குந் தாமரையிற்
பொருந்தி விளங்கு மோதிமத்தைப்
பொழிலிற் றிகழும் பெருங்கவியன்
பொடுகண் டருகே புகக்குதித்தல்
மின்பூத் தனைய திருமேனி
மிதிலைக் குமரி யருட்கடலாம்
விமலன் சுகுணன் றசரதி
வேந்தன் மனையாஞ் ஜானகிபோல்
மன்பூத் தலர்ந்த பிண்டிவன
மருங்கே வாயு மகிழ்ந்தளித்த
மைந்த னிராமன் றிருவடியின்
வனத்தார் மணக்கும் புயத்தனுமான்
அன்பூற் றெடுப்பக் குதித்தனைய
வணியே மணக்கும் புனல்வளஞ்சூழ்
அரிகை நகரான் பண்டிதர்சே
ரவையை நகரா னனுதினமும்.

வேறு.

மெய்க்கும் பொருளாம் பரம்பொருளை
விரும்பி யரசர் விழைந்துமனம்
வைக்கும் பொருளாங் கவிமாரி
வருஷித் தபிஷே கித்திறைதாட்
குய்க்கு மனப்பூ சனையியற்றி
யுவக்கும் புனிதன் புனல்வேலி
மொய்க்கு மறைப்பூ சுரர்குலத்து
முளைத்து வளரு மதியனையன்.

எல்லா வரசு முவந்தேத்தும்
இங்கி லாந்துக் கரசனெனும்
நல்லான் ஜார்ஜிங் கிரபிரத்த
நகரிற் றிருமா முடிபுனைந்து
பல்லா யிரமன் னவர்வணங்கப்
பவனி வருசீர் நாடகத்தாற்
சொல்லார்ந் தமதி யிலக்குமணா
சூரி தமையன் சுதனானோன்.

ஞானம் பெருக்கும் வேதாந்த
நயநா டகஞ்செய் பெரும்புனிதன்
தானம் பெருக்கும் புனல்வேலி
தழைக்க வுதித்துத் தரமிகுசன்
மானம் பெருக்கும் முத்துசுப்ப
மறையோன் பேரன் மற்றுமிசைக்
கானம் பெருக்கும் கதைகள்பல
கரதலாம லகம் போல.

வேறு.

கற்றோரு மற்றோருங் களிபடைத்து மதிபடைக்கக்
கான நூலோர்
உற்றோர்ந்து தெளிவடையக் கடவுளடி செவிவழிப்போந்
துளத்து லாவ
முற்றோர்ந்து புரிந்திலங்கு மாண்டிபட்டி ஸமஸ்தான
முதன்மைக் கீர்த்தி
பெற்றோங்குஞ் சங்கீத வித்வான்முத் தையனன்பு
பெறுமம் மான்சேய்.

முத்துசுப்ப பாரதியாம் முதற்பெயர்பெற் றிசைபரப்பு
முனிவர் கோமான்
பத்துருப்பெற் றருள்பெருமான் சோதரிசு பத்திரா
பரிணயத்தை
முத்தொடிரத் தினத்துயர்வும் முப்பழத்தி னின்சுவையு
முதிர வாய்ந்து
வித்தகர்க்கோர் பேருதவி யாவியற்றி யிதனைமிகு
விருப்ப மோடே.

செந்தமிழாங் கிலந்தேர்ந்து சித்தாந்த சைவநெறி
திகழ்ந்து ஞான
சுந்தரமா யருள்படைத்துத் தருமஜயக் கொடிபரப்புஞ்
சுகுணச் செல்வன்
இந்திரனு தியர்பரவுங் காஞ்சு காத்தானி
லினிது தோன்றிப்
புந்தியெனும் படியளவில் பொருடெரிந்து நிறைந்துவளர்
புந்தி யார்ந்தே.

நல்லபெருங் குடிவணிகர் நாயகமா யிசைபெருக்கி
நளின மாது
சொல்லணங்கு புவிவனிதை தொடருரநாத் தோனுடன்மெய்த்
துங்க மெய்தி

வில்லவனும் பாண்டியனுஞ் சோழனுமோ ருருவெடுத்த
மேன்மை போலத்
தொல்லுலகத் தரசாகித் துலங்குறுகன் னனைக்கொடையா
லிடைய னாக்கி.

வாணர்கட்குங் கல்விவிழை மாணவர்க்கு மிசைதெரிந்து
மகிழ்ந்து பாடும்
பாணர்கட்கும் மற்றுமுள பண்டிதர்க்கு மிரவலர்க்கும்
பரிவி னோடு
காணலுற்ற வுடன்மகிழ்ந்து காணநசை யாற்பிறர்பேர்
கருதா வண்ணம்
பேணலுற்ற பரிசளித்துப் பிரபுவெனும் பதங்கொடுக்கும்
பெருஞ்சீர் மன்னன்.

வளங்குலவு மாண்டிபட்டிச் சமஸ்தான மகிபதியாய்
மகிழ்பெத் தாச்சி
தளங்குலவு பேரரசன் றனக்குரிமை யாக்கியந்தத்
தரணி பாலன்
குளங்குலவு மொழிபுகன்று கொடுத்தபெரும் பொருளுதவி
கொண்டு கற்றோர்
உளங்குலவு களிபடைக்க வுயர்தருமச் சினிற்பதிப்பித்
தொளிபெற் றானே.



# முகவுரை



பூர்வீக புராண புண்ய இதிகாஸங்களி லொன்ருகிய, ஸ்ரீமகா பாரதத்தின் ஊடுசரித்திரங்கள் பலவற்றுள் இஃதொன்றும். அதாவது:—தர்ம, பீம, அர்ச்சுன, நகுல, ஸகதேவர்களாகிய பாண்டவர்களைவரும் பாஞ்சாலியுடன், துரியோதனுதி ஞாதிப்பகையினுற் றமது அஸ்திணபுரத்தாக்ஷியெல்லாம், அவர்கள்பால் விட்டுவிட்டுக் காண்டவப்பிரஸ்தமெனு மோர் பெருங்காட்டையடைந்து, அதில் தேவேந்திரனதுதவியால், தெய்வத்தச்சனுகிய விச்வகர்மாவை வரவழைத்து அவனுற் சகலவளங்களும்பொருந்திய, இந்திரப்பிரஸ்தமெனும் பெயருடன் அழகிய நகரமொன்றியற்றி, அதற்கரசாய் யுதிஷ்டிரர் முடிதரித்து, மற்று நால்வரும் இளவரசராயிருந்து ஆண்டுவருங்காலத்தில், முன்னெருகாரணத்தால் நாரதமுனிவரா லளிக்கப்பெற்றிருந்த சாஸனைத்திற்கிணங்க, ஒரு ஸம்வத்ஸரம்வரை நகரவாஸத்தைவிட்டு, பந்துதரிசனங்களற்று, பாதசாரியனுய்த் தீர்த்தாடனத்திற் செல்லும்படி அர்ச்சுனனுக்குச் சம்பவித்ததனுல், அவ்வாறு தீர்த்தயாத்திரை சென்றவனுன அர்ச்சுனன், உத்தர, பூர்வ, தக்ஷணங்களாகிய முத்திசைகளினுஞ் சென்று, ஆங்காங்கேயுள்ள புண்யதீர்த்தங்களாடி, க்ஷேத்ர தரிசனுதிகளை முடித்துக்கொண்டு, பச்சிமதிசைநோக்கித் துவாரகைக்குச் சமீப வனப்ரதேசத்தில் வந்துகொண்டிருக்கின்ற சமயத்தினின்றும், இந்நாடகம் ஆரம்பஞ் செய்யப்பெற்றிருக்கின்றதென்றறிக. சரித்திரகதி இந்நூலிற் புகுந்துபார்க்கின், விசேஷ ரஸங்களுடன் விஸ்தாரமாய் நன்கு விளங்கும். ஆயினும், அதன் முக்கியாம்சங்களின் ஸாரத்தை இங்ஙனம் சுருக்கி உரைக்கின்றேன். அதாவது:—துவாரகா நாயகராகிய பலராமகிருஷ்ணர்களின் சகோதரியாகிய சுபத்திராதேவியை, அவர்கள் அர்ச்சுனனுக்கு மணஞ்செய்துகொடுப்பதாய்ப் பூர்வத்தில் வாக்களித்திருந்தும்; கௌரவர் பக்கத்திற் கருத்துளராகிய பலராமர், தமது பிடிவாதகுணத்தாலதை மறுத்து, அத் துரியோதனனுக்கே கொடுக்கநிச்சயித்து, அவ்விதம் மணக்காரியமெத்தனித்துக் கொண்டிருப்பதும்; அஃது கிருஷ்ண

னுக்குச் சம்மதமில்லையாயினும், அவன் மஹா கோபிஷ்டராகிய பலராமர் தங் குணக்கேட்டினால், அவர்தங்கொள்கைக் கிணங்கினவன்போல் வெளிப்பட நடித்தும்; அந்தரங்கத்தில், அர்ச்சுனபக்ஷத்தி லபிப்பிராயம்வைத் தவ்விதம், அர்ச்சுனனுக்கே அவளைக் கல்யாணஞ்செய்விக்கவேண்டிய சூழ்ச்சிகளைச் சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடி கபடகிருத்தியத்தால் இரகஸியத்திற் சாதித்துவருவதும், மிகமிகச் சாதுரியமாயிருக்கும். ஆதிமுதலர்ச்சுனவாஞ்சைமிகுந்தவளாகிய சுபத்திரை, அதன் மன்மமறியாது, அத் துரியோதனவா விஷயத்தில் வெறுப்புற்றவளாய் மனவேதனைப்படுவதும்; அன்று முதல் சுபத்திராத்தியானங் குடிகொண்டவனாகிய அர்ச்சுனன் தனக்குரிய சுபத்திராவிவாகம், துரியோதனபக்ஷத்திற் றிரும்பியிருக்கின்ற விபரீதகாரியமாய்த் தெரிந்து, அடங்காத்துயர்கொண்டு தாங்கப்படுவதும், எத்தகைய கன்னெஞ்சினையும் இளகுவிக்குமென்பதிற் சந்தேகமின்று. இதனுள், அவ்வவ்வமயங்களிலும், கண்ணபிரானது எண்ணம்போற் காரியங்கள் யாருமறியப்படாத அவனது ரகசியச் சூட்சிகளால் நன்கமையப்பெறுவதும்; இவ் வுட்புலனறியாத அர்ச்சுனன், ஏதேதோ புலம்பிக் கடைசியிற் சந்யாசிவேடந்தரித்து, ரைவதகிரியிற் சார்ந்திருப்பதும், அதிகவாச்சர்யத்தைத்தருமென்பதில்லையின்று. அப்பால், சுபத்திராத் தியானபரனாய்த் தனக்குத்தானே ஒன்றுந்தோன்றா தெப்படியோ, பற்பல மகத்துவங்களோங்கப்பெற்றிருக்கின்ற வச் சந்யாசியைப் பலராமர், நிஜபக்தியுடன் துவாரகைக் கழைத்துவந்து, பிக்ஷை செய்விப்பதும்; அச் சந்யாசியைப்பற்றி, நிஷ்கபடியான பலராமனும், கபடநாடக சூத்திரதாரியான கண்ணனுந்தனித்திருந்து ஸம்பாஷித்துக்கொள்வதில், பலராமனது சுத்தக் கருத்தும், கண்ணனது கபடக்கருத்தும்; காலோசித ஸமயோசிதங்களாய் விளங்கிக்கொண்டிருக்கும். அப்பால், அச்சந்யாசி சுபத்திரையின் கன்யாமாடத்திலேயே வசித்திருப்பதும்; சுபத்திரை பக்தியுடன் கைங்கரியஞ் செய்திருப்பதும்; சுபத்திரையினெண்ணம் தன்னிடத்திற்றானென்பது பன்முறை தெரிந்திருந்தும்; அச் சந்யாசி அவளைக் கிரஹிப்பதற்குபாயந்தோன்றாது சிந்தைவருந்துவதும்; வெளிக்குப் பிரமஞ்ஞானிபோ னடித்துவருவதும்; வெகு விநோதமாயிருக்கும். அப்பால், அச் சந்யாசியின் மன்மம் இப்படியெனக் கிருஷ்ணனிடம்

ரகசியத்திற் றெரிந்தவளான உருக்மிணிதேவி வந்து, சந்யாசியின் குட்டு வெளிப்படுத்தி, மேற்செய்யவேண்டுமுபாய முணர்த்திச் செல்வது வெகு யுக்தமாயிருக்கும். அப்பால், பட்டணஜனங்களுடன், அரசர்கடலாடச் செல்வதும்; சன்யாசியும் சுபத்திரையுடன் தனி வழிச்சென்று, ரைவதகிரியைச் சார்வதும்; அங்கிடையில், அவ் விருவரும் வெகுவிநோதமாய்ச் சம்பாஷித்துக்கொண்டிருந்த சங்கதி களின் ஸாரத்தால், அர்ச்சுனனே சன்யாசிவேடத்துடனிருக்கின்றா னெனத் தோன்றினும், அச் சன்யாசிவேடத்தை நீக்கி அர்ச்சுன சொரூபத்தை வெளிப்படுத்திய அவளது ஸாமர்த்தியம் வியப்பினும் வியப்பே. ஆகவே, அவ்விடத்தவ்விருவரும், பாணிக் கிரஹணஞ்செய்து, ஆலிங்கனசுகத்தை அடைந்து கொண்டா ராயினும், இக் காரியமெலாம், அக் கண்ணனுடைய ரகசியமான கபடகிருத்தியத்தினல், நன்கமையப்பெற்றதென் றுணர்ந்துகொண்ட அவ்விருவரும், பலராமர் சன்னதிக்கே திரும்பவும் வருவதும், பலராமருடைய உள்ளக்கொதிப்பெல்லாம் கற்கமுனிவரின் உப தேசாமுதத்தாற் குளிர்ந்து, அவ்ருமதையங்கீகரித்து, தம்பதிகளை வாழ்த்தி வரிசைசெய்வதும்; ஆகிய இச்சரித்திரம், வாஸ்தவகதியைத் தழுவியே, விசேடமாய்ப் பேதப்படுத்தாமல், பாத்திர, ரூப, நடை யுடை பாவனைகளுடன், பிரத்தியக்ஷமாய், நவரஸங்களும் நன்குவிளங் கும்படி, என்னல் நாடகமாய்க் கற்பனைசெய்யப்பெற்றிருக்கின்றதென் றறிக. ஆனல், கருணை, பக்தி, சிருங்காரம், ஆகியரஸங்களே பிர தான்மாயிருக்கும். அன்றியும், தமிழ்நாட்டார் யாவருமெளிதிற் பொருள்கொள்ளுமாறு, இனியசெந்தமிழில், அரும்பதப்பிரயோகங் களின்றிச் சாதாரணமாயுலக வழக்கிற்கிணங்கிய தெளிவான வசன நடைகளும், அவ்வசனநடைக் கொப்பந்தமான அகவல், ஆசிரியப்பா, வெண்பா, கொச்சகம், கட்டளைக்கலித்துறை, கழிநெடில் முதலிய பாவினங்களுமாய மயப்பெற்றுளதேயாம். அன்றியும், இக்காலத்து நவீனர்களது கொள்கைக்கிணங்க, கீர்த்தனை, தரு, பதங்கள், முதலிய ஸங்கீத இசைப்பாடல்கள், அவ்வவர்களெட்டுக்களுக் கிசைந்து, யாவரும் படிக்க ரஞ்சனைப்படாதென்று கருதி, அத்தகைப்பாடல்க ளிதிற்பெரும்பாலும் சேர்க்கப்படவில்லை. ஆனலவசியமான சிற்சில இடத்தில் மட்டும், நாடகாங்கமாகச் சிற்சில பதங்கள் ஸாமான்யமா

யூடுலாவிவருவதும், "எவ்வெவ்விடங்கட் கெது வெது பொருந்தும், அவ்வவ்விடங்கட் கதுவது சிறப்பே," என்றபடி, இக்காலதேச சந்தர்ப்பங்களின் சோபைக்காக, இனிய தமிழ்ச்சொற்களினிடையிடையே, சிற்சிலவிடங்களில், வடமொழி யெழுத்துக்களும், வடமொழி யுச்சரிப்பும், உபயோகித்திருப்பதும் யுக்தமாகத்தானிருக்கும். நிற்க.

ஸ்ரீகிருஷ்ணபிரானுடைய லீலைகளமைந்துள்ள இப்புண்ணிய சரித்திரம், புராதனபுராண காவியங்களிற் சிறிது விளக்கப்பட்டிருப்பதைத் தவிர, இப்படி விரிவான நாடகரூபமாய் இதுகாறும் ஸம்ஸ்கிருதபாஷையிலும் வெளிவரக் காண்கவில்லை. ஆனால், உத்தர தேயத்தில், மஹாராட்டிரபாஷையில் வல்லுனராகிய பலவந்தரென்ற மஹாகவி ஒருவர் இருந்தனர். அவர் வசித்தது இன்ன வூரென்பதும், அவரது சரித்திரங்களித்தகையவென்பதும், அவரின்ன காலத்துள்ளவரென்பதும், தோன்றவில்லை. அம் மஹாராட்டிர கவீந்திரரால், மஹாராஷ்டிரபாஷையில் ஸங்கீத இசைப்பாடல்களாய், "ஸங்கீத ஸௌபத்ரா" வென்னும் பெயருடன், இச்சரித்திரம் வெளிப்பட்டிருப்பதாய், ஒருகாலத்தில், எனது தந்தைச்சோதரி மைந்தருளொருவரும், ஸத்கதாப்ரஸங்கஸபாரஞ்சிதரும், ஸங்கீதவித்வத் சிகாமணியுமாகிய, இவ் வரிகேசநல்லூர், பிரம்மஸ்ரீ லி. முத்தையா பாகவதரவர்கள் முகமாய்க் கேள்வியிற் றெரியவந்ததுமுதல், விண்ணமுதத்தினை, மண்ணுலகத்தொருவன் சொல்லக்கேட்கும்பொழுதே, அஃதெக்காலத்திலுங் கண்டறியப்படாததாயிருந்தும், உண்பதற்குரிய எல்லாவஸ்துக்களிலும் அஃது மேலான உருசியுள்ள வஸ்துவென்றுணர்வான்போலும், அத்தகையதால், மிக்கவும் அருமையுடையதாக இருக்குமெனும் நம்பிக்கையுடன், யானறியாத அம் மகாராட்டிரபாஷையினின்றும், அதன் மன்மத்தை யறியவாவலுற்றிருக்குந்தருணம்; மெய்யமுதத்தைக் கையிற்கொண்டு, ஒரு விண்ணவனெதிர்ப்பட்டாற்போல், அவ்வுத்தர தேயத்திலிருந்து, மற்றொருவர்தமர், அம்மஹாராட்டிரபாஷையிற் றேர்ச்சியுள்ளவராய், ஸ்ரீகிருஷ்ணபட்ஜி யெனுந்திருப்பெயருடையவராய், கையிற் சில புத்தகங்களுடன், அச்சங்கீத ஸௌபத்ராவெனும் புத்தகமுமொன்று கொண்டு தற்செயலாயிங்ஙனம் வரப்பெற்றது மகாபாக்கியமேயாம்.

அத்தகைய ஸ்ரீகிருஷ்ணபட்ஜியென்பவர், ஸங்கீதத்திலுஞ்சிறந்த ஞானஸ்தராதலின், செ-ழ முத்தையா பாகவதரவர்களுடன் நட்புற்றவராகி, அவ்விருவருமே, என்பால்மிக வன்பால்வந்தணுகி, அப்புத்தகமுந்தந்து, அதை முற்றுமொருங்கேபடித்து, அதனருமை பெருமைகளை யெற்குப்புகட்டிவைத்ததுந்தவிர, மஹாராஸிகோத்தமர்களாகிய அவ்விருவரும், களிப்புடனிவ்வுரை யளித்தனரெனக்கே. என்னெனில்? "நன்புடையீர்!! இப்புத்தகத்தினருமை, இத்தமிழுலகறியும் வண்ணம், மிகவுங்கல்வித்திறம்வாய்ந்து, பரம்பரையாய் அக்கலைமகளின் றிருவருட்பெற்றவரும், இதற்குமுன் பற்பல சின்னூல்களுடன், தமிழ்ச்சானகீபரிணய நாடகப்பிரபந்தமுமியற்றி உலகிற்புகழ்பெற்றவரும், ஆகிய நுமது செந்தமிழ்த்திருவாக்கினால், இதையும் நாடகமாயியற்றி நலம்பெறுவீர்," என்றே.

இயற்கையிலேயே, அந்நூலின் ரஸாமுதம்பருகி ஆனந்தக்கடலிலாழ்ந்திருந்த என் மனதிற்கச்சமயம் நிச்சயமாய்த் தோன்றியதெவ்விதமெனின்? "இச்சரித்திரத்திற்கு, ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனரிருவரும் முக்கியஸ்தராதலின், அவ்விருவருமே இவ்விருவரினுருவினராய், என் மீதன்புடன் வந்திவ்வாறருளினர்," என்றே. ஆகவே, அதிமேதாவிகளாகிய அவ்விருவரின் மேம்படு வேண்டுகோள் எனது ஊக்கத்தை விளக்கஞ்செய்யவும், தெவிட்டாத்தெள்ளமுதொப்ப, ஸ்ரீகிருஷ்ணலீலாமுதம் ஸதா ஊற்றெடுத்தாறாய்ப்பெருகிக்கொண்டிருக்கும் இத்திவ்யசரித்திரம், எல்லாப்புண்ணியபலனுமளிக்குமெனும் பேரவாவெனதுள்ளத்திருந்துற்சாகத்தைச் செய்யவும், திலமாற்றமுங், கலநாற்றமுமிலனுகியயான், அக்கண்ணபிரானது திருவருட்டுணைகொண்டு, அந்நூன் முறைவழாது, சொற்சுவை, பொருட்சுவையுடன், மேற்சொல்லியபடி நவரஸங்களும் நன்குவிளங்க, நாடகமாயியற்றியுள்ளேன். இந்நூல், ஆரம்பமுதல் முடிவுவரையும் சுபத்திரையின் கல்யாணமேயமைந்திருத்தலால், சுபத்திராபரிணயமெனுந்திருப்பெயருடன், ஐந்தங்கங்களோடு கூடித்திகழ்கின்றதென்றறிக.

இந்நூல், படிப்பவர் கேட்பவர்க்கு, உள்ளங்குளிர்வித் துடம்பெல்லாம் ஜிலுஜிலிர்க்க, இன்பரஸவமுதூட்டி எப்பொழுதும் ஒப்பற்ற நற்பயனே எய்துவிக்குமென்பதிற் சந்தேகமின்று.

---





# சுபத்திராபரிணய நாடகம்.



## பாயிரம்.

### கடவுள் வாழ்த்து.

வெண்பா.

மன்னகில காரணமாய் வாழுயிர்கட் குள்ளுணர்வாய்த்
துன்னுகின்ற மங்களசொ ரூபமாய்—என்னுளத்தே
தானாய் நிறைந்தொளிர்மெய்ச் சச்சிதா னந்தத்தை
நானா யுளம்பதித்தேன் நன்கு.

### விநாயகர் வணக்கம்.

வெண்பா.

எத்தனைவல் விக்கினங்க ளெய்திடினு மக்கணத்தே
அத்தனையு மாள அறவொழித்துச்—சித்திதர
வல்ல கணபதியை வாழ்த்தினே னெற்கவனே
நல்ல பெருந்துணையா னான்.

### கலைமகள் வணக்கம்.

வெண்பா.

நல்வித்து வான்கணடு நாயகமா யென்னைவைத்த
நல்வித் துரைச்சி கழல்பணிந்தேன்—செல்வியெற்குச்
செந்தமிழ்ப்ர பந்தங்கள் செப்புங்க வித்திறமுந்
தந்தருள்வை நல்வாக்குந் தான்.

## கண்ணபிரான்றுதி.

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

பத்தபரி பாலனமு நத்துமவர் காரியங்கள்
பழுதா றாது
மெத்தவிப ரீதங்கண் மேவிடினு மவைநீக்கி
விருப்பம் யாவுஞ்
சித்திபெற வியற்றலுந்தம் விரதமெனக் கொண்டருள்வோன் றீம்பால் வெண்ணெய்
வைத்தாருசி யறிந்துண்ட வாயன்மா மாயனடி
வணங்கி வாழ்வாம்.

## அவையடக்கம்.

எண்சீர்க்கழி நெடில் விருத்தம்.

அரியநவ ரத்தினப்பொற் பணிபூண் டாலும்
அக்கரிய மணிப்பாசி யதுவும் பூண்பார்
பொருளதனி லாயிரத்தைப் பேணு வார்கள்
புகலரைகா லரைக்காலும் போற்று வாரால்
வரகவிக ளியற்றியநூல் பலவுங் கேட்போர்
மைந்தனரிச் சுவடிபடிப் பதுவுங் கேட்டுப்
பெரிதுவப்ப ரவ்வுறுதி கொண்டு யானும்
பீடுடைய புலவர்முனம் பிதற்ற லானேன்.

## மங்களவாழ்த்து.

விருத்தம்.

மங்க ளம்ஜய மங்களம் வாய்ந்தெழின்
மஞ்சு பத்திரை மங்கையின் மாமணந்
தங்கு பைந்தமிழ் நாடகஞ் சாற்றிடச்
சந்த தந்தமி யேன்பணி சார்ந்தொளி
ரைங்க ரத்தனு மாறுமு கத்தனும்
அம்பு யத்தய னும்மறை தேவியுந்
திங்கள் வேணிய னும்மலைச் செல்வியுஞ்
செங்கண் மாலுந் திருவும் புரக்கவே.

# 1-வது அங்கம்.

---

## நாந்தியந்தே சூத்திரதாரः.

சூத்திரதாரன். (ஸபையைநோக்கி) (கையஞ்சலித்துக்கொண்டு)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

ஒளிகொண்மணித் திரைகடல்சூ ழுலகளித்த பெருமாட்டி
உமாப்பி ராட்டி
களிபெறுநற் சுபங்களெலா முதவுகின்ற கல்யாணி
ககன மோங்கும்
குளிரிமய மலைச்சார்பிற் கூர்தவஞ்செய் திடவுமதைக்
குறித்து மெச்சி
அளியொடுமுன் வந்தாண்ட கைலைவளர் பரஞ்சோதி
அருள்காப் பாமே.

ஷை விருத்தம்.

ஆவலுடன் மணம்புரிய வந்தவய னரிமுதல்வ
ரான வெல்லாத்
தேவரையு மவமதித்துச் சிவனைவர னுய்க்குறித்த
செய்கை தேர்ந்து
மூவுலக சுந்தரியை மலையரச னீந்தருள
முறுவல் பூத்தப்
பாவைதனை மகிழ்ந்துமன்றற் புரிந்தாண்ட பசுபதியின்
பதங்காப் பாமே.

(வசனம்.) ஆரம்பத்தில் மங்களப்பிராப்தியின்பொருட்டு ஸர்வமங்கள தாயகரான உமாமஹேச்வரரைப் பிரார்த்தித்துக்கொண்டேன். நன்று! நன்று!

இப்பொழுது, ஸ்ரீமத் மஹாவித்வத்சிகாமணிகளா லலங்கரிக்கப் பெற்றுள்ள இச் சபாமண்டபத்தின்கண், எமது குலாசாரமான

அபிநயவித்தையை பரதாசாரிய மதானுசாரத்துடன் நடித்துப் பிரகாசஞ்செய்வித் தான்மாவைப் பாவனஞ்செய்யப்போகின்றனன்.

(——) [திரையை நோக்கி]

ஆ! ஆ!! என்கொல்? இன்றிதுகாறும் எம் ஆசைநாயகி இங்ஙனம் வரக்காணவில்லை.

[திரும்ப நோக்கி]

ஓ! ஓ!! இதோ என் பக்கத்திலேயே அடுத்து வருகின்றனள்போலும். ஆனால், அண்மையில் நிற்கின்ற என்னையும் பாராமல், என்னென்னவோ தனக்குத்தானே முணுமுணுத்துப் புலம்பிக்கொண்டு வருகின்றவளாய்த் தென்படுகின்றனள். அஃதென்னென்று கவனிக்கின்றேன்.

[எனச் செவிசாய்க்கின்றனன்]

(அப்பால், நடி பிரவேசிக்கின்றனள்.)

நடி. வெண்பா.

பெண்ணுவா ரெல்லாரும் பெற்றார் தமக்கிரண்டு
கண்ணுவா ரென்றே கழறலாம்—மண்ணிற்
சிறந்தகுடி வாழ்க்கைநலஞ் சேர்ந்தொழுகப் பெற்றே
அறந்திகழ வோங்குமத னால்.

(வசனம்) உலகத்தில் மனிதர்கட்கெல்லாம் கண்களென்பவை எவ்வளவு அருமையுடையனவாக இருக்கின்றனவோ? அவை போல், பெண்களும் அத்தகை அருமையுடையாரகவல்லவா ஏற்படுகின்றது. ஸரி. ஸரி. கண்கள் எப்பொழுதும், இமைகளின் பாதுகாப்பிற்குட்பட்டனபோற், பெண்களும்;

வெண்பா.

தந்தைக்கீழ்ச் செல்வியராய்த் தக்ககொழு னர்க்குளராய்
மைந்தர்க்கு ளாங்காவல் வாழ்நாளே—இந்தப்
படிபலகி பந்தனைக்குட் பட்டதன்றோ? நல்ல
குடிவளர்கற் புள்ளார்கட் கு.

(வசனம்.) ஆகவே, எப்பொழுதும் பிறர்காப்பன்றித் தங்களைத்தாமே இரக்ஷித்துக்கொள்ளத் தகுதியற்றவரும், சிறையகப்பட்ட கைதியைப்போற் பற்பல நிபந்தனைக்குட்பட்டு, ஆயுள் நாளள வுங் கடுகளவேனுஞ் சுதந்தரமற்றவருமாதலின்; எக்காரணத்தி னலாவது அவைகளினின்றுஞ் சற்றுவழுவுறின், அதனலவர் கள் அளவில்லாத்துன்பத்திற் காளாவதன்றியும், தம்மைப்பெற் றவர்க்கும் அடங்காத்துயரத்திற் காஸ்பதமுமாகின்றனர்.

ஆதலின், "மண்ணய்ப்பிறந்தாலும், உலகிற்
பெண்ணய்ப்பிறக்கலாகாதென்பர்."

ஹ! ஹ! ஹ! கஷ்டம், கஷ்டம். அத்தகைப் பெண்களைப் பெற்றவர்க் கெப்பொழுதுமே, அதைப்பற்றியகவலை ஒன்றுமற் றென்றாய்ப் பெருகிவளராநிற்குமென்பது வாஸ்தவந்தான். எல் லாவற்றினும் பெண்கட்கு வாழ்க்கைத்துணைநலம் நன்கமையப் பெறுவது முக்கியமாகின்றது. அதைப்பற்றியகவலையோ ஒழிந்தபாடில்லை. ஏனெனனமன்றோ?

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

பெண்மகவைப் பெற்றூர்க்குப் பெருங்கவலை யப்பொழுதே
பிறந்த தாகும்
கண்ணிமைபோற் காக்கவல்ல வரனமைக்க வெத்தனையோ
கருதல் வேண்டும்
ஒண்பெறுநற் குலம்வேண்டுங் கல்விநிறை ஞம்பத்தோ
டொழுக்கம் வேண்டும்
திண்பருவ வயதாண்மைத் தீர்க்காயுள் பிணியில்லாச்
சிறப்பும் வேண்டும்.

ஷை விருத்தம்.

வைத்தமனத் தன்புடையான் வரனக வேண்டுமுயர்
மாமன் மாமி
சித்தமதிற் றன்பெற்ற மகளெனுமந் நினைவுறுநற்
சினேகம் வேண்டும்

ஒத்தசகி யெனாத்தி நலம்வேண்டும் மகளுமவர்க்
குள்ள டங்கி
உத்தமநற் குணவதியா யித்தனையும் பொருந்திலன்றோ
உசித மாகும்.

(வசனம்) ஆக இப்படியேஇன்னும் பற்பலவிதமான பெருங்கவலைகட் காஸ்பதமாகுமப் பெண்மக்கட்பேறு. அத்தகைய கவலை இராப் பகலாயிடைவிடாதென் மனதைக்கன்றச் செய்கின்றது.

சூத்ர. (கிட்டவணுகி) அடீ! நம் கன்னிகாமணியின் கல்யாண விஷயமாய்ச்சும்மா கவலைப்பட்டுக்கொண்டிருப்பதே உனது வேலையாக வல்லவாயிருக்கின்றது. அதைப்பற்றி யாம் கவலையடைவதி லாவதொன்றில்லை, யென்றடிக்கடி யான்சொல்லினும், அஃது நின்காதிலேறவில்லைப்போலும். அடி பேதாய்! கேள்.

இவளுக் கிவன்பதி யென்றே யொருத்தனை யெண்ணிமுன்பே
அவனிக்கு ளீச னமைத்திருப் பானதி லையமின்றே
கவனிக்கும் போதவன் கட்டளை மீறிக் கடப்பதுண்டோ
சிவனைக் கருத்தி னினைத்தே சும்மாவிரு தேமொழியே!

நடி. ஸரி. ஸரி. தினந்தினம் உங்கட்கு வேதாந்தம் பேசுவதே வழக்கம். இதனாலென்னாகும்?

கட்டளைக்கலித்துறை.

பேசுங் கிளிநடைச் சித்திர மானநம் பெண்மணிக்கு
வீசுங் கதிரெழின் மங்கைப் பருவமு மேவியதால்
வாசங் கமழ்குழற் கோர்வரன் றேடி மணமியற்ற
நேசங் கருத்தில் வருமோ உமக்கந் நினைப்பில்லையே.

சூத்ர. அடீ! நீ ஒருத்தி நினைத்துக்கொண்டிருப்பது போதாதா? யானுங் கவலைப்பட்டுக்கொண்டிருக்கல் வேண்டுமோ? அடி பேதாய்! கேள்.

வெண்பா.

எல்லாம் நடத்துகின்ற ஈச னிதைநடத்த
வல்லானல் லனோ மடநல்லாய்!—சொல்லாய்
தனக்குவமை யில்லாதான் றன்கடிப்பிக் கின்றான்
எனக்கவலை விட்டே இரு.

நடி. ஆ! ஆ!! இப்படிச்சொல்லி முடித்துவிட்டால், எப்படிக் கவலை நீங்கும்? எல்லாம் ஈச்வரச்செயலால் நடப்பதாயினும், நம் முயற்சியும் வேண்டாமா?

சூத்ர. ஆனல், அவ்விஷயத்தில் முயற்சி செய்யாமலிருப்பதாகத் தான் நினைத்துக்கொண்டிருக்கின்றனையோ? கேள். உன் கவலை நீங்கும்பொருட்டுக் கன்னிகைக்குத் தக்கவரனைத் தீர்மானித்திருக்கின்றேனென்றறிந்துகொள். அவனோ!!

கட்டளைக்கலித்துறை.

உயர்மா மரபின னுத்தம நற்குண னேங்குசெல்வன்
நயமாங் கலைக ளனியாவுங் கற்றிடு நல்லயூகன்
மயினேருஞ் சாயல்நம் மங்கை யெனும்மாதி மாதினுக்கோர்
ஜெயகாமன் போன்றனன் மாப்பிளை மிக்கச் சிறந்தவனே.

நடி. (ஆனந்தத்துடன்) ஆனல்; சரி, சரி, மெத்தசந்தோஷம். தற் காலங் கவலை நீங்கிற்று. ஆனல், மாப்பிளையென்றால், அவர்க் கெந்த ஊர்? எக்குலத்தார்? அவர்க்குத் தந்தைதாயருண்டோ? சோபனப்பண மெவ்வளவு?

சூத்ர. பேஷ், பேஷ். நல்ல கேள்விதான். அடீ! அதைப்பற்றி உனக் கதிகமாய்ச் சொல்லவேண்டியதில்லை. ஏனெனில்? உனக்கும் நன்றாய்த் தெரிந்த இடம். ஆகையினாற்றான்.

நடி. அஃதெதுவோ?

சூத்ர. முன்னரே யாம் உத்தேசித்திருந்தபடி இந்தத்துவாரகாபுரியில் நம் சகோதரி மகனை சந்திரகாந்தனைத்தான் தீர்மானித்திருக் கின்றேன்; அறிந்தனையா?

நடி. அங்ஙனமாயின், அது மிக்கநன்றே! பானுஞ்சினியும் போதும் பொருந்துமே.

சூத்ர. ஸரி. ஸரி. அடீ! சுகுணசுந்தரி!!
நன்று. நன்று. நம் கன்னிகாமணியின் கல்யாணவார்த்தை கழறத்தானிங்குவந்த காரியமோ? அதற்கிதுதானிடமோ? அதனைக் கேட்கத்தானிச்சபையோர்களும் வந்து நிறைந்திருக்கின்றார்களோ? அன்றன்று; நம் நாடகம் பார்க்கவல்லவோ வந்திருக்கின்றனர்?

நடி. ஆம் ஆம். ஆனால், எந்தநாடகம் நடத்த எண்ணுகின்றீர்கள்?

சூத்ர. இச்சபைக்கு இரஞ்சிதமாகுவதெதுவோ, அஃதேயாம். இச்சபையோ; பார்!

வெண்பா.

பல்லா யிரங்கலையும் பஞ்ச விலக்கணமுந்
தொல்லார் பரதமத சூக்குமமும்—எல்லாமுங்
கற்றுணர்ந்த முத்தமிழ்க்க விப்புலவர் சங்கநிறைப்
பற்றிலங்கு கின்றதிச்ச பை.

(வசனம்) அன்றியும், இச்சபையோர்கள் காளிதாஸர் முதலிய மஹாமஹா வரகவிவரரால் கற்பனைசெய்யப்பெற்றுள்ள பற்பல திவ்ய நாடகாமுதங்களை அடிக்கடியருந்தி அதிகத் திகட்டுதலடைந்துள்ளார்களாயினும், அத் திகட்டுதலை மாற்றித் திரும்பவும் அவர்களானந்தத்துட னுட்கொள்ளுமாறு, அதிகரஸிசாதுர்யமாயமைப்பெற் றருமைவாய்ந்தது தமிழ்ச் சுபத்திராபரிணயமல்லாது மற் றெதுதானுளது? அதுதான் ஸரி. அதுதான் ஸரி. அதையே நடத்தல் வேண்டும்.

நடி. ஆ! ஆ!! பேஷ். பேஷ்.
நம் முத்துசுப்பகவிவரரா லியற்றப்பெற்ற தமிழ்ச் சுபத்திராபரிணயந்தானே! மிகவும் நன்று, நன்று.

சூத்ர. ஆம். ஆம். அஃதேயாம். அக் கவீந்திரரின் சரித்திரத்தை இங்ஙனஞ் சற்று விளக்குவாம்.

## அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

சீராருந் தமிழ்கமழுந் தென்பாண்டி தேயத்திற்
சிறப்புற் றோங்கும்
பேராரும் புனல்வேலிப் பூர்வீக வளம்பதியாம்
பெருமை வாய்ந்தோன்
நீராரும் பொருனைநதித் தீரமதிற் கன்னடியர்
நீள்கா லோங்கும்
ஏராரும் நிலஞ்சூழ்பொன் அரிகேச நகரின்புற்
றினிது வாழ்வோன்

## ஷை விருத்தம்

பவிருட்பட் டுழல்பவர்க்குப் பானுவென வேதாந்தப
பதமளித்த
தவமறையோன் புனல்வேலி முத்துச்சுப் பையமுனி
தனயன் மைந்தன்
சுவமுறுநல் லாரிய மஹாகவியா மிலக்குமண
சூரி யென்னப்
புவனமதிற் புகழ்படைத்த உரவோன்றன் முதல்வராருள்
புதல்வ னானேன்.

## ஷை விருத்தம்.

முந்தவட மொழியிலுள ஜானகீ பரிணயத்தை
முற்று மாய்ந்து
செந்தமிழின் மொழிபெயர்த்து நவரஸமும் வழுவாது
திகழத் தேன்போற்
பைந்தமிழ்நா டகமுரைத்தா னதையச்சிற் பதித்துலகம்
பரவச் செய்தோன்
அந்தணர்கள் குலதிலகன் முத்துச்சுப் பையனெனும்
அபிதா னத்தோன்.

### ஷை விருத்தம்.

ஊற்றிருந்த கருணைரஸ மருள்வெளமாய்ப் பெருகவுள
முருக வின்பக்
காற்றுலவப் பாப்பதிகம் பலபுகன்றூன் மதுரரஸங்
கமழுந் திவ்யப்
பாற்றிரட்டுப் பாலெனநற் பதஸாஹித் யங்களுமன்
பானு ரைத்தான்
சாற்றிடுமம் முத்துச்சுப் பையனெனுங் கவிசக்ர
வர்த்தி தானே.

### ஷை விருத்தம்.

பலவந்த கவிவார்முன் அரியமஹா ராட்டிரநற்
பாடை தன்னிற்
சொலவந்த ஸங்கீத ஸௌபத்ரா வெனுநூற்சொற்
றமிழார்ந் தோங்கும்
உலகந்தச் சுவையறியச் சுபத்திரா பரிணயப்பேர்
உவந்தளித் தெந்
நலமுந்தந் தருடமிழ்நா டகமுரைத்தான் முத்துசுப்ப
நாவ லோனே.

(வசனம்) அத்தகைய முத்துசுப்ப கவீந்திரா வியற்றப்பெற்றதான தமிழ்ச் சுபத்திராபரிணயத்தையே பாத்திர, ரூப, நடை, உடை, பாவனைகளோடு பிரத்தியக்ஷமாகவே, நடத்திக் காண்பித்துச் சபையோர்களைச் சந்தோஷிக்கச்செய்யவேண்டும். அதற்குரிய பாத்ரங்கள்முதலிய ஸம்விதானங்களோடு தயாராகவேண்டும்.

நடி. நன்று நன்று. அங்ஙனமேயாகட்டும். இதோ ஸன்னத்தமாகவேயிருக்கின்றேன்.

சூத்ர. நிரம்பஸரி. நிரம்பஸரி. ஹா! பிராணநாயகி!!!
இஃது அதிமனோகரமான வசந்தகாலமாகையால், இதன் சிறப்பை உள்ளவாறுள்ளபடி புகழ்ந்து சற்று கானஞ்செய்யக் கடவாய்.

நடி. ஆ! நன்று. நன்று.

(கானஞ் செய்கின்றனள்.)

**இராகம். ஸௌராஷ்டிரம். ரூபக தாளம்.**

**(பல்லவி)**

இந்தவஸந்த னுலாவெழு காக்ஷியை
என்னென் றியம்பு வனே.

**(அனுபல்லவி.)**

சுந்தரமாகிய இந்தவுலகெங்குஞ்
சோலைபொருந்துவை சாகத்துடன்றங்குப்
துளிர் துளிர்த்திட லால்மரங்களும்
பளபளப் புட னேவிளங்கிடும். (இந்த)

**(சரணங்கள்.)**

மல்லுலவும் பொழின் மாந்தளிர் தின்றுவ
னக்குயில் பாடிடுங் கானமும் ஜாதி
மல்லிகை முல்லை யிருவாக்ஷி பிச்சி
மலர்ந்தில கின்றஉத் யானமும்
குல்லென்றளி இனச் சத்தவிதானமும்
குலவுமந்தா நிலம் நிலவு நிதானமும்
புல்லியதவ வேடர் நல்யோகத் யானமும்
போகத் திவிச்சை பொருந்திடும் நானமும்
புனுகு மத்தர் பனீர் சவாதுமே
புனையு நித்தம் விலாஸமாதுமே
புகழு மிப்படி லைடாவங் களும்
மிகவுமற்புத மாய் நலங்கொளும் (இந்த)

தொன்னக ரெங்கணும் நன்னய மாகத்
துளங்கிடச் செய்யலங் காரமும் ஜோதி
மின்னனையா ரொடெவ் வண்ணப்புருடர்கள்
மேடையிற் சேருஞ்சிங் காரமும்
பன்னெடு வீதியெ லாமார பாரமும்
பந்தர்வி தானஸம் பந்த்யோப சாரமும்
மன்னுமங்கள வேள்வி மந்திர ஸாரமும்
மாப்பிள்ளைப்பவனிகள்வருமொய்யாரமும்

வாத்தி யங்கள் முழங்க யாவரும்
நேர்த்தி யென்று வழங்கவே வரும்
மகிழ்வு றப்பல மாவளங் களும்
சகமதிற் பொலி வாய்நலங் கொளும் (இந்த)

ஆத்ர. ஸபாஸ். ஸபாஸ்.

அடி! கோகிலவாணீ!! அற்புதஸங்கீதாணந்தகரீ!! நின்கான விசேடங்களிக்கத்தக்கதே. அதிலும், இவ்வசந்தகால வர்ணனைகள் அதிக மனோற்சாகத்தைத்தருகின்றன. அன்றியும், தற்காலம் நம் துவாரகாபுரியில் இராஜகிரஹத்தில் நடக்கின்ற பெரிதான விவாஹோற்சவத்தின் விமரிசையையொத்திருக்கின்றன. ஏனெனினன்றோ? ஸ்ரீகிருஷ்ணஸோதரியான சுபத்திராதேவியென்னும் பிராப்தியானகன்னிகாமணியை, அஸ்தினபுரத்தரசனாகிய அவ்வணங்காமுடிமன்னனுக்கு மாமணஞ்செய்வதாய்ப் பலராமரால் நிச்சயிக்கப்பட்டு, ஸர்வயத்தினங்களும் நடந்துகொண்டிருக்கின்றனவல்லவா?

(——) (திரைக்குள்)

என்ன? என்ன? என்ன ஸமாசாரமிது?

(விருத்தம்.)

ஆரடாமூர்க்காயிந்த அர்ச்சுனக்காளைக்கென்று
சீரியல்மொழிசெப்பாமற்றீமதிக்குருடனீன்ற
பாரியவகீர்த்திமிக்கப்படர்சுயோதனனுக்கென்று
காரியமில்லாவார்த்தைகழறியதணிவிதென்னே!

ஆத்ர. ஆ! ஆ!! தீர்த்தாடனத்திற் சென்றிருப்பதாய்க் கேள்விப்பட்டிருந்த அவ்வர்ச்சுனராஜனே அவ்வழிக்கொண்டே இந்தத் துவாரகைக்குச்சமீபமாய் வந்துவிட்டாற்போற்றெரிகின்றது. யான் சொல்லிய வார்த்தைகள் காதிற்கேட்டு, ஏதோ கோபிக்கின்றவர்போற்காணப்படுகின்றனர். ஆகையால், யாமிருவருமிவ்விடத்தைவிட்டுச் செல்வோம்.

(எனச்சென்றனர்.)

(அப்பால், தீர்த்தாடன வேடத்துடன் அர்ச்சுனன் பிரவேசிக்கின்றனன்.)
(பிரவேசித்து) " ஆரடா மூர்க்கா," (என்றசெய்யுள் திரும்பவும் படிக்கின்றனன்.)

அர்ச்சுனன். (தனியாய், திகைப்புடன்)

விருத்தம்.

சீர்த்தியா மரசைவிட்டுத் தீர்த்தயாத் திரையிற்சென்று
பூர்த்தியா யாறுமாதம் இன்னமும் பொருந்திற்றில்லை
ஆர்த்திடு ஜனங்கள் வாயா லதிக வெப்பங்களான
வார்த்தைக ளிவ்வாறாக வழங்கிடக்கேட்கின் றேமால்.

(வசனம்) ஆ! ஆ! என்ன? என்ன விபரீதமாயிருக்கின்றது?

ஆறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

அந்தோ!என் றனக்குரிய பாகமதை அந்தசுதன்
அவனோ கொள்வான்
அந்தோ!தே வகியம்மை யருண்மைந்த னவன்மொழிக்கு
மழிவுண் டாமோ?
அந்தோ!நன் மாமணியைப் பலராமன் மந்திகரத்
தளிப்பான் கொல்லோ?
அந்தோ!என் னுளநடுங்க விம்மொழிகேட் டனன்மிக்க
வாச்சர் யந்தான்.

[சுபத்திரையை உத்தேசித்து]

(வசனம்.) ஹா!ஹா!ஹா! அந்தோ!ஹா ஆசைமனோஹரீ! சுபத்ரா! இதென்னடி விபரீதம்? உனது புத்தியுமிப்படிக் கெட்டுவிட்டதா? ஹா! ஹா! ஹ! அங்ஙனமாயின் நின்கதியும் தீதாகவல்லவோமுடியும்! ஆ! ஆ!

விருத்தம்.

மங்கையர்க் கரசியென்ன மதிசெய்தா யெனைவிடுத்துப்
பங்கமார் சயோதனனைப் பற்றிடத் தகுதி கொல்லோ?
கங்கைமா நதியுமந்தக் கடலல்லா றசிறுகூவத்திற்
சங்கமித் திடுவதுண்டோ? சடனென்பதறியாய் கொல்லோ?

(வசனம்.) ஹ! ஹ! ஹ!! கஷ்டம். கஷ்டம்.

## விருத்தம்.

பேதையுன் பெருமையிதோ, பெண்புத்தியாற் கெட்டாய்கொல்?
கேதுவாய்ச் சசிபோலன்றோ, களர்த்துநின் கதியுமாகும்
வேதங்கள் கடையர்சேரி மேவிடின் மேன்மையுண்டோ?
ஏதடிமயிலே யென்றன், ஆசையையிழந்த தென்னே.

(வசனம்.) அடீ! சுபத்திரா!! நீ என்மீததிக ஆசையுள்ளவள்போல் நடித்துக் கடைசியிலென்னைத்தள்ளிவிட்டு, அக்கண்ணிலான் காண்முளைக்கோ கட்டுப்படப்போகின்றனை? ஆ! ஆ! அப்படியா நின் கதியாயிற்று? ஹா! ஹா! ஹா! கஷ்டம். கஷ்டம். (தயவுடன்) ஆனால், அபலையாய்ப் பராதீனையாயிருக்கின்ற அவள் தானென் செய்வள்? அவள்மீது குற்றஞ்சொல்வதிலென்பயன்? அவள் தானாக அவ்விதம் அவன்மீது விருப்புற்றாளென்பதுறுதி. இருக்கட்டும்: ஏதேது? அவனை அவள் வரித்திருப்பாளா? அவளாக ஒருபொழுதும் அவனை நேசித்திருக்கமாட்டாள். ஏன்? முன்னரே யான் துவாரகைக்குச் சென்றிருந்தபொழுது, அவனையும் அவளது மனோதிடத்தையும், புத்தியின் நுட்பத்தையும், பார்த்திருக்கின்றேன். அவளென்னிடத்திற் பூர்ணமனதுடன் வசப்பட்டவளாகவேயிருந்தனள்.

## விருத்தம்.

கன்னிப்பருவத்தந்நாளிற் காணும்பொழுதே நாணமுடன் [மெலா
மின்னற்கொடிபோலொளிர்ந்தொளிந்து விளங்குமவடன்விருப்ப
மன்னத்திகழ்ந்த தென்னிடத்தே மாறுமனத்தள் வடிவழகி
என்னைத்தவிர்த்தம்மூடனிடத் தெவ்வாறாசை கொள்வாளோ ?

## விருத்தம்.

கண்டேன் துவாரகாபுரியிற் கன்னியவண் மாமதி கண்டு......
தண்டேன் றுளிக்குங்குமுதமெனச், சார்ந்தவென்முன்முகமலர்ந்து
கொண்டேசிறிதிலச்சையுடன், குளிர்புன்னகையுற்றொளிர்மணிபொற்
றிண்டோல்குறப்புரண்டொலிப்பச், சென்றுநடந்தாள் சீமாட்டி.

(வசனம்.) அத்தகையசுந்தரி அவ்வாசையையொழித்துச்சடனை அவனை எப்படி விரும்புவள்? அவளொருக்காலும் அப்படி விரும்பப்பட்டவளன்று. நிற்க. நிற்க.

அக் கண்ணபிரானுக்கும், அத்துரியோதனனை அவட்கு வரனாகச்செய்துவைக்க அபிப்பிராயமிருக்குமோ? சற்று யோசிக்கின்றான்.) சீ; சீ; அவன் அப்படிச்செய்ய ஒருக்காலுஞ்சம்மதிக்க மாட்டான். அவன் எப்படி என்னை வெறுப்பான்? அவன் எனக்குப் பிரதிகூலமுஞ்செய்வனா?

அவனோ!!

(எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

என்னையே பக்த வரனென வெண்ணி
இருத்தின னன்பெலா மென்பால்
என்னையே தனதா மின்னுயிர்ச் சகனாய்
எண்ணியெற் கிதமெலா மியற்றும்
என்னையே தானாய் உண்மையி னினைப்போன்
என்பொருட் டருளுமவ் விறைவன்
என்னையே வஞ்சித் திங்ஙனம் புரிய
இசைவனோ? இசைவனோ? இசையான்.

(ஷை விருத்தம்)

எனக்குறு நன்மை தனக்குறு நன்மை
என்றுயர் தன்றுய ரெனவே
நினைப்புறும் பெரியோன் என்னிமித் தத்தில்
நீளிடர் தனக்குநேர்ந் தாலும்
கனத்ததா யெண்ணான் வகித்தெனைக் காப்பான்
காரியக் கண்ணுறுங் காதான்
இனிப்புறு வசன னெதுகுல திலகன்
எப்படி எற்கிடர் இயற்றும்?

(வசனம்.) என்மீததிகநேயத்தையுடைய அக்கண்ணபிரான் என்விஷய மாய்விபரீதபுத்தியை ஒருக்காலும்வகிக்கானென்பது திண்ணம்.

(எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

பாண்டவர் சகாய னெனப்படி முழுதும்
பகர்ந்திடப் பரவுபே ரன்பு
பூண்டன னெனது சௌரிய மதனைப்
புவனங்கண் மூன்றிலும் விரித்தான்

வேண்டி யெவ்வொரு சமயமு மெனது
வேகவான் பரிதனைக் கரத்தாற்
றீண்டியே வருடித் தேய்த்துராட் சிப்போன்
றீமையெற் கியற்றுமோ? இயற்றான்.

(வசனம்.) ஹா! தேவா !! ஒவ்வொரு காரியத்திலுமெனக்கு ஸஹாயகராகத்தானிருக்கின்றீர். இந்தஅற்பகாரியத்தில், என்பிராரத்துவவினையின்வக்கிரமானது, இவ்விதமிருக்குமென்பதறிகிலேன். ஆனால், இதைநினைக்கும்பொழுது, எல்லாம் அந்தப்பலராமனுடைய செய்கையென்றே நினைக்கவேண்டியிருக்கின்றது. அதிற்சந்தேகமில்லை. ஹா! பலராமா!!

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

இரேவதி ரமணா! ஹேபல ராமா!
என்னதான் பிழைசெய்தே னென்மேற்
கோவமுற் றனையிக் கொடியதண் டனைகட்
குட்படுத் தினையென்ன கொடுமை
ஆவலுற் றிடுநம் பாந்தவக் கொடியும்
அழிந்ததோ? நின்மனக் கொள்கை
மேவு நம்பியின் றங்கையின் கருத்தை
விட்டுவே றானதென்? விந்தை!

(வசனம்.) (ஒருவித சமாதானபுத்தியுடன்) ஆ! ஆ! அடடா! என்னென்ன எண்ணமெல்லாம் உண்டாகின்றன? இதுவென்ன விந்தை? எவனோ ஒரு கூத்தாடிப்பயல் கூறிய வார்த்தையை நம்பியன்றோ இவ்வளவுமன ஆதங்கத்திற்குள்ளானோம்! அஃதுண்மையென நினைத்தேமாந்ததைத்தவிர, வேறின்று. சுபத்திராமணி நம்மைவிட்டொருபோதும், அத்துரியோதனனை வரிக்கவும்மாட்டாள். அக் கண்ணபிரான் எண்ணமும் எக்காலத்துமென்னை வெறுக்காது. அப்பலராமனும் அப்படித்துணியமாட்டான். ஆனலிவ்வார்த்தையானது நமக்குக் கோபத்தையும், விதனத்தையும் விளைவிக்கவேண்டுமென்றே கூறப்பட்டிருத்தல் வேண்டும். இருக்கட்டும். அவ்விஷயத்திலிப்போது, யாம் மனதைச்செலுத்தி விணாகப்புண்படுத்திக்கொள்ள வேண்டாம்.

நிற்க.' நிற்க. இப்போது சென்றநாட்போகக் குறைநின்றநாட்களுள், பாக்கியுள்ளதீர்த்தாடன க்ஷேத்திரதரிசனாதிஜோலிகளை முடித்துக்கொண்டு, சீக்கிரம் அண்ணை தன்மாந்தனருடைய ஸன்னிதானம் போய்ச்சேரல்வேண்டும்.

[என, உலாத்துகின்றனன்]

(——) [திரைக்குள் வீணாநாதங் கேட்கின்றது.]

அர்ச். அஹோவஹோ! குறைவற்ற ஹரிநாமபஜனத்துடன் கலந்த மனோக்கிய வீணாகானங்கேட்கின்றதால், பிரமசுதரான நாரத முனிவரின் ஆகமனம்போற்றோன்றுகின்றது. நன்று. நன்று. இச்சமயம் மஹத்தரிசனங்கிடைக்கின்றபடியால், யாம் நினைத்த காரியம் சித்தியாகுமென்பதற்கோர் சுபசூசகமாகின்றது.

[என்றெதிர் நோக்குகின்றனன்]

(அப்பால், வீணாகான விநோதரான நாரதமுனிவர் பிரவேசிக்கின்றனர்.)

நாரதர். (கானம்). இராகம் தனுசு. ஆதி தாளம்.

(பல்லவி.)

உந்தன் இருபதம் சிந்தையில் நினைப்பவர்க்
குண்டோ பவபந்தம.

(அநுபல்லவி.)

அந்திவண்ணனேசுர வந்திதபாதனே
அகிலமுந் தான்படைத் தாளும்விநோதனே (உந்)

(சரணங்கள்.)

வேதாவளருந்திப் பூதாமரைத்தண்டே
விண்ணவரைப்புரந்தாய் அசுரர்பகைவிண்டே
ராதாதரமது உண்டிடுங் களிவண்டே
ரமாரமணாஉன்னை நம்பிமெய்யன்பு கொண்டே (உந்)

மாதவ கோவிந்த ஸ்ரீதர முராஹரி
மைந்தன்ப்ரஹ்லாதனுக்காய் வந்திடும் நரஹரி
தீதில்லாதகுண தேவா ஹரிஹரி
திவ்யநின்நாம ஜெபமிதை யுச்சரித் (துந்தன்)

காதல்கூர் கோவியர் — மீதநிமோகா
காளிந்தி நதிதீர — லீலா வைபோகா
மூதுநான் மறைகளு — மாகிய தேகா
முந்துசுப்பகவிமேல் — வைத்திடுஞ் சிநேகா (உக்தன்)

அகோவகோ !!

வெண்பா.

எல்லாம் பரமசிவத் தின்வடிவே தோன்றிடுவ
தல்லாம லுண்மையின்மற் றொன்றுண்டோ?—இல்லையில்லை
மூடவுல கத்தவர்கள் முற்றிலுமீ தோராமற்
பாடடைந்தார் கேடடைந்தார் பார்.

எனங்ஙனமன்றோ ?

வெண்பா.

எங்கும் விளக்கிவைக்கு மெல்லோன்போல் யாவையுந்தன்
பொங்கொளியாற் றோற்றிவைக்கும் பூரணமே—தங்கமொன்றே
பல்பணிக ளாவனபோற் பாவனையால் காமரூபத்
தொல்புவனம் யாவுமாஞ் சொல்.

[எனப்படித்துக்கொண்டிருக்கின்றனர்.]

அர்ச். (பக்தி வணக்கத்துடன், எதிர்சென்று)

முனிச்சிரேஷ்டரே ! மத்திமபாண்டவனாகிய தனஞ்சயன் நமஸ்கரிக்கின்றனன்.

நாரதர். ஆ ! அர்ச்சுனா !! இச்சாபூர்த்தி எய்துக, எய்துக. அடா ! தனஞ்சயா !! ஏதோ நிர்நிமித்தமாய் நின் வரவு இங்ஙனம் லபித்தது. நிரம்ப சந்தோஷம். இருக்கட்டும். ஏகாங்கியாக இப்படிப்புறப்பட்ட விசேடமென்னையோ ?

அர்ச். ஓ ! நாரதப்பிரமமே !! எல்லாம் தேவரீர் அநுசாஸனத்தைச் சிரத்திற்றாங்கி அவ்விதம் நடந்துவருகின்றனன். இதோ !!

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

அருந்தவக் கொழுந்தே! அன்பர்தம் விருந்தே!
அருணிறை வானநா ரதரே!
இருந்தஓ ராண்டுங் கற்பனைப் படியே
தீர்த்தயாத் திரைசெலச் சிந்தை
பொருந்தினேன் புண்ய தீர்த்தங்க ளாடிப்
பூருவ தெக்கணுத் தரங்கள்
பரிந்தவ ணெங்கும் பரவியிப் போது
பச்சிமத் திவண்வரு கின்றேன்.

நாரத. ஆ! அப்படியா? அதற்கெம் முடைய அனுசாஸனமொன்ப
தென்னையோ? ஓ! ஓ!! ஸரி, ஸரி. ஞாபகம்வந்தது. பூர்வத்தில்;

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஒருத்தியை ஐவர் மணந்ததா லவர்க்கு
ளோர்நிபந் தனையிலா தொழியில்
வருத்துமென் றெண்ணி ஒவ்வொரு வருமோர்
வச்சரத் திரண்டுமா தமுமேல்
விரித்திடுந் தினங்கள் பனிரண்டு மாக
மேவுக அவடனை யென்றே
உரைத்தன மன்றோ அந்நிய மனத்தின்
ஒருவன்றன் முறையின்மற் றொருவன்.

(இதுவுமது) (அடி விருத்தம்.) (குளகம்)

இனிப்புறு மேகாந் தத்தினிற் பதியோ
டின்பமுற் றிருக்குமவ் வெல்லை
கனிச்சுவை வாயா டுருபதன் கனியைக்
காண்பனேற் பாதசா ரியனாய்த்
தனித்தவ னில்லந் துறந்துற வினைத்
தவிர்ந்துசம் வச்சரத் தளவாய்க்
கனத்தவிவ் வுலகிற் தீர்த்தயாத் திரைசெலக்
கடவனென் றறைந்தன மன்றோ.

(வசனம்.) சரி. சரி. அர்ச்சுனா!! அத்தகைய அபராதத்திற்குள்ளாக நேர்ந்ததோ? அஃதென்னை? அறையக்கடவாய்.

(அர்ச்சுனன்) அகவல்

செய்தி யாதெனத் தெரிந்திட வினவுந்
தெய்வநா ரதரே! செப்பிடக் கேண்மோ!
ஓங்கு மிந்திர ப்ரஸ்தத்தி லோர்நாள்
பாங்குடன் ராஜ்ய கார்பார் முடித்து
நள்ளிரா வேளை நான்றுயில் போது
கொள்ளை கொள்ளையெனக் கூக்குரற் கேட்டுத்
துள்ளி விழித்தனன் தோன்றல் தனஞ்சயா!
கள்வரா லெமது கபிலைக ளெல்லாங்
கவர்ந்திடப் பெற்றுக் கடக்கன் றதனாற்
றவிர்ந்ததா யினத்தைத் தாம்பினைத் தந்தோ!
கன்றின மிக்கக் கதறுதே மன்னு!!
இன்றதைக் காக்க வெழுந்தரு ளென்னப்
பதறின நெஞ்சினர் பானரைக் குஞ்சியர்
முதிர்மறை யந்தணர் முறையிட் டெய்தினர்.

நாரத. ஆ! ஆ! அர்ச்சுனா! நன்று. நன்று. மேல் என்ன நடந்தது?

அர்ச். கேட்கவேண்டும்.

அகவல்.

சிட்டரைத் தேற்றிச் சினத்துட னெழுந்து
துட்டரைக் காயுஞ் சூர்காண் டீப
மெடுத்திட வெண்ணியா யுதப்பே ராலய
மடுத்திடும் போதி லாங்கோர் பளிக்கறை
அதனிலே காந்தத் தமர்ந்தனள் தன்முப்
புதல்வரோ டந்தப் பூவைபாஞ் சாலி
கற்பினுக் கரசியைக் கண்ணுற நேர்ந்ததால்
விற்பிடித் துடனே மீண்டு மறையவர்
வெந்துய ராற்றினன் மீட்டினன் கோக்களை
அந்தணர் தம்மை அனுப்பினை னுடனே

தேவரீர் கற்பனை சிந்தையிற் றாண்டிடப்
பூவல யத்தினிற் புண்யதீர்த் தங்கள்
யாவுமே மூழ்கிஇச் சன்மபா வனமுற
மேவினன் இதுவே மெய்ம்முனி வரரே!

நாரத. சரி. சரி. நிரம்ப சந்தோஷம். நிரம்பசந்தோஷம். அர்ச்சுனா! பாண்டவர்களாகிய நீவிர், எம்முடைய சாஸனத்தில் மிகச் சிரத்தையுள்ளவர்களா யிருப்பதைப்பற்றி, அதிக வானந்தமடைந்தனம்.

அர்ச். அஃதெல்லாஞ்சரியே. தேவரீர்! அவசரமாய் இப்போழுதெங் கெழுந்தருளியது? அதை இச் சிறியேனுக்குத் திருவாய்மலர்ந்தருளல்வேண்டும்.

நாரத. ஆம். ஆம். ஸரி. ஸரி. அர்ச்சுனா!! நீ சிலகாலமாய்த் தீர்த்த யாத்திரையிற் சென்றிருந்ததால், இவண் உனதுமாதுலகிரஹத்தில், தற்காலம் நடக்கிற விசேடங்களொன்றும் நீ அறிந்திருக்க மாட்டாயல்லவா? அங்ஙனமாயின் கேட்கக்கடவாய்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

பலவளஞ்சேர் செழுந்துவரைப் பட்டணத்தில் வீரநர
பார்த்தா! நின்மா
துலகனியாஞ் சுபத்திரையைத் துரியோத னன்றனக்குச்
சுபஞ்சூட் டற்குக்
குலவிடுமா மூர்த்தமின்றும் யதுராஜ ரிருவருமே
கொண்டி யற்றும்
இலகுமவ்வி சேடமிகப் பெரிதாகு மதுபோலெங்
கெங்கு முண்டோ?

ஷை விருத்தம்.

மந்திரவே திகடிருத்தி மணமண்ட பங்கண்மிக
வரிசை யோங்கும்
இந்திரலோ கத்திணையாஞ் சகத்தவர்யா வருந்திரண்டங்
கெய்து கிற்பார்

அந்தணர்கு முரம்போஜ னாதிதக் கனைகள்பெற் றுகோ ஷிக்குங்
கந்தருவ நாட்டியமு னடக்கும் புதுமைகளுங் களிப்புண் டாக்கும்.

### விடி விருத்தம்.

மற்புயத்தா னைகள்சூழ மணிமௌலி வெயிலெறிப்ப மன்னரெல்லாம்
பொற்புறுமண் டபங்கணிறைந் தாடம்ப ரங்கண்மிகப் பொலிவுற் றோங்குஞ்
சொற்பொருநற் சமயங்க டொறுமிளையோன் செய்தொழிற்சா துரிய மாகும்
பற்பலவாத் தியமுழங்கு மவைகாணச் செல்கின்றேம் பார்த்தா! கேளாய்.

அர்ச். (துக்கநீராற் றெண்டை நத்தலிட்டுப் பெருமூச்சுடன்) ஹா! கஷ்டம். கஷ்டம். ஒருகாலத்திற் காதிற்கேட்கின்ற துக்கவார்த்தை யானது எப்பொழுதுமே பொய்த்துப்போகின்றதில்லை. அது நிச்சயந்தான். இவ் வனுபோகம் மேன்மேலும் ஜனங்கள் தெரிந்திருந்தும், திரும்பவும் அடையலாமென்ற ஆசையினலேமாந்துபோகின்றார்கள்.

நாரத. ஆ! ஆ!! என்ன? என்ன? அர்ச்சுனு!! துவாரகையில் நடக்கின்ற கல்யாண ஸமாசாரத்தைக்கேட்டுக் களிப்படைய வேண்டுவதைவிட்டுத் துக்கப்படக் காரணமென்னை? அதைத் தெரிவிக்கவேண்டும்.

அர்ச். அதனை யென்னென்றுரைப்பேன்!! அந்தோ! அந்தோ!!

### ஆசிரியவிருத்தம்.

திகழுமணி மாடமலி துவரைநக ரதனில்யான்
சிறுபிரா யத்தின் முன்னஞ்
சின்னாள் வயித்தனன் அந்நாளி லுடலாவி
சேர்வதென அவளும் நானும்

மிகவிழைவி னொடுநேச மாயினே மதுகண்டு
மேவுமுற வினர்க ளெல்லாம்
மெல்லிய லவட்கேற்ற கொழுநனிவ னென்றெனை
விளம்பி மாப்பிளை யென்பரால்
மகிழ்வினொடு பலராம க்ருஷ்ணர்க ளெனக்கந்த
மாதினை யளிப்ப தாக
வாக்குறுதி தந்தனர் அன்றுதொட் டவ்வாசை
மரமோங்கி என்ம னத்தே
புகழொடு வளர்ந்ததப் பலனுறுங் காலமிப்
போதுமுறி பட்ட தவராற்
பொன்றுத லடைந்ததென் னென்றுபுகல் வேன்முனிவர்
புங்கவ! நடுங்கு துளமே.

நாரத. என்ன ? என்ன ? அர்ச்சுனா !! சுபத்திரையை உனக்கென்று நிச்சயித்திருந்ததையோ, இப்பொழுது துரியோதனனுக்கு விவாகஞ்செய்ய எத்தனித்திருக்கின்றார்கள் ? அங்ஙனமாயின் ; கிருஷ்ணபலராமர்களின் நடபடிக்கைகள் மிகவுமநுசிதந்தான்.

அர்ச். ஆனால், நாரதரே !! அவளைத் துரியோதனனுக்கு நிச்சயஞ் செய்தது, அந்தக்கிருஷ்ணனுஞ் சம்மதித்ததுதானோ ?

நாரத. அடா, அர்ச்சுனா! அதையென்னென்று நினைக்கின்றது ? அந்தக் கண்ணனுடைய மனதை, இன்னபடியென் றறிகின்றவர் யாவர்? அஃதை என்னாலு மறிதலெளிதா ? அவனோ ! மஹா மாயாவி. அவன் கபடம் நீயோ அறிவாய். அர்ச்சுனா ! அவளை உனக்குத்தருவதா யாசைவார்த்தைசொல்லி, உன்னை ஏமாற்றி விட்டதாயறிந்துகொள்ளவேண்டியிருக்கின்றது. அந்தத் துரியோதனன், அதிகப்பணக்காரனாய், ஸார்வபௌமனாய், இருக்கிறானென்று மதித்துன்னை அவமதித்தன னென்றே, எண்ணுகின்றேன்.

அர்ச். பேஷ். பேஷ். நன்று. நன்று. சரி. சரி. தேவரீர் திருவுளம்பற்று வதெல்லாம் அனுபோகசித்தமாயிருக்கின்றன. அவ்விதம் அக் கண்ணபிரானுஞ் சம்மதியாமற்போனால், அக்காரியம் எப்படி

நடக்கும்? ஆகவே அவனுஞ் சம்பந்தித்துத்தா னிருக்கின்றா
னென்பதற்கையமில்லை. ஹா! ஹா!! ஹா!!! கஷ்டம். கஷ்டம்.
(ஆகாயத்திலிலக்குவைத்து) ஆ! ஆ! என் அருமை நண்பே! ஹா
கிருஷ்ணா! நீயுமிப்படி என்னை அவமதிப்பாயென் றெண்ணவே
யில்லை. அந்தோ! அந்தோ!

(அறுசீர்க்கழிநெடில் விருத்தம்)

விண்ணுறைத்த வண்ணத்தால் வேடங்கொண் டாடுவர்போல்
விளங்கு முன்றன்
எண்ணத்தை இப்படியென் றிதுகாறு மறிந்திலன்யான்
இன்று கண்டேன்
கண்ணுறைத்த வென்னிடத்துங் கபடத்தை யியற்றியெற்குக்
கணசோ கத்தின்
றிண்ணத்தை யளித்தனையுன் றனக்கென்ன பிழைசெய்தேன்
செங்கண் மாலே!

(ஷெடி விருத்தம்.)

அன்புளவன் போனடித்தா யாசைவார்த் தையும்படித்தாய்
அந்தோ! அந்தோ!
துன்பமிக முடிவிலளித் திச்சோக தண்டனையாற்
றுடிக்க வைத்தாய்
நின்பெரிய நட்பிதுவோ நீலமுகி லனைநம்பி
னேனை யிந்த
மன்புவியி லெங்களுமே பரிஹஸிக்கும் படிவிடுத்த
வன்மை யென்னே!

[எனப் பரிதபித்துப் பிரலாபிக்கின் றனன்.]

நாரத. ஹா! ஹா! அர்ச்சுனா! இதுவென்கொல் இப்படியர் தங்கப்
படுகின்றனை? வில்லாளிகளுள் முதல் வீரனாகிய நீ இத்தனை
மயக்கத்தை வஹிக்கலாகுமா?

விருத்தம்.

கரிய விடம்வந் துறினு மென்னை கலங்குமோசங் காரமனது
பெரிய சூறு வளிவரினுஞ் சேட னுளமும் பேதுறுமோ
வரிவில் வீர ரெதுவரினு மயங்குவார்கொல் மனந்தளும்பித்
தெரியன் மார்ப நீயிதற்காய்த் தினைப்படுவ தழகன்றே.

அன்றியும், அர்ச்சுனா !

விருத்தம்.

காண்டிப விஜய யிந்தக் கன்னிகை நிமித்த மாகப்
பூண்டனை துயரம் வேண்டாம் பொன்னுல கத்துமின்னார்
வேண்டிலை யெனினுமிக்க விழைவொடும் வந்து சேர்வார்
ஈண்டவர் சுகந்துய்க் கின்றோர்க் கிவளிடத் தாசை யென்னே.

அர்ச். ஆ ! ஆ ! நாரதரே ! அங்ஙனமன்று. இப்பொழுது இந்தப் பாரமான சோகத்திற்குக்காரணம், கேவலம் ஒரு பெண்ணிடத் திருத்திய ஆசையென்பது மட்டு மன்று. அதனுள் இரண்டு மர்மங்களிருக்கின்றன. அவையாவன:—வெகுநாளாய் அவ ளும் நானும், பரஸ்பரவனுராகத்துடன் ஒருவரையொருவர் நேசித்திருந்தும், யாருமறிய எனக்குரிய களத்திரமாகவே பாவிக்கப்பட்டிருந்தவளான சுபத்திரீமணி, பலப்ராப்தி காலத்திற் கிட்டாமற்போனது, ஒன்று; அவளை, எப்பொழுதும் எனக்கிதத்தையும், வெகுமானத்தையும், செய்கின்றவர்தானே, எப்பொழுதும் எனது கேட்டிலும், அவமானத்திலும் குதூ ஹலனான எனது ஜன்மவைரி துரியோதனனுக் கர்ப்பணஞ் செய்யத்துணிந்ததனால், இனி இந்தக் கரிதேய்த்த முகத்தை வெளியிற்காட்ட யிடமில்லாமற்போயிற்றே, என்பதொன்று. ஆக இவ்விரண்டுந்தான்.

நாரத. சரி. சரி. வாஸ்தவம். அர்ச்சுனா ! இதிலுள்ள மன்மங்களை நினைத்துப்பார்த்தால், உன்னுடைய ஸ்திதி பாரமான சோகாஸ் பதமாகத்தானிருக்கின்றது. அதிற்சந்தேகமின்று.

அர்ச். ஆ ! நாரதப்பிரமமே ! அதைச் சோகாஸ்பதமென்று சுருக்கிச் சொன்னாற்போதுமா ?

ஏனென்றால் ;

### கொச்சகம்.

எனக்கிதஞ்செய் வோனவனே ஈசனென்றே நெஞ்சகத்தில்
நினைத்திருக்கின் றேன்அவனே நிட்டூரஞ் செய்வதென்றால்
வினைக்கெடுதி மற்றென்சொல் மெய்ம்முனியே யெற்கதனுல்
மனக்கொதிப்புண் டாயதினி மாறாதெனதுதுக்கம்.

ஹா! ஹா! ஹா! அந்தோ! அந்தோ!

### விருத்தம்.

சோக மனலா யிதய மதிற்
சொலித்தே யெழும்பி ஆசை யெனுந்
தொடர்கா னங்க டமையெல் லாஞ்
சுட்டே எரித்துப் பாழாக்கித்
தேக மதனிற் சந்தி பந்தச்
சிரூங் குலைந்து கழன்றோடச்
சென்ம முடிவிற் காலபத மாய்த்
திகழ்கின் றதுவென் செய்வேன் யான்
பாகஞ் சொல்லாட் குரிய வரன்
பாங்கா யானு காவிடினும்
பாரின் மற்றோர் பார்த்தி பர்க்குப்
பண்பா யளிக்க லாகாதோ
நாக முயர்த்த பதாகைய னந்
நஞ்சொத் தவனுக் களிப்பது வா
னரத்தின் கைப்பூ மாலை யொக்கும்
நன்றோ தெய்வ நாரதரே!

நாரத. ஆ! ஆ! அர்ச்சுனு! இருக்கட்டும். இருக்கட்டும். கரியை உரைக்கவுரைக்கக் கறுப்பாகத்தான் வரும். சும்மா, சும்மா அதை நினைத்து நினைத்துத் துக்கப்படவேண்டாம். ஆகையால், அவ்வாசையை யொழித்துவிட்டுத் தீர்த்தயாத்திரையைச் சீக்கிரம் முடித்துக்கொண்டு பந்துதரிசனத்திற்குப் போவதுவே உத்தமமாகவிருக்கின்றது. அப்படியே கொஞ்சம் நாட்கழிந்து விட்டால், நாட்செல நாட்செலக் கவலைமாறிவிடும்.

அர்ச். சீ, சீ. என்னதீர்த்தயாத்திரை ? இனியென்ன பந்துதரிசனம்? இனியென்ன வேண்டியிருக்கின்றதிந்தப் பாழ்த்தஜன்மத்திற்கு? இனி ஒன்றுமே வேண்டாம். மானத்தைவிடுத்துயிர்வஹித்திருப்பதிலென்பயன் ? இந்தச் சீவனிருப்பதே பாரமாகத்தானிருக்கின்றது. அதனால், இப்பொழுது, முனிச்சிரேஷ்டரே! என்மீது கிருபைசெய்து இச் சிறிய உபகாரம் செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன்.

நாரத. என்ன ? என்ன ? சொல், சொல். என்னலாகுமானலவ்வுதவி செய்யத் தடையில்லை.

அர்ச். அங்ஙனமாயின் ; ஓ! நாரதப்பிரமமே !! தேவரீர் கிருபை செய்து, இப்பொழுதே, எனது ஜேஷ்டர்களான தர்மபீமர்கள் பாற்சென்று, எனது விருத்தாந்தம் யாவுஞ்சொல்லி, கடைசி சமாசாரமான இதையுஞ்சொல்லவேண்டும். அதாவது:—

விருத்தம்.

சொன்மின் எனது பாகமதைத்
துரியோதனப்பேர் பூண்டிலகுஞ்
சன்ம வைரி அடைந்ததனாற்
சகத்திற் படைத்த சுகபோகத்
தன்மை நன்மை களும்வேண் டேன்
சர்வத் யாகந் தான்புரிந்தேன்
என்ம னத்தே ஆசை யற்றேன்
என்றென் பீமர்க் கெதிர்சென்றே.

விருத்தம்.

நந்தா துலகிற் சொலித்த வென்றன்
நற்பூ டணமொன் றிப்பொழுதே
நிந்தாஸ் பதமாய் நிகழ்ந்த தனால்
நிமல னுஞ்சன் னிதிக்கெதிர்யான்
வந்தாற் பழுதாம் மனவெ றுப்பால்
மற்றோ ருலகஞ் செல்வேனென்
றந்தா பதவென் னிந்த மொழி
அறைமின்றன்ம நந்தனர்க்கே.

நாரத. ஆ! நன்று. நன்று. அர்ச்சுனா! அதற்கிப்பொழுது நீ யென்ன செய்ய ஆலோசிக்கின்றாய்?

அர்ச். மற்றென்ன யோசனையிருக்கிறது? எந்தச்சாதனத்தினாலாவது பிராணத்யாகஞ்செய்துகொள்ளவேண்டுவதைத்தவிர, வேறென்னயோசனையிருக்கின்றது?

நாரத. ஆ! ஆ! என்ன? ஆத்மஹத்தியா? ஹ! ஹ! ஹ! அர்ச்சுனா! உன்னைப்போன்ற உத்தம க்ஷத்திரியருக்கிது உசிதமா?

அர்ச். ஹா! அஃதேதனுசிதமாகாது? என்போன்ற மஹத்தான துர்த்தெசையை யனுபவிக்கின்ற ஒருவன் மற்றென்செய்வான்?

விருத்தம்.

சகத்திற் கனத்த அவமானந் தனைத்தன்
றலையிற் சுமந்துகொண்டு
முகத்தை வெளியிற் காட்டுதற்கும் முடியா
தவனாய்க் கரிதோய்ந்து
மிகுத்த துயரப் பெருங்கிடங்கில் வீழ்ந்தங்
குழன்றால் வீண்பாரம்
வகித்த அவன்மற் றென்செய்வா னிதலா
லுண்டோ முனிவரரே!

நாரத. ஹ, ஹ, ஹ, மஹாபாபம். மஹாபாபம்.

அர்ச். ஆம். ஆம். யான் இப்பொழுது, பாப புண்ணியங்களை இரக்ஷித்தாகவேண்டியதென்ன இருக்கின்றது?

நாரத. ஆ! ஆ! அங்ஙனமன்று. அப்படிச்சொல்வதழகா? அர்ச்சுனா! அதனாலென்னாகும்? இக, பர, சுக ஹேதுவான காரியங்களையல்லவோ செய்யவேண்டும்?

சாவதும் வீணாய்ப் போவது நன்றோ?

அர்ச். அங்ஙனமாயின்; நாரதரே! இனி இவ்வுலக ஸம்பந்தமின்றி ஸன்யாஸத்தையடைந்து, கந்த மூலங்களைப்புசித்துக் காடுமலைகளிலெங்காகிலுந் திரிந்து காலத்தைத்தள்ளவேண்டுவதுதான்.

நாரத. இஃது யுக்தந்தான். ஆனாலும், அது தானென்ன சற்றெளியதா? அர்ச்சுனா! குடிசகம், பகூதகம், ஹம்ஸம், பரமஹம்ஸம், ஆகிய ஸந்யாசங்கள், மஹாவைராக்கியமுள்ளார் வகிக்கவேண்டிய கார்யம். மத்தியில் வழுவுறுமாகில், அதுபோல் ஒரு மகத்தான தீங்கு மற்றுண்டோ? நரகக்குழிக்கு நாற்றங்காலாக வேண்டிவரும். ஆயினும், அதற்குளொருமர்மமிருக்கின்றது. உன்போன்ற மந்த வைராக்கியர்க்கு அதுவே உசிதமாகும். எம்மிடமுனக்கு விச்வாஸமுளதேல், அந்தச்சூக்குமத்தை உனக்குபதேசிக்கலாம்.

அர்ச். ஆ! ஆ! நாரதப்பிரமமே! தேவரீரிடத்தும், விச்வாஸமில்லாத ஜீவர்கள் இச்சகத்திலொருவருண்டோ? ஆ! ஸற்குருவே! அதையெனக்குபதேசித்தருளல்வேண்டும்.

(என வணங்குகின்றனன்.)

நாரத. அங்ஙனமாயின்; அர்ச்சுனா! கேட்கக்கடவாய்.

### எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

பாண்டவர்தம் நடுமணியே! பார்த்தனே! கேள்
பகருமிது திரிதண்ட சன்னி* யாஸம்
ஈண்டதனை யடைவதென்றாற் பகூத காதி
இயற்சன்யா ஸங்களைப்போல் நியம மில்லை
நீண்டசிகை பூணூலுண் டைய முண்டு
நிந்தையிலாக் காஷாய வேட முண்டு
வேண்டுமெனிற் பிராரத்வ வினை யுண் டானல்
மீளவுமில் வாழ்வினுக்கு மேவ லாமே.

(வசனம்) அர்ச்சுனா! ஒருக்கால் பிராரத்வ வசத்தால் நீ நினைத்த காரியம்சித்திபெற்றாலும், அவ்விரதத்தைமுடித்துத் திரும்பவும் இல்வாழ்வுற இஃது தடைசெய்யாதென்றறியக்கடவாய்.

(——) (திரைக்குள் சத்தங்கேட்கின்றது.)

அகோவகோ! ஸைன்யங்களே!

### அகவல்.

வம்மின்! வம்மின்! வரிசைப் படைகாள்!
செம்மைத் திறத்துச் சேனை பதியார்
சாத்தகி யாரும் தமக்குச் சாற்றிய
வார்த்தையி தாகும் வழுத்துவல் கேண்மோ!
சீர்பெறும் ரைவதச் சிகரவான் குன்றச்
சார்பிலிங் கடர்ந்த தடவன மெல்லாஞ்
சுற்றி வளைந்து சூழ்ந்தித் திடுமின்!
எற்றிற் கென்றால்? எழிற்றுவா ரகையில்
மன்னர் க்ரஹத்தில் மணக்கா ரியங்கள்
நன்னய மாக நடக்கின்ற காலை
பூர்த்த சமயம் முன்வந்து நிற்ப
வாய்த்த கன்யா மாடத்தி னின்றும்
மணவது வான மங்கையர்க் கரசி
குணபூ டணியாங் கோதைசு பத்திரை
எங்கோ! காண்கிலம் எங்ஙனெ னெங்கோ!
அங்கெலாந் தேடி அலுத்தனர் ஜனங்கள்
ஆதலா லடுத்த அடவியி லிங்குஞ்
சோதனை செய்மின்! ஜாக்ரதை! ஜாக்ரதை!

அர்ச். (ஆனந்தத்துடன்) (தன்னுள்) என்ன? என்ன? சுபத்திரையைக் காணகவில்லையா? அந்த விவாகமுகூர்த்த சமயத்தில் அவளது அந்தப்புரத்தினின்றுந், தன்னந்தனியே காணகவில்லையா? அங்கெல்லாந் தேடிக்காணமல் இவ் வரண்யபாகத்திலுந் தேடுகின்றார்களா? இஃதென்னை? ஆச்சரியமாகவிருக்கின்றது.

(நாரதரைக்குறித்து) (வெளிப்படை) ஹ! ஹ! பகவன்! நாரதப்பிரமமே! இதுவென்கொல் விந்தையாயிருக்கின்றது? இப்பொழுதென்னுடைய ஆசைத்தருவானது, தக்தமாயிருக்கும் இந்நல்வார்த்தையென்னும் ஜலவிருஷ்டியினால், திரும்பவுந் தளிர்க்கும்போலிருக்கின்றது. அதனால், அச் சுந்தரியைத் தேடுகின்றகாரியத்தில் யானுந் திரும்புகின்றேன். ஒருக்கா

வெனது பிராரத்வவசத்தால் எனது கண்களுக்கு ஒரு கணப் பொழுதேனும், கண்டுகளிக்கப் பிராப்தமிருக்குமாறு கிடைக் கட்டும்.

நாரத. ஸரி. ஸரி. நிரம்பஸந்தோஷம். நிரம்பஸந்தோஷம். அங்ஙனமே யாகட்டும். அங்ஙனமேயாகட்டும். அர்ச்சுன! யான்சொல்லிய வார்த்தையில் இலக்ஷியமிருக்கட்டும். அதைமட்டும் மறந்து விடாதே.

அர்ச். அதை ஒருக்காலும் மறக்கமாட்டேன். மறக்கமாட்டேன்.

நாரத. ஸரி. ஸரி. யாம் துவாரகைக்குச்சென்று, அங்குநடக்கின்ற விந்தையைக்காணச் செல்கின்றேம்.

அர்ச். நன்று, நன்று. முனிநாதரே! தங்கள் நளின சரணங்களை நமஸ்கரிக்கின்றனன்.

நாரத. அர்ச்சுன! விஜயமுண்டாகுக.

[அப்பால் வீணைகானஞ்செய்துகொண்டு செல்கின்றனர்.]

இராகம், பிலஹரி. ரூபகதாளம்.

[பல்லவி.]

எனதுளமுனைமறவா திந்தவரமே தருவாய்.

[அநுபல்லவி.]

அனகசச்சிதா னந்தசுரநுத
ஐயனே மலர்க் கையனே நிதம் (எனது)

[சரணங்கள்.]

தேவதேவா பத்மநாபா-செந்-திருவளர் மணிமார்பா
பாவனு வாமனு பக்தர்தம்பாப
பஞ்சன யோகியர் ரஞ்சனஸல்லாப (எனது)

அகிலலோகப்ரகாசா-அன்பர்-அந்தரங்கவிலாஸா
புகழ் முத்து சுப்பன் றமிழில் நேசம்
பூண்ட வாமிக நீண்டவா ஈசா (எனது)

[எனக் கானஞ்செய்துகொண்டு சென்றனர்.]

றேன். ஆனால், "அருண்டவன்கண்களுக்கிருண்டதெல்லாம் பேயாகத்தோற்றும்," என்பதுபோல், சுபத்திராத்தியானமே குடிகொண்ட எனக்குத்தான் சுபத்திரையாகத் தோற்றுகின் றனளோ? இருக்கட்டும். அதற்குளேன் சஞ்சலம்? அவள் மூர்ச்சை தெளிகின்றனள்போற் காண்கின்றனள். எல்லாம் அறிவோம்.

(இராக்கதன்) ஆ! இப்பெண்மணி மதுபானமயக்கம் தெளியுமாறு, இப்பொழுதுதான், தன் விசாலமான கண்களை விழிக்கின்றள். நன்றாய்த் தெளிந்தபிறகு இவளை முத்தமிட்டுக்கொள்கின்றேன். ஆ! இதோ! நன்கு தெளிந்தனள்.

[என்றுசொல்லி, அவள்பாற் செல்கின்றனன்.]

(அர்ச்சுனன்) சீ, சீ; துஷ்டா! என்னகாரியம் செய்யத்துணிந்தனை?

(என்றுதரித்து, அரக்கனுடன்கைகலந்து, மல்லயுத்தம் புரிந்து, இருவரும் திரைக்குட் சென்றனர்.)

(சுபத்திரை) (எழுந்து, உட்கார்ந்துகொண்டு) என்ன? என்ன?

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

*தூங்கின்ற நேரமதி லெனைத்தனியாய் விட்டெனது தோழி மார்கள்
பாங்குடனே இவ்வந்தப் புரத்தினின்றும் மெள்ளவெளி படர்ந்திட் டாரோ?
(கீழேபார்த்து) இஃதென்னடீ! என்கொலிது?
(திடுக்கிட்டெழுந்து) முன்விருத்தத்தொடர்.
*ஓங்குகின்ற எனதந்தப் புரத்திலன்றோ கண்டுயின்றேன் ஒப்பில் லாத
ஈங்கினிய தனிர்ச்சயனத் தெப்போதி லெப்படியான் எய்திட் டேனால்.

(சற்று யோசித்து) ஓ! ஓ! சரி, சரி. அறிந்தேன். அறிந்தேன்.

### அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

திடவந்தக் காணமதிற் பற்றியவெவ் விரகபரி
    றைமத் தீயென்
றுடலெங்குந் தகிப்பதனாற் றளிர்ச்சயனத் திடும்பினென
    உரைத்தப் போதே
தொடரந்தச் சொன்னடுவே கண்டுயின்றேன் போலுமென
    தோழி மார்கள்
படர்கின்ற துயில்கலையா தெனைப்பலவப் பாயலிதிற்
    பணித்திட் டாரோ ?

(வசனம்) ஆனாலும், எனது நித்திரையைக் கலையாமலே ஸகீஜனங்கள், என்னைத்தூக்கி, இப்பல்லவசயனத்திற் கிடத்தியதும் ஒரு சாமர்த்தியந்தான். ஆயினும், ஒருத்தியாவது என் பக்கத்திலிருக்கவேண்டாவோ? ஒளிந்துகொண்டார்கள்போலும். ஒருவரையுங் காணகவில்லையே.

(——) [திரைக்குள்]

(அர்ச்.) ஹா! ஹா!! துஷ்டா! ஸாதுகுண மாதரசைச் சதிசெய்ய எத்தனித்த சண்டாளா!!

### அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

கற்பரசி தனைத்தொட்ட கரமெதுகொல்? மந்திரமோ
    கனஞ்செபித்த
சொற்பெரிய முகமெதுகொல்? தோளிலவ டனைத்தூக்கித்
    துரித மாயென்
முற்படுவெவ் வுடலெதுகொல்? அத்தேக முற்றுமொரு
    பிண்ட மாக்கி
வெற்படியிங் குருட்டுகின்றேன் விலங்கினத்திற் கவ்வுணவால்
    விருந்து செய்வேன்.

சுபத். (சத்தத்தைக்கேட்டு) யாரோ? எங்ஙனையோ? தூரத்திற் பேசுகின்ற சத்தங்கேட்கின்றது. அதனால், யான் நினைக்கின்றேன், “ அந்தப் பாழ்த்த கல்யாணமண்டபத்திற்கு, என்னைப் பலவந்தமாகக் கொண்டுபோக வருகின்றார்களென்றே.”

ஹா! ஹா!! இதற்கென்செய்யப்போகின்றேன்? இச்சமயம் ஒன்றுந் தோன்றவில்லையே. ஆ! பரமேச்வரா! இப்பெரிய வாபத்தினின்றும் எவ்வாறு தப்புவேன்? எனக்குச் சம்மதமில்லாத காரியத்தி லித்தனை பிடிவாதமென்னையோ? இத்தனைக்குங் காரணமாய் யானொரு பெண் பிறந்து, இத்தகைய பரிதபிப்புக்குள்ளானேன். அந்தோ! அந்தோ!!

(அப்பால், அரக்கனது இரத்தங்களால் அடையாளஞ்செய்யப்பட்ட ஆடையுடன் அர்ச்சுனன் பிரவேசிக்கின்றனன்.)

அர்ச். (தன்னுள்) ஆ! ஆ!! இது ஸாமர்த்தியம். யானவ்வரக்கனைக் கீழேதள்ளி, அவன் மார்பிலுட்கார்ந்துகொண்டு, அவன் சிரசைச் சேதிக்க வாரம்பிக்கும்போதே, ஒருகணத்துள் அம்மாயாவி அரக்கன், எப்படியோ காணாமல் மாயமாய்விட்டான். ஆச்சரியம், ஆச்சரியம். நிற்க, நிற்க. இப்பொழுது அவனைத் தேடிப்பார்ப்பதற்குச் சமயமன்று. அந்தச் சுந்தரி இவ்வனத்திற் றனிமையாயிருக்கின்றனள். இன்னமும் என்னென்ன சங்கடங்கள் சம்பவிக்குமோ? அது ஒரு கணக்கில்லை. ஆகையால், அவளைப் பார்ப்பதிற் றிரும்புகின்றனன்.

(சுபத்திரையை நோக்கி) ஹா! ஹா!! ஹா!!! கண்படைத்தது ஸபலம், ஸபலம். அவளே இவள். அதிலெட்டுணையேனும் ஐயப்பாடின்று. இதனால், அவ்விராக்கதனை எனக்குப் பரமமித்திரனாக வல்லவோ நினைக்கவேண்டியிருக்கின்றது. நன்று. நன்று. அம் மஹானுபாவன் யாவனோ? தெரியவில்லை. அவனெனக்கு முக்கியமான ஹிதகாரியமல்லவோ செய்திருக்கின்றனன். நன்று. நன்று. இருக்கட்டும். (தன்னுள்) இவளுடைய மனோநிலைமை இன்னஸ்திதியிலிருக்கின்றதென்பதறியுமட்டும், யான் இன்னானென்றறிவிக்கக்கூடாது. ஆனால், அவ் வரக்கனது இரத்தப்பெருக்கில் நனைந்து, செவேலென்று செந்நிறந்தாங்கிய உடைதரித்திருப்பதால், அவளாலென்னை யடையாளங்கண்டுபிடிக்க முடியாது. ஸரி. ஸரி.

இப்பொழுதவள் முதன்முதலில் தன்னந்தனியே என்ன சொல்லிக்கொள்கின்றாளென்பதும், அவள் நினைப்பின்னபடி யென்-

பதும் அறிகிறமட்டும், இங்கொருபக்கம் மறைந்துநிற்கின்றேன். அதன்மேல் சமயத்திற்கேற்றாப்போல் நடந்துகொள்கிறது.

[என்றொரு பக்கம் ஒதுங்கி நின்று கேட்கின்றனன்.]

(சுபத்திரை) தாதிகள் இங்கென்னை ஏகாங்கியாக விட்டுப்போனது ஒரு பெரிய உபகாரமாச்சுது. ஒருநாழிகையாவது எனதந்தரங்கத்திலுள்ள வெப்பத்தை வெளிவிட்டாற்றிக்கொள்ள இது ஒரு நல்ல சமயமாயிருக்கின்றது. இல்லையானால், இந்த வழிநெறிந்த கல்யாண தடபடலினால், எனக்கேகாந்த சமயமே கிடைப்பதில்லை. யாரேனும் பக்கத்திலிருந்துகொண்டேயிருக்கின்றார்கள்.

அர்ச். (தனியே) இவள் தன் பூந்தோட்டத்திலிருப்பதாகவே நினைத்திருக்கின்றாளோ? இராக்கதன்றன் விருத்தாந்தமொன்று மறியாள்போலும். அப்படியானால், யானுமந்தச் சமாசாரத்தை இவளுக்குச்சொல்லக்கூடாது. ஏனெனில்? இவளது கோமளாந்தக்காரணமானது பயத்தினாற்றுன்பமடைந்து, பலவிதப் பரிணாமங்கட்கிடையாகும். ஆகையாற்றான்.

சுபத். (கீழே உட்கார்ந்துகொண்டு) (தனியே) ஹா!! பரமேச்வரா! இதுவும் உன் சோதனையோ?

### ஆசிரிய விருத்தம்.

தாங்கமுடி யாதவிண் சோகபா ரத்தையென்
றலைமேற் சுமத்தி வைத்துச்
சதிசெய்த தென்கொலோ? பாவியா னினியென்ன
தான்செய்கு வேன் ஈச்வரா!!
நீங்காத பிரியமுள ரொன்றுனை வ ரிப்போது
நிட்டூர மேவ நித்தார்
நிந்தையுறு மென்கன்ம கதியாட்தா தமையெலாம்
நீள்வைரி யாக்கி யதுவால்
ஏங்குளத் தாய்தந்தை வ்ருத்தாப்ய ராலேதா
லெள்ளளவு மிவர் வார்த்தையங்

கேறவிலே கிழவர்சொற் கண்யமுறு மோவெலா
மெம்முனவ ராள்கை யதனுற்
பாங்குட னெனைப்பற்றி யாருரைப் பார்களப்
பாதகச் சுயோ தனர்க்குப்
பாரியா ளாகவோ? அதனினும் உயிர்துறப்
பதுபரம சுகமாகு மால்.

(பெருமூச்செறிந்துகொண்டு) (கன்னத்திற் கைவைத்துக் கண்ணீர் உதிர்க்கின்றனள்.)

அர்ச். (தனியே) (ஆச்சரியத்துடன்) ஆ! ஆ!! கண்மணீ! பெண்மணீ! சுபத்திராமணீ!! அந்தத்துரியோதன வரவிஷயத்திலுன்முகத்தினின்றும் வெளிவந்த திக்காரசப்தத்தைக் கேட்டமாத்திரத்தில், முன்னினும் நீ அதிக அழகுள்ளவளாய்ச் சோபிக்கின்றனை. ஆயினும், உன் மனமாளிகைக்குரிய புண்யபுருடன் யாவனோ? அவனை மஹா தன்யனென்று நினைக்கின்றேன். அவனின்னானென்றறிவித்தாயில்லை. ஆனுல், உன்னைப்பற்றியோசிக்கையில், அடா! சுபத்திரா!!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

நின்றுணைவர் பலராம க்ருஷ்ணருடை மாமனதும்
நினைப்பு மின்ன
தென்றறிந்தேன் முன்னுளநம் மித்திரபா வனையுமொழித்
திட்டா ரேதோ
பின்றுரியோ தனனுமிகச் சம்பத்தின் கௌரவத்தாற்
பிரிய ஞனன்
ஒன்றியபெண் பாலெனினுஞ் சத்தியத்தைக் காப்பதுநீ
ஒருத்தி தானே.

சுபத். ஹா! அந்தோ! அந்தோ!! இந்த எனது துக்கத்தைப்பார்த்துக் கவலைப்படுவோர் இவ்வுலகத்திலொரு பிராணிகளுமில்லையா? யார் எங்கிருக்கின்றார்கள்? ஹ! ஹ! ஹ! பரமேச்வரா! இவ்வாபத்தினின்றும் எவ்வாறுய்வேன்? தெய்வகோபமா இது? என்னுயிரைப்பற்றிச்சிந்திப்பவர் யாருங்காணேனே. ஒருவளைக்

குடியானவன் வீட்டில், இராஜனேவந்து கொள்ளைசெய்திடில், அதைக்குறித் தேமங்கேட்பவர்யாரே? வயிறுவளர்த்தீன்றதோ ரன்னையே பெற்றமகவைக் கொலைசெய்ய எத்தனித்திடில், தெய்வமல்லது கதியுமற்றுண்டோ? உற்றாருடன்பிறந்தாரே கூடப்பிறந்த சகோதரியை விக்கிரயஞ்செய்யத் துணிந்திடில், யாரைப் போய்ச் சரண்புகுவது? தடுத்தாட்கொள்பவர்யாரே?

[என்றாற்றிக் கண்மாரி பொழிகின்றனள்.]

அர்ச். (மனத்துட் கோபத்துடன், தனிமொழி) ஹா! ஹா! சுந்தரீ! நின் ஸகோதரர்கள் நின்னை விக்கிரயஞ்செய்ய எத்தனித்திருக்கின்றார்களென்பது நிச்சயந்தான். (பற்களை நெறுநெறெனக் கடித்து) அடே! அடே! இப்பொழுதென்ன செய்யலாம்? யான் இவ்வளவுக்கும் பதிற்செய்துவிடுவேன். ஆனால், தர்மநந்தனருடைய உத்திரவில்லாமல், யாதவர்கட்கு வைரியாதல் சரியன்று. என் செய்வது?

(சுபத்திரை) (சோகநீராற் றொண்டை தத்தளிட்டு) ஓ! ஓ! என் பாழ்த்த விதியே!

வெண்பா.

எத்தனைவி தம்பலவா யென்னை வளைந்துகொண்டு
மெத்த வருத்துகின்றாய் வெவ்விதியே!—இத்தருணம்
நத்துமென தாசைபற்றி நானுய்ய வேதேனும்
வைத்திருக்கின் றாயோ வழி.

(வசனம்) ஆ! ஆ! எனதாசைக்கோரிடமாக உயிரோடிருக்க ஓர் வழியுங்காணேனே. யான் இப்பொழுது எனது ஸர்வபந்துக்களையும் வெறுத்து, யாதொருவரிடத்திலாசை வைத்திருக்கின்றேனோ, அம் மகாபுருடர் எங்ஙனமிருக்கின்றாரோ? ஹா! ப்ராணேச்வரா!! மஹாவீரசிகாமணியே! பராக்கிரம பயோநிதியே! தேவரீர் எங்ஙனம் வசிக்கின்றீர்கள்? அடிமையாகிய எனக்கன்றுரைத்த வாய்மையை மறந்திட்டீர்களோ? ஹா! ப்ராணவல்லபா! யான்மட்டும் நுமதாசையை ஒருநாளும் மறவேன், மறவேன்.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

*என்னிதய புவியில்நும தாசையெனும் வித்துமுளைத்
தெழுந்திட் டோங்கி
மன்னுகின்ற ததனிழலிற் சுந்தர!நுந் திருமேனி
வயங்குஞ் சித்ர
மென்னவும துருவத்தைப் பதித்துளவென் சிந்தைமற்றிற்
கிடங்கொ டாதே.

[சற்றுநிலைகத்துக்கொண்டிருக்கின்றனள்.]

அர்ச். (தன்னுள்) அடீ! சுந்தரீ!! நீயாரைஉத்தேசித்துச்சொல்கின்றனை ?

சுபத். (முன்விருத்தத்தொடர்ச்சி.)

*மன்னவபாண் டவபார்த்த மகராஜ! சொல்லுறுதி
மறந்தி டாதீர்.

அர்ச். ஹா! ஹா! ஹா! ஸபாஸ், ஸபாஸ். இப்பொழுதெல்லாச் சந்தேகங்களு நீங்கிவிட்டன. மிகச்சந்தோஷம், மிகச்சந்தோஷம்.

சுபத். வெண்பா.

மற்காக்குந் திண்புயத்து வல்லவர்நீர் அன்றுரைத்த
சொற்காக்க வேண்டுமென் சுந்தரரே!—எற்குக்
கழுத்தறுபட் டாலுமொரு காலத்தும் யானே
வழுத்திடுசொற் குண்டோ வழு.

அர்ச். (தனியே) இவளுடைய இந்த வார்த்தையினால் ஆனந்தகிரியின் சிகராரூடனாக ஆகிவிட்டேன். ஆயினும், இந்தப் பயங்கரமான ஆபத்காலத்தி லிவளுக்கென்னாற் சகாயஞ்செய்ய, எள்ளளவேனுஞ் சமயமில்லாததுபற்றி மிக உன்னத அவ்வானந்தப் பெருங்கிரியினின்றும் உருண்டு துக்க ஸாகரத்திலாழ்கின்றவனாக ஆகின்றேன். ஹா! ஹா! ஹா! என்செய்வது ?

சுபத். (ஆகாயத்தை நோக்கி) ஆ! ஆ! அந்தோ! அந்தோ! சூரியாஸ்தமனமாகி இருளும் வந்து சூழ்கின்றது போலும். ஆ! இது

காரும் தாதிகள் ஒருவரும் வரக்காணகவில்லை. இதுவென்ன விபரீதம்? ஆ! ஈசா! இந்த ஜன்மத்தின்முடிவுநாள் எனக்கின்று தானு? மற்றப்படி ஜனுரவங்களும் ஆகோஷங்களும் ஒன்றுந் தோன்றவில்லையே. நிற்சப்தமாய்ப் பயங்கரமாகவல்லவோ யிருக்கின்றது? இது வென்னை விந்தை?

அர்ச். (தன்னுள்) இப்பொழுதென்னசெய்கின்றது? இப்பொழுது இவளெதிர்ப்பில் யான் பிரவேசிக்கவேண்டுவதவசியம். இவளுடைய சந்தேகத்தை மாற்றிவையாதிருப்பது சரியன்று. ஆனால், இராக்கத விருத்தாந்தமும், யானின்னுனென்பதும், சொல்லாமல் ஏதேனுமிவளுட னுரையாடுகின்றேன்.

சுபத். (கோபத்துடன்) இது வென்கொல் வம்புத்தனம்? இங்கொருவரும் பதிற்சொல்கின்றவரில்லையா? அடீ! ஸாரங்கநயனே! அடீ! புட்பாவதி!

அர்ச். (திடீரென்றருகிற்றோன்றி) (வெளிப்படை) ஓ! ஓ! மாதுசிரோன்மணீ! இவண் யாவரைக் கூவுகின்றாய்? இங்ஙனம் பதிலுரைப்பதற் கெவருளர்? ஒருவருமில்லை.

சுபத். (திடுக்கிட்டெழுந்து) என்ன? பதிற்சொல்ல ஒருவருமில்லையா? இப்படிப் பயங்காரமான வேடத்துடன் எனதந்தப்புரத்திலிங்ஙனம் வருகின்ற நீவிர் யாவர்?

அர்ச். ஓ! ஓ! சுந்தரீ!

விருத்தம்.

கேளாய் தீர்த்த யாத்திரைசெய் கின்றநானேர் வழிப் போக்கன்
வாளார் விழியாய்! வழிதப்பி வந்தேனிந்த மாவனத்துள்
நீளாகாரத் துடனொருவன் நேர்ந்தானவனைத் தடிந் ததிலென்
ஞேளா ருடையி விரக்தஞ்சிந்தி விகாரமாகத் தோற்று கின்றேன்.

சுபத். (பயத்துடன்) என்ன? என்ன? யான் இப்பொழுது கோரவன மத்தியிற்றானிருக்கின்றேனே? இங்கெப்படி வந்தேன்? என்னைக் கொண்டுவந்தவர் யாவர்?

அர்ச். அதை யானறிவதெப்படி ?

சுபத். (துக்கசீராற் றொண்டை கத்தளிட்டு) ஆ! ஆ! இனி யென் செய்வது? ஹா! அந்தோ! அந்தோ! ஹா! தெய்வமே! இதுவென்ன மோசமாயிருக்கின்றது? இந்திரஜால, மஹேந்திர ஜால விலாசங்களாகவல்லவோ தோற்றுகின்றன? யான் எனது அந்தப்புரத்திலிருந்தேனென்பதும் பொய்யா? அதைவிடுத் திவ் வனமத்தியில் எப்போது எப்படிவந்தேன்? என்பது தோன்றவில்லையே. என்கொலிது விசித்திரம்? ஒன்றியாக இவ்வனமத்தியில், என்னைக் கொண்டுவைத்தது யார்? ஆ! ஆ! எனக்கு உயிராளவான சோக உபத்திரவந் தருகின்ற என்னுடன்பிறந்தார்தம் வன்செய்கை ஒத்திருக்கின்றதே. ஆ! ஆ! தெய்வமே! என்னை இந்தப் பாரமான சோகத்திற்குள்ளாக்கினையன்றோ? இதனால், என்கூடப்பிறந்த சத்துருக்களாகிய தமயன்மார் மதினிமார்களெல்லாம் அம் மணமில்லாக் கல்யாண முகூர்த்தத்தைத் தப்புவித்துக்கொள்ளச் சாகஸஞ்செய்து, தன்னை யொளித்துக்கொண்ட நீலி இவள், என்றென்னைத் தாராளமாய் வசைசொல்லி நிந்திப்பார்களே. ஹா! ஈசா! இஷ்டகாரிய சித்தியுமில்லாமல், யாதொரு காரணமுமின்றிக் களங்கமான சொற்களும் வந்துவிட்டனவல்லவா? அந்தோ! அந்தோ! அதோகதியாய்விட்டேன்.

[என்றாற்றி மூர்ச்சித்து விழுந்தனள்.]

அர்ச். ஓம! ஓம! ஓம! இதுவென்கொல் விபரீதம்? (பரபரப்புடன் கிட்டவணுகி) ஆ! ஆ! என்பிராணேச்வரீ!! (தனதுமுன்றானையால் விசிறிக்கொண்டு) ஆ! என்னாசைமனோஹரீ! சுபத்ரா! சுபத்ரா! (பேச்சில்லாததைப்பார்த்து) (தன்னைக்குறித்து) ஹா! அடா! மஹாபாபி! ஸ்திரீகாதகா! தனஞ்சயா! என்னகாரியஞ் செய்துவிட்டாய்? கெட்டது காரியம். அடே! துஷ்டா! இவள் உன்பேரிலேயே ஆசைகொண்டிருப்பதைத்தெரிந்திருந்தும், இவளிடத்திற்றன்விருத்தாந்தத்தைச்சொல்லி, இன்னாரென்றறிவித்து, இங்கிருந்தே இவளை இந்திரப்பிரஸ்த நகரத்திற்குக்கொண்டுபோவதை நீயேன் எண்ணவில்லை? அடா! மூர்க்க

சிகாமணியே! சுடு, சுடு. தெய்வயோகம் பிரதிகூலமாகமுடிந்தது. ஏதோ புண்யவசத்தாற்கடைத்த லாபத்தை நானே போக்கடித்துக்கொண்டேனே. ஆனால், தர்மசப்தபயத்தினாலல்லாது, யாதவரிடத்துள்ள பயத்தினாலல்ல. அங்ஙனமாயின், யாதவர்கள் இதற்குள் எனது காண்டீபத்திற்கிரையாகப்பலித்திருப்பார்கள். இனி என்செய்வது? இருக்கட்டும். அதனாலென்னகெட்டது? இவள் கொஞ்சம் மூர்ச்சித்திருக்கின்றனள். இது தெளிந்தபின் யானின்றனென்பதைத்தெரிவித்து, உடன் இவளை இந்திரப்பிரஸ்த நகரத்திற்குக் கொண்டுபோய்விடவேண்டும். பிறகு, யாதவர்களென்னசெய்கின்றார்களென்பதை அறிகின்றேன்.

[சுபத்திரையின் முகத்தருகிலுற்றுநோக்கி]

ஹா! ஹா! ஹா! இன்பங்கரவல்ல அன்புடையாளே! எழுந்திரு. எழுந்திரு. சற்றுச்சுவாசங்கொள்ளக்கடவாய். அடீ! தார்குழலே! சுபத்ரா! உனது தாசனாகிய பார்த்தனிதோ வந்திருக்கின்றனன். மற்றொருவருமில்லை. எழுந்திரு. எழுந்திரு. இவள் கொஞ்சமும் ஆச்வாஸம்பெறவில்லையே. (க்லேசமுற்று)

(கோச்சகம்.)

மெத்தவிரி வானயிந்த வெவ்விய பெருந்துக்கம்
இத்தனைக்குங் காரணஸ்தன் இவனென்றென் மீதுசினம்
வைத்துத்தான் பேசாது மௌனம் வகித்தாயோ?
சித்த மிரங்கியருள் செய்வாய் செழுந்திருவே!

(வசனம்) ஹா! என் பிராணநாயகீ! நீ இப்பிழையைமன்னித்துக் கண்ணைத்திறந்து என்னைப்பாரடி. நீயில்லாமல்யான் தீனனாகவிருக்கின்றேன்.

(விருத்தம்.)

என்னுயிர்க் குயிரே தேவி இச்சமயத்தில் நீயென்
முன்னதாய் ப்ரஸன்ன மாகி முகமலர்ந் தருளல் வேண்டும்
உன்னையே நினைத்துக் கொண்டிங் குய்கின்றேன் சினத்தை விட்டுப்
புன்னகை யுடனோர் வார்த்தை புகலுதி கண்ணே! பொன்னே!

(வசனம்) ஹா! ஹா! இவள் இன்னமும் கொஞ்சமும் ஆச்வாஸம் பெறவில்லை. இவளதுகளைப்புப்பிரபலமாகவல்லவோயிருக்கின்றது? இவ்வேளை கொஞ்சங்குளிர்ந்த தீர்த்தமிருந்தாலிவளுக்காச்வாஸம் செய்யலாகும். ஆனால், இங்கு ஸமீபமாய் ஒருபக்கமுந்தீர்த்தமிருப்பதாய்க்காணவுமில்லையே. என்செய்வது? சற்றுதூரஞ்சென்றாவது தேடிப் பார்த்து ஜலங்கொண்டுவந்திவள்மேற்றெளிக்கவேண்டும். தாமதிப்பது சரியன்று. (சற்றெழுந்து) ஓ! ஓ! இவளை இங்கேகாங்கியாக விட்டெவ்வாறு செல்வது? (சற்றுயோசித்து) ஆனாலிச்சமயமிங்கார்வருவார்கள்? சற்றுநேரம் விட்டுச்செல்வதில் என்னகெடுதல் வந்துவிடும்? ஒன்றுமில்லை. ஆயினும், பெண்மேனி வெளிப்படத்தோன்றாது மறைத்துவிட்டுச்செல்கின்றேன். இதோ இந்த என் மேலுத்தரீயமானது, முன்துவாரகையில் இவளும்யானும் பரஸ்பரானுராகத்துடன் விளையாடியிருந்தகாலத்தில், இவள் கைப்படச்சரிகையால், என் பேர் விலாசங்களமைத்து, அன்புடன் கனக்களித்திருந்ததான சால்வையாகவேயிருக்கின்றது. இதையே இவண்மேற்போர்த்திவிட்டுச் செல்கின்றேன். (என்று அவண்மேற் சால்வையைப்போர்த்திவிட்டு) (ஆகாயத்தை நோக்கி) (கை அஞ்சலிசெய்துகொண்டு) ஓ! ஓ! வனதேவதைகாள்! நீவிர் இவட்குத்துணைசெய்யவேண்டும். ஓ! ஸ்ரீமந்நாராயணா! இவளையுமதடைக்கலமாகவைத்திருக்கின்றேன். இவளை இரக்ஷிக்கவேண்டும்.

ஓரடிப்பதம். இராகம். தோடி. ரூபகதாளம்.

(பல்லவி.)

பெண் மணி இவள் உன்னடை க்கலம்
பேதமை யாலேய ுதை யாகிய (பெண்)

(சரணம்.)

உண்மை விளங்கவோர் தம்பத்துதித்தவா
உம்பருக்கா கவ முத மளித்தவா
தண்முத லேவாயக் கஜேந்திரனைக்காத்தவா
சந்தத முத்துசுப் பன்றுதி சேர்ந்தவா

தமனியநற் பதுமைமெயனத் தகுமுருவத் தொளிர்பவடந்
தமர்தருமிக் கனதுயரிற் பெரிதயர்வுற் றனளதனுற்
றனைத்தவிரநடு வனத் திதனில்மறு துணைக்கொருவரிலள்
சகத்தினலம் மிகுத்தகுணம் வகுத்தமதி முகத்தழகி. (பெண்)

[எனப்பிரார்த்தித்துக்கொண்டு சென்றனன்.]

(அப்பால், திரும்பவும் இராக்கதன் பிரவேசிக்கின்றனன்.)

இராக். ஆ! ஆ! ஆச்சரியம்! ஆச்சரியம்! பகவான் துவாரகாநாயகரான ஸ்ரீமத் கோபாலகிருஷ்ணருடைய கபடநாடகத்தின் பெருமையாவராலறியமுடியும்? ஹா! ஹா! ஹா! ஸ்ரீமத் கண்ணபிரானுடையகட்டளைப்படியே, யான் இந்தச்சுபத்திராதேவியை இங்கபகரித்து வந்ததும்; மற்றும் என்னென்னவிதங்களாகவோ அவர் கட்டளையிட்டருளியபடியே யாவுஞ்செய்துமுடித்ததும், எல்லாம் ஒற்றுமையாகவேயமைந்திருக்கின்றன. ஸரி. ஸரி. ஆனல், அவரது கபட நாடகத்தின் கடைசிபாகத்தையும், சீக்கிரம் முடித்துவிட்டிப்பொழுது விமோசனனுகவேண்டும். அதாவது, அவர் தானுகவே ஓர் லிகிதமெழுதி, இந்தப்பைக்குளடக்கஞ்செய்தென்கையிற்கொடுத்துச் சொன்னதாவது:— "அடா! சுபத்திரையின்பேர்லைவத்தெழுதிய பத்திரிகை ஒன்று இதில்வைத்திருக்கின்றது. நீ அவள் கண்டத்திலணிந்திருக்கின்ற இரத்தினமாலிகையை அவளறியாமலே கழற்றி, இத்துடன் இப்பைக்குள் வைத்துக்கட்டி, அவ்விடத்திலேயே போட்டுவிட்டுத் திரும்பவுஞ்சுபத்திராதேவியை அவளறியாமலேதூக்கிக்கொண்டு, அவளது அந்தப்புரத்தில்விடவேண்டும்" என்றே. ஆகையால், இப்பொழுதவ்வாறேசெய்து முடிக்கின்றேன். (என்று சொல்லி)

[சுபத்திரையின் கண்டமாலிகையைக்கழற்றி, அப்பைக்குட்பத்திரிகையுடன் சேர்த்துவைத்துக்கட்டி, அவ்விடத்திற்போட்டுவிட்டு, மோஹினி மந்திரப்பிரயோகத்துடன், சுபத்திரையை முன்போற் புயத்திற்றூக்கிக்கொண்டு, உலாத்துகின்றனன்.]

இராக். ஸபாஸ். இப்பெண்மணி அதிமனோகரமாய் எவ்வளவு இலேசாய் மிருதுவாயிருக்கின்றனள்? பார்!

### வெண்பா.

சோதியுறுந் திவ்யச் சுகந்த மிரும்பிச்சிச்
சாதிபுட்ப மொன்றைத் தரித்திட்ட—மாதிரியாய்
என்னுடைய திண்புயத்தி லேயிலங்கு கின்றஇந்த
மின்னொழில்யா னென்னசொல்லு வேன்.

(வசனம்) நன்று. நன்று. இச்சமயம் இங்கு தாமதிப்பது சரியன்று. ( ——— ) (திரையை நோக்கி) அடே! அடே! அதோ அர்ச்சுனராஜர் ஜலபாத்திரஸஹிதராய், அவசரத்திலிங்கேயே வருகின்றார்போலும். ஆகையால், இப்பொழுதவர்கட்புலன்கட்குப் புலப்படுவது சரியன்று. அதனால், மற்றொரு வழியாய் ஓடிப் போய்விடவேண்டும்.

[என்று, சுபத்திரையைத் தோளிற் சுமந்துகொண்டிருக்கின்ற, இராக்கதன் சென்றனன்.]

(அப்பால், ஜலபாத்திர ஹஸ்தனை அர்ச்சுனன் பிரவேசிக்கின்றனன்.)

அர்ச். (ஆனந்த சிநேகத்துடன்)

### கட்டளைக்கலித்துறை.

கன்னிப் பருவத்தின் முன்னெனை நேசித்த கட்டழகி
பின்னப் படாநெஞ் சுறுதியி னுடமர் பேதகத்தின்
இன்னற் சகிக்க வியலாது துக்கித் தெளிமையினால்
என்னைச் சரண்சொலி மோகித்த தென்னென் றியம்புவதே.

(வசனம்) ஆச்சரியம்! ஆச்சரியம்! நன்று, நன்று. இப்பொழுதிந்தக் குளிர்ந்த ஜலத்தை யவண்மேற்றெளித்து, ஒருகணப்பொழுதில் மூர்ச்சையைத் தெளிவிக்கின்றேன். (என விரைந்து நடந்து, அவ்விடத்தில் சுபத்திரையில்லாதிருந்ததைப் பார்த்து) ஆ! ஆ! சுபத்திரை எங்ஙனஞ் சென்றுவிட்டாள்? என்ன? என்ன? அவளிருந்தவிடத்தைத் தவறவிட்டு மற்றோரிடத்து வந்துவிட்டேனு? சீச்சீ; இவ்விடந்தானே அவளிருந்த இடம். இதோ பாயலுற்றிருந்த பல்லவாசிகள் சிதறிக்கிடக்கின்றன. அவள் பக்கத்திலிருந்த அவ்விரண்டுதருக்களும் இதோ எதிரில்

நிற்கின்றன. அங்ஙனமிருக்க அவளெங்ஙனஞ் சென்றிருப்பள்? ஹா! ஹா! ஹா! கஷ்டம், கஷ்டம்.

(உடல் நடுக்கமுற்று, சோகநீராற் றெண்டை தத்தலிட்டு)

ஹா! ஹா! இப்பொழுதவளைப்பற்றி என்னென்று நினைக்கின்றது? கோரமிருகங்கள் வந்து பக்ஷித்துவிட்டனவா? அல்லதவ்விராக்கதனே திரும்பவும்வந் தபகரித்துச் சென்றுவிட்டானு? ஹா! இனி என்செய்வேன்? அடீ! பிராண சஞ்சீவி! அடீ! சுபத்திரா! இப்பொழுதுதான் நிச்சயமாயுன்னை இழந்தவனுகின்றேன். நீ யுயிர்ந்த அர்ச்சுன வாஞ்சையினுல் விருதாவாய்க் கெட்டுப்போனுயடி. அடி என்னுருயிர்க்காதலீ! நீ இந்தப் பாவியாலதிகக் கஷ்டத்தையடைந்தவளாகின்றுய். யான் உனது மேம்படு சினேகத்திற் கருகனில்லாததால், நீ என்மீது கொண்ட ஆசை வீணுகப்போய்விட்டது. அந்தத் துரியோதனனையே அடைந்திருந்தாலும், ஒரு சமயம் கண்ணுற் பார்க்கவாவது நேரிடும். ஹா! ஹா! இனி என்செய்வேன்? எங்கென்று தேடுவேன்? ஹா! அந்தோ! அந்தோ! இருக்கட்டும். இங்கிருந்தெவ்வளவுநேரம் யான் துயரத்தை அடைந்துகொண்டிருந்தாலும், அடைகின்றலாபம் யாது? தேற்றுபவர் யாவர்? ஆற்றுபவர் யாவர்? ஆகையால், எனது இந்தத் துக்கத்தை நானே யாற்றிக்கொண்டேதாவதோருபாயந்தேட வேண்டும். (என்றாற்றிக்கொண்டெழுந்து, நாலடி நடந்து) அடே! அடே! இதுவென்கொல்? இங்கொரு பைகிடக்கின்றது. (என்று பையைக் கையிலெடுத்து) ஓ! இது அந்தச் சுந்தரியினுடையதாகவே இருக்கவேண்டும். அவள் இங்கங்கே நடக்கின்றபொழுது, ஒருக்கால் அவள் மடியிலிருந்து, அவளறியாமலே நழுவினதாயிருந்தாலு மிருக்கலாம். நன்று, நன்று. இதிலென்னவிருக்கின்றதென் றவிழ்த்துப் பார்க்கின்றேன்.

(பையை அவிழ்த்து, அதிலிருந்த இரத்தினமாலிகையையும், பத்திரிகையையுங் கையிலெடுத்து)

ஆ! ஆ! இவ்விரத்தினுபாரணம் யான் பார்த்துப் பார்த்துப் பரிசயப் பட்டதுபோலும். (உற்றுநோக்கி) ஆம், ஆம். அதுதான், அதுதான். இது முன் துவாரகையில் வைத்து, அவளும் யானும் பரஸ்பரானுராகத்துடன் விளையாடிக்கொண்டிருந்த காலத்தில், அவண்மீதுள்ள ஆசையினால், எனது கண்டத்தி லிருந்து கழற்றி யானவளுக் கற்பணஞ்செய்ததான இரத்தின மாலையே அன்றோ? ஆம், ஆம். அதுதானிது. நன்று, நன்று. இது இருக்கட்டும். இப்பத்திரிகை யென்னவென்று பார்க்கின்றேன். (பத்திரிகையின் மேல்விலாசம்)

வெண்பா.

சீர்த்தமிகு மாக்ஷிமைசேர் ஸ்ரீமான் தனஞ்சயனார்
பார்த்தமக ராஜனொழிற் பார்வைக்கே—சேர்த்திடுக
பத்தியுடன் நத்திப் பராதீனை யாகியசு
பத்திரைவி டுத்ததிரு பம்.

அர்ச். (மேல்விலாசம் படித்துப்பார்த்து) சபாஸ்! சபாஸ்! அவள் தன் கைப்பட எழுதியதாய்த் தெரிகின்றது. அதுவுமெனக்கே எழுதிய லிகிதமாயிருக்கின்றது. அதனுளிதைப் பிரித்துப் படித்துப் பார்க்கின்றேன்.

(எனப்பத்திரிகையைப் பிரித்துப்படிக்கின்றனன்)

(பத்திரிகை வருமாறு) அகவல்.

ஸ்ரீமத் ஸகல சற்குண மிக்கவர்
மாமற் புயத்தினர் மானத விக்ரமர்
மேருவிற் கிணையாந் தீரம னத்தினர்
வீரகாண் டீபர் விக்ரம பயோநிதி
மகராஜ ராஜ மான்யரா ஜஸ்ரீ
புகழ்பெறுந் தெய்வ புண்ணிய புருடர்
பார்த்தபூ பதியென் ப்ராணநா யகர்தம்
பூத்தொளிர் திவ்யப் பொற்பதாம் புயத்தை
மனதில் ஸ்மரித்து மன்நமஸ் கரித்து

மன்னவ ரேறே! மதிகுல விளக்கே!
என்னித யேச்வரா! இறைவநும் அன்பிற்
குரியநா யகியான் உற்றசு பத்திரை
தெரியப் படுத்துஞ் செய்திக ளாவன:—

(வசனம்.) (அர்ச்சுனன்) ஆ! ஆ!! நன்று நன்று இவ்விசேடவர்ணனை கள் இந்த அற்பபாக்கியனுக்கு எனக்குச் சோபையாகின்ற தில்லை. இருக்கட்டும். மேல்வாசிப்போம்.

(கீழே உட்கார்ந்துகொண்டு படிக்கின்றனன்.)

ஷை அகவல்.

விண்ணப்ப மிதனை விருப்புடன் கேட்டுக்
கண்ணியப் படுத்திக் காக்கக் கடவீர்
உற்பவித் திடுமென் னுடலிதை நுமக்கே
அற்பணஞ் செய்துளேன் அந்நாணர்ந் திருந்தும்
மெத்தவி பத்துறும் வேளைநட் சித்திடா
தித்தனை பராமுகம் எய்திய தென்கொலோ?
என்றனைக் கேற்ற இன்பநல் வரனென்
றுந்தைமைக் குறித்தன் றுரைத்தமை விடுத்தென்
றுணைவரிப் போது சுயோதனற் கென்னை
மணம்புரி விக்க வன்கண்மை யாகத்
தொடுத்தனர் மூண்டனர் துரைத்தன மவர்க்குளே
தடுத்துரைப் பவர்யார்? சற்றுந் தையயிலர்
தாய்தந் தையரோ தளர்ந்தனர் மூப்பால்
ஒய்வுறு மவர்சொ லொன்றுங் கேட்கிலர்
என்செய்கே னந்தோ! ஏழையே னென்செய்கேன்?
முன்செய்வெவ் வினையின் முடிவிதோ தெரியேன்
தநியிலெற் குமது சகாயமொன் றல்லாற்
கதியுமற் றுண்டோ? கருணையங் கடலே!
மாக்ஷிமை யுடையீர்! வந்தெனைக் குமது
காக்ஷிதந் தென்னைக் காக்கக் கடவீர்
வதுவை புரிந்தெனை வாழ்வித் தருளவே
இதுசம யத்திலேன் எந்தலே! வருக

மன்னே! வருக வருகவென் வாழ்வே!
என்னை யாளுடை இறைவா! வருகவே
வரித்திட நீவிர் வாரா விடிலியண்
தரித்திரா தென்னுயிர் சரதஞ் சரதமால்
நாயகன் நினக்கு நானென் றுரைத்து
நேயமொ டெனக்கு நீவிரன் றளித்த
இரத்தின பரணம் இஃதடை யாளமாய்
வைத்தனுப் பினனால் வரிசையீர்! காண்மினே!

அர்ச். (தன்னுள்) இதனால் நினைக்கின்றேன், "முன்னமேயே அவளிந் தப்பத்திரிகையுடன் இவ்வாபரணத்தையும் அடக்கஞ்செய்து, ஒரு ஆள்வசமெனக்கனுப்ப உத்தேசித்துத் தயார்செய்திருக் கின்றாளென்பது நிச்சயம். ஆனால், அச்சமயத்தேதோ அகஸ் மாத்தாய் இவ்விராக்கதாபஹரணம் ஸம்பவித்திருக்கலாம். இது வுமப்படியே அவள் வசத்திலிருந்திருந்து அவள் அறியாது நழு வினதாயிருந்தாலுமிருக்கலாம்," என்றே. நன்று. நன்று. இருக் கட்டும். மேலுள்ளபத்திரிகைக்குறையும் படித்துப்பார்க்கின் றேன்.

(எனப்படிக்கின்றனன்.)

(ஷை அகவல்.)

அரசருக் கரசே! அர்ச்சுன பதியே!
வரிசையீர்! நுமது வாழ்க்கைத் துணையாந்
தன்மபத் தினியெனைச் சத்துரு வாகிய
துன்மதிக் கொடிய துரியோ தனனுக்
களித்திடத் துணிவதால் அண்ணலே! எற்கிடர்
விளைக்குமென் றுணைவர்தம் விழைவு வெறுத்துளேன்
உற்றபந் துக்களின் உறவும் இழந்தனன்
சற்றுமோர் பிடிப்பிலாத் தனிய ளாயினேன்
ஆர்த்தரைக் காத்த லதனினு மிக்கதோ?
தீர்த்தயாத் திரையென் செவ்வி தாங்கொலோ?
வல்லவர் நுமது வளர்சன்னி தானம்
இல்லா தொழியு மிடத்திற் பிராணன்
தரிக்கவும் மனஞ்சம் மதிக்கா ததனாற்

பெருக்கும் கருணைப் பிரஸாத மல்கும்
தக்கவோர் கோலச் சன்னியா ஸியையே
மிக்கவும் நற்பணி விடைபுரிந் தவரோ
டெங்குற் றுகினு மெய்ததுதல் மேன்மையாய்
தங்கட் கிதுவுஞ் சாற்றின ளுகுமால்
இன்புற விரும்பும் இங்ஙனந் தங்கள்
அன்பினுக் குரியா ளானசு பத்திரா!

அர்ச். (ஆச்சரிய துக்க ஆனந்தத்துடன்) ஆ! ஆ! இந்த லிகிதத்தின் கடைசிவார்த்தையினால் என்னிதயம் உருகுகின்றது. அடடா, என்ன? என்ன? இவளது புத்திசாலித்தனம். அஹோவஹோ! மிகவும் மெச்சவேண்டியவளாக ஆகின்றாள்.

ஆ! ஆடீ! என் காதற்குரிய மாதுசிரோன்மணி! இந்தப் பத்திரிகையின் சமாசாரங்களொவ்வொன்றுமே எனது மர்மத்தைப் பேதிக்கின்றதாயிருந்தாலும், உன்மேரிலெள்ளளவுங் குற்றஞ்சொல்லஇடமில்லை. அன்றியும், உன்னைப்பற்றியோசிக்கின்றபொழுது, நீ மிகவுங்கௌரவப்படுத்த வேண்டியவளாக ஆகின்றாய். நன்று. நன்று. (சற்றுயோசித்து)

ஆ! இந்த உனது கடைசி ஸமாசாரத்தினால், என்னையே சன்னியாசி வேடத்துடன் வரும்படி சூசித்திருக்கின்றதாகவல்லவோ பொருள்படுகின்றது? சரி. சரி. நிரம்பசந்தோஷம். அவ்வாறே இப்பொழுதே சன்னியாசி வேடத்தைத்தரித்துக்கொள்கின்றேன். அதற்கிதோ இந்த உனது திருக்காலிகிதமான திவ்விய பத்திரிகையையே பாராயண புஸ்தகமாகவும்; இந்த இரத்தின மாலிகையையே நின்னுடைத் திவ்யமங்களத் திருநாமஜெபஞ் செய்கின்ற ஜபமாலையாகவும்; பாவிக்கின்றேன். நன்று. நன்று. நிரம்பசந்தோஷம். ஆனாலிப்பொழுது அந்தத்திரிதண்ட சன்யாசத்தையேயடையவேண்டும். அங்ஙனமாயின், நாரதமுனிவரின் உபதேசமுங் கௌரவத்தைப்பெறும். ஆகையால், அப்படியே செய்கின்றேன். (என்று திடீரென்றெழுந்து) யாதொரு என் காதற்குகந்தமாது சுபத்திராமணி நிர்நிமித்தமாய் இந்தக்கோர

அரண்யமத்தியில், ஓர் நிசாசரனால் பேட்டிசெய்து வைக்கப்பட்டாளோ? அவள், என்ன காரணத்தால் என் கண்களுக்குத் தென்படாமலே இவ்விடத்தினின்றும் நீங்கிவிட்டனளென்பது தெரியவில்லை. மாயாவசத்தால்மறைபட்டாளோ? கனவுதான் கண்டேனோ? என்ன மாயமோ? ஒன்றுந்தோன்றவில்லை. இருக்கட்டும். அவ்விஷயமாய் இங்கிருந்திப்பொழுதெண்ணுதெல்லாமெண்ணிக் கவலைப்பட்டுக்கொண்டிருப்பதிற் காரியமென்னை? நிற்க. நிற்க. இப்பொழுது, எவ்விதம்யான் நினைத்திருக்கின்றேனோ, அவ்விதமே செய்யவேண்டுவதுதான்.

[எனச்சென்றனன்.]

1-வது அங்கம் முற்றிற்று.

---

## 2-வது அங்கம்.

---

(ஸ்ரீ கிருஷ்ணபிரான் தனியே ஆதனத்திருந்தபடியே பிரவேசிக்கின்றனர்)

**கிருஷ்ணன்.** (திரையை நோக்கி) யார் அங்கே?

**துவாரபாலகன்.** (பிரவேசித்து) ஜய ஜய மகராஜ்! அடியேன் துவாரபாலகன் இருக்கின்றேன்.

**கிருஷ்.** அடா! சக்ரதண்டா! நம் அண்ணா அவர்கள் எங்கிருக்கின்றார்கள்? தெரியவருமா?

**துவாரி.** ஆம். மகாராஜா! பெரியமகராஜாவர்கள் ஸ்ரீமத் கற்கமுனிவரின் ஆச்ரமத்திற்குச் சென்றிருக்கின்றார்கள்.

**கிருஷ்.** ஸரி, ஸரி. (தன்னுள்) நன்று, நன்று. நிரம்ப ஸந்தோஷம். இச்சமயம் அண்ணா அவர்கள் ஸ்ரீமத் கற்கமுனிவர்தம் ஆச்சிரமத்திற்குச் சென்றிருப்பதால், இந்தக் காரியவிஷயமாய்

யோசிக்கத்தான் சென்றிருப்பார்கள். நம் குலகுருவாகிய மஹான் கர்கமுனிவரிடத்தில், அண்ணா அவர்கள் சிறந்த பக்தியுடையவர்களாதலால், அவர்களுடைய சொல்லிற்றான் அண்ணா அவர்கள் கட்டுப்படுவார்கள். ஆனால், தொன்று தொட்டு நங்குலத்திற்கு யாதொரு குறைவின்றி, பூர்ணப்பிரஸாதத்துடன் அநுக்கிரஹித்துப் பரிபாலித்துவருகின்ற நங்குருநாதர் என்னிடத்தில் விசேஷ கருணையுள்ளவரும், யான் எத்தனித்திருக்கின்ற காரியத்தைப் பூர்த்திசெய்துவைக்கச் சம்மதித்தவரும், ஆதலின், இக்காரியத்திற் குசிதமான வார்த்தைகளைத்தான் அண்ணா அவர்களிடம் ஸம்பாஷிப்பார்கள். அதிற் சந்தேகமின்று. (வெளிப்படை) ஸரி, ஸரி. சக்ரதண்டா! அண்ணா அவர்கள் அங்கிருந்து திரும்பிவரும் வரவைப் பார்த்திருந் தெமக்குத் தெரியப்படுத்தக் கடவாய்! ஜாக்ரதை!

துவாரி. உத்திரவுப்படி செய்கின்றேன்.

[எனச்சொல்லி வந்தித்துச் சென்றனன்.]

கிருஷ். (தன்னுள்) ஆ! ஆ! என்னென்று சொல்வேன்! எல்லாம் நினைக்க, நினைக்க, அற்புதமாகவேயிருக்கின்றன.

அகவல்.

ஆ! ஆ! எல்லாம் அற்புதம் அற்புதம்
மாவா ரணமும் மானுட ரியற்றும்
வஞ்சோ பாயந் தன்னி லேமாந்
தஞ்சா வெனவய மாகின் றதுவால்
நன்று நன்றுகாண் நங்குல நாயகர்
குன்றென ஓங்குங் குவவுத் தோளினர்
மதிகுல பூபதி மன்னர் மன்னர்நம்
முதல்வர்தம் பெருமை மொழியற் பாலதோ?
யாதவ குலத்திற் சாத மானவர்
மேதகு கலைபல ஓதியு ணர்ந்தவர்
ஆண்மை மிக்கவர் ஆலாயுதச் செல்வர்
மாண்பெறு தவத்தினர் வஞ்சமில் மனத்தினர்

அவர்க்குச் சமான மவரே யலாது
புவிக்குண் மற்றொரு புருடரு முளரோ ?
எல்லாஞ் சரிதான் இவர்பாற் சிற்சில
பொல்லாக் குணமும் பொருந்துவ தாலே
பலராம னென்ற பேர்சொலிற் சகல
உலகுந் துணுக்குறு முக்கிர மூர்த்தியாய்ச்
சினமே யுருவாய்த் திகழ்ந்தனர் தமது
மனமே கொண்டது மாளிகை யவர்க்கே
நன்றுதீ தென்னார் நாடிடுந் தம்மனஞ்
சென்றதே மார்க்கஞ் செவ்விதாக் கொள்பவர்
ஏறு வார்த்தை இயம்பினுந் தமக்கு
மாறு உரைப்பின் வந்துறுங் கோபம்
துடிகெடுக் கின்ற கோபமொன் றிலையேற்
படியி லவர்க்கொப் பாகுவர் யாவர் ?
பிடிவாத மான பெருமுரண் டவர்பாற்
குடிமேவு மென்ன கூறுவ திதற்கே
பிடித்த முயற்குக் கால்மூன் றென்றே
சடுத்தம் பேசிச் சாதிப்ப தவர்குணம்
தகுந்தகா வென்பதைச் சற்று மோர்ந்திடார்
பகலினை இரவாய்ப் பகரினும் பகர்வார்
மாமலை தனையோர் மசகமுண் டுமிழ்ந்த
தாமெனு முரைமெய் யாக நினைக்குஞ்
சுத்த வெள்ளைச் சுபாவமு முடையார்
இத்தனை விதத்தி லென்னதான் செய்வது ?
இத்தகை ஒருவரோ டிணங்கி வாழ்வுறுதல்
மெத்தவுங் கஷ்டம் விந்தை விந்தையே
மூப்புடை யொருவர் மூர்க்க ராயின்
ஏய்ப்பா லன்றி இசைப்ப தரிதே
துணைக்கே டரையுங் கூட்டித் தழுவிப்
பிணக்கொன் றின்றிப் பெருங்கா ரியங்கள்
சாதிக்க வேண்டின் றன்மைபோ னடித்துச்
சூதிலே யாற்றுஞ் சூட்சியே முக்கியம்

ஆக விப்பொழு தண்ணா விடத்தும்
மோகமார் வஞ்ச முற்றிய சூட்சியே
புரியவும் நேர்ந்ததென் புகலுவ மென்னெனில்?
சுரிகுழற் றங்கைநம் சுபத்திரை தன்னைமுன்
மெச்சு காண்டீப வீரனுக் கென்றே
நிச்சயித் திருந்தும் நிந்தைக் கிடமாய்ப்
பன்னக முயர்ந்த பதாகைய னுக்கு
நன்னய வதுவை நடாத்தவிப் பொழுது
மூத்தவர் தம்மனம் மூண்டிருக் கின்றதால்
வாய்த்தநம் தங்கை மாதுசு பத்ரையோ
பாண்டவர் நடுமணி பார்த்தனுக் கன்றி
ஈண்டெவர்க் காயினும் ஈந்தா லின்னுயிர்
இறப்பளே யன்றி எட்டுணை யேனுஞ்
சிறப்புடன் சம்ம தித்திடா டிண்ணம்
தக்கபி ராயமுஞ் சாந்தநற் குணமும்
மிக்கநல் லறிவும் மேவினள் பெண்மணி
அதிலுள சுகாசுகம் அவட்கே அன்றோ?
இதிலவண் மனப்படி இசைப்பதே உத்தமம்
எம்முடை மனமும் ஏற்றநம் விஜயச்
செம்மல்பா லருள்கொடு திகழ்கின் றதுவால்
ஆதலி னியற்று மவ்வினை முடிவிற்
சூதுறு நற்றொழிற் சுகமே பயக்கும்
எண்ணிடிற் பெரிய இவ்விட யத்தில்யாம்
பண்ணிய சூழ்ச்சிகள் பழுதுறா தொக்குமால்
தற்கமொன் றின்றியெஞ் சற்பனைத் தொழிலே
கற்க முனிவரும் ஒப்பிய காரியம்
எடுத்த வஞ்சனை ரகசிய ப்ரவிர்த்தியின்
தொடுப்பு மெதிலிருந் தெத்தனை தூரமோ
கற்பனை செய்திட நேர்ந்ததிக் காரியம்
அற்பமிற் கட்டிடத் தன்றி வாரமாய்
இந்திர ப்ரஸ்தமா மெழினக ரத்தில்முன்
அந்தணர் பசுக்களை அபகரித் தோட்டிடச்

சோரரை விடுத்தது துயருடை விப்பிரர்
காரிரு ளதனிற் கடுகிவந் துரைப்பக்
கோவியல் வீரபற் குனனுமப் பொழுதே
ஆவின மீட்டுதற் காயுத சாலையிற்
போய்வர நேர்ந்ததும் போகுமப் பொழுது
தூயவெண் பளிக்கி ரதிமண் டபத்துள்
தன்மமே யுருவாய்த் தழைத்தவர் தம்மொடு
பொன்மய மேனிப் பூவைபாஞ் சாலி
கூடி ரமித்துக் குலவுமே காந்தம்
நாடிடும் வேளை நானெதிற் படவும்
அஞ்சி விதனமுற் றதற்குமுன் விதித்த
விஞ்சை முனியின் விதியனு சரித்தே
பார்த்தனு மன்றே பதியைவிட் டகன்று
தீர்த்தயாத் திரைசெயச் செல்லு வித்ததும்
அப்புறம் வனத்தி லர்ச்சுனன் றனக்கு
முற்பட நாரத முனிவரை விடுத்து
இங்குள சங்கதி யாவையும் அவரால்......
அங்கவ னுக்கறி வித்திடச் செய்ததும்
ஆகிய எல்லாம் அடைவினிற் செய்துளேம்
[illegible]கமிவ் வாறுமுன் யோசித்தி ராவிடிற்
குந்தி யத்தையின் குமாரனவ் விஜயன்
இந்திர ப்ரஸ்தத்தி லேயிருந் திருந்தால்
இவ்விட யத்தில்நம் யாதவர் தமக்குஞ்
சவ்விய சாசிமு தல்வர்க டமக்கும்
முதிர்பகை முகமே எதிர்முக மாய்விடும்
அதைநினைத் திடுலென் உபாயமே அர்கமாம்
இத்தனை முயற்சியு ளெத்தனை யோச்ரமம்
அத்தனைக் கஞ்சிடில் அனர்த்தமே யாகுமால்
நிற்க விதனுட் கற்க முனிவரெம்
சற்குரு க்ருபையுந் தழைக்கின்ற தென்பால்
முனிவரர் நல்ல முகூர்த்தமுங் குறித்தார்
அதுவுமோர் நான்கு மாதத்தி னளவே

வதுவைநன் றுகும் மாகுமை யுடைத்தே
இதற்கு மத்தியி லிரும்பூ தியற்றும்
விதத்திலோர் காரியம் விளைத்துஞ் சரியே
என்னெனில்? எவ்விதம்? ஏற்ற எச்சமயம்
கன்னிசு பத்ரையைக் காணு தொளித்திட
யாவ னொருத்தனை எவினம் முனமே
மேவிடு மவனே விண்ணவ னொத்தவன்
மிகமா யாவி விச்வாச முள்ளான்
சகலகா ரியமுஞ் சாதிக்க வல்லான்
அன்னவ னேஎமக் கன்பனு மாவான்
பின்னமி லாதப் பெருங்கா ரியத்தை
எப்படிச் சொல்லினம்? அப்படி முடித்தனன்
மைப்படு கண்ணியை வனமத் தியினிற்
பார்த்தனுக் கெதிரிற் றேற்றிடச் செய்துபின்
கார்த்திரட் குழலியைக் காணு தொளித்ததால்
அடங்காத் துயர்கொண் டர்ச்சுன னுடனே
தடங்கா சினிக்குட் சன்னியா சம்பெறத்
துணிந்தனன் இலேயேற் சூரனக் காண்டிபன்
தணந்திடுஞ் சன்யா சத்தையே நினையான்
அதனினு மவளே அவனுக் கன்புடன்
இதமுற வெழுதிய விதமொரு நிருபம்
பாண்டவன் கண்ணுறும் படிசெய்த பான்மை
தூண்டுத லாகுமத் துறவெய்து தற்கே.

(வசனம்) ஆ! ஆ! நன்று. நன்று. நம் கபட நாடகக்கட்டிடத்து அஸ்திவாரத்தின் ஆழமும், அமைப்பும்: ஆ! ஆ! இதற்கு ளெத்தனை கஷ்டப்படவேண்டிவந்துவிட்டது? இங்கு நம் அண்ணு அவர்களுடன் இணங்கிய பாவனையோடு நடித்துக் கொண்டும், காரியசித்தியைக்கருத்திற்கொண்டும், "பாலுக் குங்காவல், பூனைக்குந்தோழன்" என்ற பழமொழிக்கிணங்க, நடத்திவருகின்றேன். இதற்குள் இந்தத்துவாரகாபுரியில், அண்ணு அவர்களின் நடபடிக்கைகள் என்னென்னவிதங்க ளாயோ பரிணமித்து, எப்படி எப்படியாகவோ முடிந்தன.

ஆச்சரியம்! ஆச்சரியம்! எல்லாம் எம்மனக்கொள்கைபோலவே வந்தமைந்துகொண்டன. ஹா! ஹா! ஹா!

### ஆசிரிய விருத்தம்.

இங்குள்ள புதுமைகள் எல்லாம் இரும்பூ
தியற்றுகின்றன வென்னெனில்?
எங்குலக் கொடிதனைச் சுயோதனர்க் கீவதா
யின்மண முகூர்த்தமும்வைத்
தெம்முனவர் ஸகலவெத் தனங்களுமி யற்றிட
விசைந்தத்தி னுபுரத்தோர்
யாவருஞ் சூழ்ந்திடத் துரியோத னன்மகிழ்ந்
தின்புறு மணக்கோலனாய்த்
தங்கொளி இலங்கிட வலங்க்ருத மணப்பந்தர்
தனிலெழுந் தருளிநிற்பத்
தர்ப்பைமுத லாயுளதெ லாங்கொண்டு குரவர்கள்
தாமுமங் கெதிர்தழைப்பச்
சார்ந்தமண மூர்த்தநற் சமயமும் நேர்ந்ததாற்
சகலரும் மணப்பெண்வரவைத்
தாங்காண வெதிர்பார்த்தி ருக்கின்ற தருணந்த
டித்துருசு பத்திரையெனும்
மங்கையற் கரசியை மஞ்சத்தி னின்றுமெம்
மாயமோ காண்கவில்லை
மாயமா யினவெனும் வார்த்தையது கேட்கவே
மதிமருண் டவசமானார்
மந்தர முழற்றிடச் சிந்துவென இந்தத்து
வாரகா புரிமுற்றுமே
மாதினைத் தேடியே தத்தளித் திட்டதிம்
மட்டென் றுரைக்கவசமோ
பங்கமுற் றதுமுகூர்த் தமும்வணங் காமுடிப்
ப்ரபுவுமிக வெட்கமெய்திப்

பரிபவ மடைந்தனன் மறுபடியு மவடன்ப
டுக்கையிற் கிடக்கின்றவப்
பரிசுணர்ந் தொருநான்கு மாதங்கள் சென்றபின்
பரிணயஞ் செய்வமென்னப்
பரிவுட னுரைத்துவிட் டனைவருஞ் சம்பந்தி
பாவனையுடன் சென்றனர்.

(வசனம்) ஆகவே யாம் ஆரம்பித்திருக்கின்ற காரியமானது, நன்றாய்ச் சித்திபெற்று வருகின்றது. இன்னமும் மேற்செய்யவேண்டிய காரியங்களை எண்ணியெண்ணி முன்னதாகவே செய்து முடித்தல் வேண்டும். இது நிற்க. இப்பொழுது நம் அர்ச்சுனனோ! சன்யாசத்தைத் தரித்துக்கொண்டு, ரைவதகிரியில் வந்து சேர்ந்தாய்விட்டது. அடடா! அவனோ!!

(எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

கருத்தினி லெழிற்சு பத்திரை தன்னைக்
காட்டினி லிழந்திட்டோ மென்று
வருத்தமுந் துயரும் வாட்டிட உலக
வாழ்க்கையைத் துச்சமாய் மதித்து
விரத்தியுற் றதனாற் பிரம்மயோ கத்து
மெய்ம்முனி யெனவிளங் கின்றான்
திரத்தவில் விஜயன் அசைவற் றிலங்குஞ்
சித்திரம் போன்றொளி சிறக்கும்.

(வசனம்) ஹ! ஹ! ஹ! என்ன? என்னலாளனை? என்னபாவனை? என்னென்னதேஜோவானுக விளங்குகின்றனன்? ஆச்சரியம்! ஆச்சரியம்! எல்லாம் நம்சங்கற்பம்போலவே வந்தமைந்து கொண்டன. நிரம்பசந்தோஷம் ஓ! ஓ! அவன்!

(எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

ஓதிடும் பிராண யாமசு வாச
முள்ளடங் கிடுமகா யோக
சாதக முறையைச் சார்ந்திருந் தாலும்
தையல் சுபத்திரை யுருவங்

நீதகல் மனத்திற் றரித்தன னதையே
சிந்தனை செய்யுமத் திறத்தால்
மேதகு நமது முயற்சிகட் கெல்லாம்
மிகவனு கூலமாம் மேலும்.

(வசனம்.) ஆ! அவனே, வாஸ்தவப்பிரம ஞானியைப்போல் நாஸாக்கிரப்பார்வையுடன் ஏகாக்கிரசித்தனாகத் தோற்றப்படுவதாற் சூதுவாதற்ற பலராமரும் ஒருக்காற்றரிசனத்திற்குப் போகச் சமயம் நேரிடும். அப்பொழுது, பரமார்த்த புத்தியுடன் அவனிடமதிகப் பிரேமைகொள்வார். அதனால், யாம் எத்தனித்திருக்கின்ற இந்தக்காரியஞ் சித்தியாகுமென்பதிற்றடையில்லை. அதற்கிப்பொழுது, அவ்யதிராஜனுடைய மான்மியம் இத்துவாரகாபுரி முற்றிலும் வியாபித்து, ஸர்வஜனங்களும் தினசரி அவருடைய தரிசனத்திற்குச் செல்லுமாறு, மேன்மேலும், பிரஸித்தியைச் செய்துவைக்க வேண்டுமென நம்வக்கிரதுண்டருக்கு ஆக்ஞையளித்தோமல்லவா? அவர் வருகின்ற சமயமாயிற்று. அவர் வந்தால் எல்லாவிருத்தாந்தங்களும் நன்குவிளங்கும்.

(திரையை நோக்கி)

அடே! அடே! அதோ நம்வக்கிரதுண்டர் வருகின்றனர் போலும். என்ன! இவருடைய ரூப நடை உடை பாவனைகளெல்லாம் மிக மிக விந்தையாயிருக்கின்றன. இவர்க்குத்தான் ஹாஸ்யரஸப்ரதானமாய், ஸர்வாங்கசேஷ்டைகளுடன் வக்கிரதுண்டரென்ற பெயரும் வெகு இணக்கமாய் அமைந்திருக்கின்றது.

(அப்பால், வக்கிரதுண்டர் என்னும் விதூடகர் பிரவேசிக்கின்றனர்)

(விதூடகர்) (சிரமத்தை அபிநயித்து,உச்வாஸநிச்வாஸத்துடன்)

ஹ!ஹ!ஹ! எப்படிப்பட்ட திடகாத்திரமுடையவனும், இந்தக்கண்ணனுடைய ஏவுதலுக்குட்படப்படாது. ஏனெனில்? எவனுக்கெவ்வளவு சங்கடமேற்படினும், அவனுக்குத் தன் காரியமே கண்ணாகும். அதனாலேயே, கண்ணனென்ற பெயருக்கதுவுமொரு காரணப்பொருளாம். நிற்க. இதோ, நடுராத்திரி மஹாந்தகாரத்துள், ரைவதகிரியைச்சார்ந்த வனப்பிரதேசமெல்லாம் கேவலம் வனசஞ்சாரியைப்

போற் சஞ்சரிக்கும்படி என்னைச் செய்துவிட்டானல்லவா? அந்தச் சன்யாசி இருந்தாலென்ன? போனாலென்ன? அவனால் இவனுக்கென்ன ஆகவேண்டியிருக்கின்றதோ? அதுதான் யாராலறியப்படும். அடடா! நெருக்கமான அவ்வரண்ய பாகமெல்லாம் கூர்மையான முட்களால் நிறையப்பெற்றிருந்தமையால், பாதரக்ஷைகளையுந் துளைத்துக்கொண் டுள்ளங்கால்களைப்பீறிப் புண்படுத்தி விட்டன. மேலும், அனேக முட்கள் உள்ளங்கால்களில் முனைமுறிந்துநின்று நடக்க முடியவில்லை. ஹா! ஹா! ஹா! இவ்விஷயத்திற் கிடைத்தலாபமிதுதான். அந்தயதி இருக்குமிடத்தைக் குறிப்பிட்டாவது சொன்னானா? அதுவுமில்லை. காடுமலையெல்லாம் பலதடவை சுற்றிச்சுற்றியலைந்து, கடைசியிலாங் கோர் குகைக்குள் திருடனைப்போற் கண்டுபிடிக்க வேண்டிவந்தது. இருக்கட்டும். அங்குள்ள வர்த்தமானங்களைக் கிருஷ்ணனுக்குத் தெரிவித்துவிட்டு, சீக்கிரம் வீட்டிற்குப்போய் விச்ராந்திசெய்து கொள்ளவேண்டும். இல்லாவிடில், இன்னமும் இதுபோலுள்ள கஷ்ட மான ஜோலிகளிற்றலையிடவேண்டிவரும். கிருஷ்ணனே! எவ்வள வும் என்னுடைய வருத்தத்தை எண்ணுகின்றவனாகக் காணவில்லை.

(என்று சொல்லிக்கொண்டு கிருஷ்ணனிடம் செல்கின்றனர்.)

விது. ஓ! ஓ! மோகனகிருஷ்ணா! இன்று நீ எனக்கித்தனை வருத்தமே தோ கொடுத்தனை?

கிரு. வாரும். வாரும். வக்கிரதுண்டரே! இங்ஙனம். இங்ஙனம். எம் மருகில் வந்தமர்ந்தருளல்வேண்டும். எம்மால்நமக்கேற்பட்ட சங்கடங்கட்கு விச்ராந்திசெய்துகொள்ளலாம். அப்படிக்கி யாது சங்கடம் ஏற்பட்டது?

விது. ஆ! கிருஷ்ணா! இதோபார். என் கால்களெல்லாம் சல்லடைக்கண் களாய்த் துளைக்கப்பட்டிருப்பதைத் தயவுள்ளவர்கள் பார்த்தாற் சகிப்பார்களா? அடடா! உனக்கென்னவருத்தம்? சும்மா இருந்த இருப்பிலிருந்துகொண் டென்போன்ற ஏழைப்பிராமணர்களி டத்தில், வெகு சாதுரியமாய்க் கேலிவார்த்தை சொல்லிக்கொண் டிக்கொண்டிருக்கின்ற உனக்கென்ன? உடம்பு நோகின்றதா?

கிரு. (சிரித்துக்கொண்டு) ஆம். ஆம். அங்ஙனமே யாகட்டும். நீர் தான் காரியக்காரர், கத்தியைக் கையிற்றரித்துக்கொண்டு கன

காடு வெட்டிமுறித்து வந்துவிட்டீரல்லவா? நுங்கால்களுக்குத் தைலந்தடவி நன்றாய்ப் பிடித்துவிட்டால் நோவு தீர்ந்துபோகின்றது. நிற்க. நிற்க. நீவிர் எந்தக்காரியத்திற் சென்றிருந்தீரோ, அஃதென்னவாயிற்று? அதைச் சொல்லக்கடவீர்.

விதூ. நன்று. நன்று. அன்புமிகுந்த நண்பர் நாயகமே! அந்தச்செய்தி அறைகுவன் கேளாய். கிருஷ்ணா! அவ்வெதிராஜருக்கினி எவராலும் பிரசித்தி ஏற்பட வேண்டுமென்பதில்லவேயில்லை. அது தானாய் நிறைந்து விளங்கிக்கொண்டிருக்கின்றது. அவர்க்குரிய உபசரிப்பு முதலிய விஷயங்களிற் கொஞ்சமுங் கவலைவேண்டாம். யானங்கு போவதற்கு முன்னாலேயே தரிசனத்திற்கு வந்திருந்த ஜனங்களின் கூட்டமும் ஆகோஷமும் நிறைந்திருந்ததிவ்வளவவ்வளவென்று சொல்லி முடியாது.

(விருத்தம்.)

பொருள்வி ரும்புவர் புண்ணியம் விரும்புவர் புகழ்நல்
லருள்வி ரும்புவ ராயுளை விரும்புவ ரனைபாற்
கருவு றாதுமோக் கத்தையே விரும்புவர் கணக்கிற்
பெருகு நீத்தமே போலவ ணிறைகின்றார் பெருக்கே.

அஃதென்னசொல்ல! கிருஷ்ணா!!

(எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

முகமனு திகளோ டடிபணி வார்க்கு
முற்றிட வவரவர் கொள்கை
மகிழ்வினோ டவர்கட் கபயநல் வரமும்
மந்திர கக்ஷைகளும் வழங்கித்
திகழுமால் இரைவதச் சிகரவான் கிரியிற்
சிறந்ததோர் பெருங்குகை யதனுட்
டகுமொரா தனத்திற் சைலநா யகன்போற்
றழைக்கின்றார் யதிசக்ர வர்த்தி.

(வசனம்) ஆனால், கிருஷ்ணா! அச்சன்னிதான மகிமை சாற்றற்கெளிதன்று. எவரெவர் எக்கொள்கையுடன் தரிசனத்திற்கு வருகின்

ஞர்களோ, அவரவர் தங் கொள்கை யெல்லாம் அவ்வாறேஸித்தி பெறுமென்பதிற்றடையில்லை. கிருஷ்ணா! அவ்வெதீந்திரரின் முகத்தில் பிரமதேஜஸ் ஜொலிக்கின்றது. கேள்.

விருத்தம்.

இருக்கின் முடிவி விருக்கின்ற
ஏகப் பிரமப் பரஞ்சுடரே
உருக்கொண் டெழுந்த தெனவிளங்கு
மொளிகொண் மேனி யுடையவராய்ப்
பெருக்குங் கருணைத் திருக்குகளும்
பிறங்கு மந்த்ர ஜபமணியும்
உருக்குங் காண்போர் மனதையென்ன
ஒளிர்கின் றார்முத் தண்டமுனி.

(வசனம்) ஓ! ஓ! கோபாலகிருஷ்ணா!! அந்த மகச்சன்னிதான விசேஷம் வழுத்தற்கெளிதன்று. அனேகர் தரிசனத்தைப் பெற்றுப் பலவிதப் பலவர்க்கங்களைச் சமர்ப்பிக்கின்றனர். அவ்விசேடத்தைப்பற்றி அதிகமாய்ச் சொல்வதிலென்? யாதொருகுகைக்குச் செல்வதற்கு ஓர் ஒற்றையடித் தடங்கூட முன் இல்லாதிருந்தது. இப்பொழுது ஜனங்களின் போக்கு வரவுகளினாற் பன்னிரண்டு பாகம் அகலமுள்ள ஒருபெரும் பாட்டையாக ஆய்விட்டது.

கிரு. (தன்னுள்) ஆ! ஆ! எல்லாம் நம் சங்கற்பம் போலவே சரியாய் நடந்து கொண்டிருக்கின்றன. இதனால், அவ்வெதிராஜனுடைய பிரஸித்தி இவ்வுலகமெல்லாம் பரவிவிட்டது. இதற்குள், இவரது பிரக்யாதி நமதண்ணா அவர்களின் காதுகளிலும் போய் நிறைந்தாய்விடும். வெகு பாரமாயிருந்த இப்பெருங்காரியம் அனேகமாய் முடிவாய்விட்டது. இனிப்பாக்கியுள்ளதுஞ் சரியாய் நடக்கும். (வெளிப்படை) ஆம், ஆம், மித்திரவரரே! இவ்வளவு சொற்பகாலத்துள் அவ்வெதீச்வரரின் பெருமை இவ்வளவு பிரஸித்தி பெற்றது, நிரம்ப ஆச்சரியமாயிருக்கின்றது.

**விது.** ஆ! கிருஷ்ணா! இதுவென்கொல்? இப்படிப்புகல்கின்றனை. ஏன் தான் பிரஸித்தியுண்டாகமாட்டாது? அஜகதிஞாயமாய் உலக சுபாவமிருக்குமென்பதறியாததா? அவ்வாறே முன்செல்கின்ற ஓர் அஜமானது ஒரு அகழிற்போய் விழுந்தாலும், மற்றவைகளும் அதிலேயேபோய் வீழ்வதற்கிணங்க, நம்துவாரகாபுரியில் ஒரு விசேஷ ஸங்கதி நிகழ்ந்திருக்கின்றது. என்னெனில்? நம் குருநாதரான முக்காலமுந்தெரிந்த கற்கமுனிவர், தமதாச்ரமத்தில் வந்திருந்த வித்வான்களான சில வேதியர்களுடன், ஏதோ ஒரு விஷயமாய்ச் சம்பாஷித்துக்கொண்டிருந்தபோது, மத்தியிற்றமது தேகத்தில் ஒரு பூதப்பிரவேசமானதுபோலாவேசங்கொண்டு, திடுக்கென்றெழுந்து, நினைத்திராத லாபங் கிடைத்ததென்று சொல்லிக்கொண்டு, விரைந்தோடினர். அங்கிருந்தவர்யாவரும்பயந்து நடுநடுங்கிக்கொண்டு, என்னவென்னவென்று பின்றொடர்ந்தோடினர்.

**கிருஷ்.** (உத்வேகத்துடன்) ஆ! ஆ! எப்படி? எப்படி? உண்மைதானா? மேலென்ன நடந்தது?

**விது.** ஓ! ஓ! சகோத்தமா! உன்பாலுண்மையுரைக்காது மித்தைவசனமும் விளம்புவதுண்டோ? கற்கமுனிவரே சாக்ஷியிக் கதைக்கு. "வானரம்ஓட வாலும் பின்னோடிற்றென்னுங்கதைபோல்" மாமுனிவர் முன் விரைந்தோட, வகையறியா மறையவர் பின்னருண்டோட, மற்றுமங்காங்கேயுள்ள மனிதர்பலரும் வந்துவந்து கூட, ஆகவே இவ்வாறு அந்தபரம்பரையாய் வந்து சூழ்ந்துகொண்ட அனேக ஜனங்களுடன், கற்கமுனிவர் ரைவதகிரிக் குகையில் வயிக்கின்ற அவ்வெதீச்வரர்தம் சன்னிதிபோய் நின்று, அவரது தாட்டாமரைகளிற் சாட்டாங்க தண்டஞ்சமர்ப்பித்து, நெக்குருகிப்பணிந்தெழுந்து, ஆனந்தக் கூத்தாடிப் பரவசமாய்த் தோத்திரித்துப்புகழாநின்றனர். அங்ஙனமே மற்றனைவரும் அடிகளது திருவடிகளிலேத்திப் போற்றித் தொழுதிறைஞ்சாநின்றனர். ஆகவே, திரிகாலமுந் தெரிந்த மஹான் கற்கமுனிவர் இப்படிப் பிரியபக்திகொண்டு வணங்கியிருக்கின்றவதந்தியானது, இப்பட்டண முழுவதும் வியா

பித்து விட்டதென்றால், ஸ்வாமிகளது பிரக்கியாதி பரவுதற்கென்ன தடை? ஆக இப்படியே ஜனங்கள் கூட்டங் கூட்டமாய் அங்குபோய் நிறைந்து போனார்கள்.

கிருஷ். (தன்னுள்) ஆச்சரியம்! ஆச்சரியம்! எல்லாங் குருகிருபை, எல்லாங் குருகிருபை. என்மீது குருநாதரின் கிருபை குடிகொண்டிருப்பதால் ஒன்றுங்குறைவில்லை, ஒன்றுங்குறைவில்லை. நம் காரியம் பூர்ணமாய்ச் சித்திபெறுமென்பதிற் சற்றுமையமின்று. ஹா! ஹா! ஹா! அவரது அன்பே அன்பு.

கொச்சகம்.

என்னுடைய காரியங்க ளெல்லாம் நலம்பெறவே
தன்னுடைய தாய்வகுத்துத் தானே நடத்துகின்றார்
சொன்னபடி என்மீதிற் றூயகுரு நாதர்வைத்த
இன்னருட்பே ரன்பினுக்கோ ரெல்லையென்ப தில்லையன்றோ.

(குருவை நினைத்து) (தன்னுள்) பகவன்! குருநாதா!

கொச்சகம்.

தன்னருமைச் சீடனிவன் றன்மானங் காப்பதற்காய்த்
துன்னியஸா ஹஸத்தொழிலுந் தோதாய்ச் செயத்துணிந்தாய்
உன்னைப்போ லேதுதெய்வ மொன்றுண்டோ? நீயேயென்
அன்னையுந்தந் தையுமாவாய் ஐயா வருளையா.

சிங்காரக்கவி.

சற்க முனியே! கருணை லயமே!
சற்குரு வேநின் றாளே சரணம்
அருளே உருவாய்த் தெருள்கின் றதுவாம்
குருவே! நமசற் குருவே! நம:-

(வசனம்) சரி, சரி. நிரம்ப சந்தோஷம், நிரம்பசந்தோஷம். இத்தனை தூரம் நம் குருநாதரே நங்காரியசாதக நிமித்தம் கங்கணங் கட்டிக் கொண்டிருப்பதால், இனிக் கவலையில்லை. நிர்விக்கினமாக நிறைவேறுமென்பதிற் றடையில்லை. (வெளிப்படை)

ஆ! ஆ! நன்று, நன்று. வக்கிரதுண்டரே! வர்த்தமான மிக்கவு நன்று. அஃதிருக்கட்டும். அவ்வெதீச்வரரைக் காண்டற்குச் சிற்சில பலவர்க்கங்களும், மிட்டாய், லட்டு வகையறாப் பணியாரங்களும் கொடுத்திருந்ததை என்செய்தீர்? அவ்வெதீச்வரருக்குச் சமர்ப்பித்தேதாவதங்கிருந்து பிரஸாதங் கொணர்ந்தீரோ, அல்லது சும்மாதான் வந்தீரோ?

விதூ. (தன்னுள்) அடட! இவன் இதை மறந்துவிடுவானென்றல்லவோ நினைத்திருந்தோம். இவனா மறக்கின்றவன்? இவனிடத்தெதையும் ஒளிக்கமுடியாது. (வெளிப்படை) அதையுஞ் சொல்வேன் அன்புடன் கேளாய். யான் அப்பொழுது கேவலம் வனமிருகங்கள்போல அங்குமிங்கு மலைந்தலைந்து, அப்பர்வதத்தைச் சுற்றிச்சுற்றித் திரிந்துகொண்டிருந்ததில், அதிதாபமேலிட்டெனது பிராணன் பிரிந்துவிடுமோவென்ற நிலைமையில், நற்காலம் அங்கோர் நீரூற்றுத்தென்பட, அதனருகிலிருந்துகொண்டு, அப்பண்டபணியார பலவர்க்கங்களை அவ்வெதீச்வரரை உத்தேசித்து நிவேதனஞ்செய்துவிட்டு, யானே புஜித்துவிட்டேன். அப்பால், இரண்டுகை தீர்த்தமும் வாரிக் குடித்தேன். அதன்மேற்றான் கொஞ்சம் ஜீவன் பிறந்தது. நீ அவ்விதம் பலவர்க்கங்களைத் தந்திராதிருந்தால்; (தொண்டை தத்தளிட்டு) உன் உயிர்த்தோழனிவனை உயிருடன் காண்கின்றதேது?

[என்றுசொல்லிக் கண்களைத் துடைத்துக்கொள்கின்றனர்.]

கிருஷ். (சிரித்துக்கொண்டு) ஸபாஸ், ஸபாஸ். நன்று, நன்று. நமது கையிற்றீன்பண்டங்கள் கிடைத்தாற் பின்னை யென்னவாகும்? "சாப்பாடிற் சிறந்தோர் பார்ப்பார்" என்பது சரியாச்சுது. இருக்கட்டும். அங்ஙனம் நைவேத்தியமானதிலிருந்தாவது கொஞ்சம் பிரஸாதங் கொணர்ந்திருக்கலாமே.

விதூ. இல்லையென்றெப்படிச்செப்புவது? அதைப்பொதிந்திருந்த கடிதாசைக்கொண்டு வந்திருக்கின்றேன். இதோவாங்கிக்கொள்.

[என்று கடிதாசைக்காட்டிச் சிரிக்கின்றனர்.]

கிருஷ். ஸபாஸ். ஸபாஸ். நிரம்பசந்தோஷம். நிரம்பசந்தோஷம். நும் சாமர்த்தியத்திற்கு மெச்சவேண்டுவதுதான்.

விது. எல்லாம் சரிதான். ஓ! ஓ! சகோத்தமா! உன்பாலொரு சந்தேகங்கேட்கவேண்டியிருக்கின்றது. நின்னுயிர்த்தோழனுகிய என்பாலொளிக்காதுண்மையை உரைத்தருளல்வேண்டும். என்னெனில்? உனக்கோ, உன்னைத்தவிர மற்றொருவரிடத்தும் உண்மையான நினைப்புண்டாகமாட்டாது. ஏனெனனமன்றோ?

வெண்பா.

உன்னையன்றி யாரிடத்து முண்மைநினைப் பில்லாய்நீ
பின்னையெதிர் தோன்றுமிந்தப் பேருலகம்—தன்னையுமே
மித்தையென்பா யத்தகைய மேலோய்நீ அவ்வெதிரே
வித்தனையன் புற்றவித மென்?

கிருஷ். (புன்னகையுடன்) ஓ! மித்திரவரரே! இதற்கென்னகாரணம் வேண்டும்? நீர் சொல்லிய வார்த்தைகள் தத்துவார்த்தங்கள்தான். ஆனால், அவ்வெதீச்வரர் உலகத்திற் சஞ்சரிக்கின்ற கேவலந்துறவியல்லர். பின்னை? மா துறவினரேயாம். ஸகே! சற்றுங்கற்றுணர்வின்றித் தலைமுக்காடிட்டுச் சஞ்சரிக்கின்ற சாப்பாட்டுச்சாமியாரிவரன்று. பின்னை? "சாலவுந்தேர்ந்த, கோலமாமறைவாயினர்." தனிவுளராயினுங் கனிவுளரிவரே. ஆதலின், அத்தகைய மஹான் இவர் வழிவசமாய் வரக்கடைத்ததனால், இவர் நம் துவாரகாபுரியில் வந்திருக்கவேண்டும். அதனாற்சகலசௌபாக்கியங்களும் மேன்மேலுமுண்டாகவேண்டும், என்பதுதானெனதெண்ணம். இதைத்தவிரக்காரணமற்றொன்றுமில்லை.

விது. அடே! அடே! நன்று. நன்று. எத்தனையுண்மையடா? மெய்யென்று பெயரிட்டு விளங்குகின்ற உன்றேகமுற்றிலுமே பொய்தானே. அஃதிருக்கட்டும். இவ்வளவு மஹாத்துவமுள்ள ஸாது ஒருவரிருக்கின்றாரென்பதுனக்கெப்படித்தெரிந்தது?

கிருஷ். அதனைக்கண்டுரைத்தனர், அக்கற்கமுனிவரே.

விது. ஆ! ஆ! அப்படியோ? சரி. சரி. இப்பொழுதுதான் அத னுண்மை நன்குவெளிப்பட்டது. இவையெல்லாம் உனது கட்டு மானமென்பதிற்றடையில்லை. ஆனால், இதற்குள் கற்க முனி வரும் உட்பட்டவராயிருக்கின்றனர். எல்லாம் நன்கு காதலாமல கம்போல்விசதமாயிற்று. ஏ! ஏ! கோபாலகிருஷ்ணா!! இன்று, நேற்று, நின்னுடைப்பழக்கம்? வெகுநாளனுபோகமெனக்கில் லையா? நீ எதற்காகவோ இப்படி லீலை செய்துகொண்டிருக் கின்றாய். ஆனுலினைதப்பற்றிப் பலராமரிடம் பிராது சொல்லப் போகின்றேன்.

கிருஷ். (சிரித்துக்கொண்டு) அட! சீ, மூர்க்கசிகாமணியே! என்ன? என்னபிதற்றுகின்றாய்? நீ என்னபிராதுசொல்லப்போகின்றாய்? அதினுனக்கேதேனுங்கெடுதலேற்பட்டதா?

விது. அடே! அடே! நீ அதைக்கேட்டாலன்றோதெரியும். நேற்று நம்மூரிலுள்ள ஆண் பெண் அடங்கலுந் திரண்டு ஸாமியார் சன்னிதியிற்றரிசனஞ்செய்யவந்தார்கள். அதனுள், எனது பாரியாளும் அங்குவந்து நிற்கக்கண்டனன். என்ன சொல்ல ட்டும்? அந்த முண்டை எனக்குக்கூடக்கொடுக்காமல், ஒரு கூடைநிறைய மணியாரஞ்சுப்பழங்களைக்கொணர்ந்து, ஸாமி யார்க்கெதிர்ப்பிற்கொட்டி, வணங்கினின்றனள். அச்சமயம் யான் அங்கிருப்பதை அவளுக்குத்தோற்றிவைக்கவில்லை. அப் பொழுதெனக்குவந்தகோபம் அளவிடமுடியாது. இத்தடிக் கம்பினுற் சாமியாருக்குப் பாதபூஜை நடத்தியிருக்கலாம்.

கிருஷ். (சிரித்துக்கொண்டு) அஃதிருக்கட்டும். நமது பாரியாள் அவ் வெதிச்வரரிடம் என்ன வரங்கேட்டுக்கொண்டனள்? அதைச் சொல்லும்.

விது. அது என் மனத்திற்கு விரோதமானதாயிருக்குமானால், அவ் விடத்திலேயே அவள்கதை முடிந்திருக்குமே. அப்படிக்கொன் றுமில்லை. அவள்கேட்டுக்கொண்ட வரமாவது:—"இந்த அதி சுந்தரரான எனது பர்த்தாவையே எந்த ஜன்மத்திலும்யான டையவேண்டும்." என்றே.

கிருஷ். அடே! அடே! அதி சுந்தரரோ நீர்? சபாஸ்! சபாஸ்! என்னென்றுரைப்பது? உலகத்தில் கண்ணில்லாரெல்லாம் உம்மைச் சுந்தரவானென்றுதானுரைப்பார்கள்.

[அப்பால், அவசரத்துடன் திரையைத்தள்ளிக் கொண்டு, துவாரபாலகன் பிரவேசிக்கின்றனன்.]

துவாரி. ஜய. ஜய. மஹாராஜா!
பெரிய மஹாராஜா அவர்கள்.........

கிருஷ். (பரபரப்புடன் எழுந்து) எங்கே? எங்கே?

துவாரி. பெரிய மஹாராஜரவர்கள், ஸ்ரீ கற்கமுனிவரிஞச்சிரமத்திலிருந்து வெளிவந்ததும், சுபத்திராதேவியின் கன்னிகாமாடத்துட் சென்றிருக்கின்றார்கள். தங்களையும் அங்குவரும்படி கட்டளையிட்டருளினர்.

கிருஷ். ஸரி. ஸரி. நிரம்பசந்தோஷம். (விதூடகரைக்குறித்து) ஓ! வரிசையிருந்த வக்கிரதுண்டரே!! எல்லாம் இருக்கட்டும். தங்களுக்கின்று, மிகவும் சிரமத்தைக்கொடுத்ததற்காக மன்னிக்கவேண்டும். யானிப்பொழுது, சுபத்திரையின் கன்னியாமாடத்தில் அண்ணு அவர்களைக்காணச்செல்கின்றேன். தாங்கள் இப்பொழுதே வீட்டுக்குச்சென்று விச்ராந்திசெய்துகொள்ள வேண்டும்.

விதூ. நன்று. நன்று. அங்ஙனமேயாகட்டும். அட! கோபால கிருஷ்ண!! உனக்குச்சதா மங்களமுண்டாகட்டும். (என்று சொல்லிச்சென்றனர்.)

[கிருஷ்ணனுஞ் செல்கின்றனர்.]

[அப்பால், மஞ்சத்திற்சயனித்து நித்திரைசெய்கின்ற மாதிரி, சுபத்திராதேவியும், ஒருபக்கம் இரண்டு சகிகளும், மற்றோர் பால் பலராமருமாகப் பிரவேசிக்கின்றனர்.]

பலராமர். (சகி ஒருத்தியைக்குறித்து) அடீ! இப்பொழுது, சுபத்திரையின் தேகஸ்திதி என்னமாயிருக்கின்றது?

ஸாரங்கநயனே. மஹாராஜ! யாதொரு சுபத்திராதேவி நிர்மித்தமாய்க் காணுமற்போய் மறுபடி இம்மாளிகையில், இந்தமஞ்சத்தில்,

இப்படி நித்திரைசெய்கின்றவளாகவே, எப்பொழுது காணப்பட்டனளோ, அன்றுமுதல் அவள் தேகஸ்திதி ஸரியாய் ஸ்வாதீனப்படவில்லை. அஃது நோய்க்குற்றமென்றும், பேய்க்குற்றமென்றுங் கண்டறியத்தோன்றவில்லை.

அதை என்னென்று சொல்கின்றது?

(எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.)

பேய்பிடித் தவள்போற் சுபத்திரா
 பிரமையுற் றவசமாய்ப் பிணங்கி
வாய்பிதற் றுவளால் மயங்கியே கிடப்பள்
 மத்தியிற் பதறியங் கெழுவள்
தீயுயிர்ப் புறுவள் விகாரசத் தத்தொடுந்
 தேம்புவள் கண்ணினீர் தெறிப்பத்
தேய்பிறைக் கிணையா யிளைத்தன டேகஞ்
 செப்பினே னிவளுள செய்தி.

(சௌனம்) மஹாராஜ! எப்பொழுதிவள் காணமற்போய்த் திரும்பக் காணக்கிடைத்தனளோ, அப்பொழுதே அடியாள்யான்றன் பக்கத்திலிருந்தாச்வாஸஞ்செய்துகொண்டிருந்தவள், தட்டியெழுப்பினால், அப்பொழுதோர் விகாரசத்தத்துடன், பைத்தியம்பிடித்தவள்போல் நாலுபக்கங்களிலும் பரக்கப் பாக்க விழிக்கின்றனள். அப்பொழுது தழுவிக்கட்டிக்கொண்டு எவ்வளவுதேறுதற்சொன்னாலும், ஸமாதானமாகின்றதில்லை. நெஞ்சுப்பதட்டமுந்தீர்கின்றதில்லை.

கிருஷ். (அவசரத்திற் பிரவேசித்து, எதிர்வந்து) அஃதென்னடீ? விகாரசப்தமென்றுலெப்படி? அம்மா திரியைச்சொல்.

பலரா. (அசட்டையுடன்) அடட! கிருஷ்ணா! இஃதென்ன ஸமாசாரமென்று கேட்கின்றாய்? குழந்தையோ மிகவும் பயந்திருக்கின்றனள். அச்சமயம்வந்த சத்தமென்னவென்றுலென்ன சொல்கின்றது?

கிருஷ். ஆ! ஆ! அஃதென்கொல் அப்படிச்சொல்கின்றீர்கள்? அண்ணா! அதேமாதிரியாய் அந்தச்சப்தத்தைத் திரும்ப ஒருதரங்கேட்டால், அதிலிருந்து ஏதாவது சிலவார்த்தைகளுங் கலந்துவரும். அப்போததன்காரணத்தைப்பற்றி யூகிக்கலாமல்லவா? அது ஒரு கவலையாயென்மனதைக் கலக்கிக்கொண்டிருக்கின்றது.

ஸாரங்கநயனா. அச்சமயம் அவள் சொல்லிக்கொண்டெழுந்த வார்த்தை இன்னதென்றுசொல்ல அவ்வளவு ஞாபகமில்லை.

புட்பாவதி. எனக்கது ஞாபகந்தான்.

கிருஷ். ஆனால், நீ சொல்லடி. எப்படி அச்சப்தம் வந்ததோ, அதே மாதிரியாய்ச்சொல்.

புட்பாவதி. மஹாராஜ! அவள் சொல்வது; "இரக்த உடைதரித்த மஹாபுருடர் எங்கே? எங்கே?" என்றுதான்.

கிருஷ். ஓ! ஓ! அதிலென்ன அர்த்தமிருக்கின்றதோ? தெரியவில்லை. என்புத்தியோ கலங்கியிருக்கின்றது.

பலரா. கிருஷ்ணா! அதைப்பற்றிய சங்கதியாவும், யான் நன்கு தெரிந்துகொண்டுதானிருக்கின்றேன். அவ்விஷயமாய்க்கவலைப்படவேண்டாம்.

கிருஷ். என்ன? என்ன? சுபத்திரை காணமற்போய்த்திரும்பக்கிடைத்த விபரம் இன்னதென்று தெரிந்திருக்கின்றீர்களோ? ஆனால், எனக்கதை நன்கு விளக்கவேண்டும். அண்ணா!

பலரா. கிருஷ்ணா! சொல்கின்றேன். கேட்கக்கடவாய். அட, கிருஷ்ணா! எந்தச்சமயத்தில் சுபத்திரையைக்காணவில்லையென்ற ஸமாசாரம் காதில் வீழ்ந்ததோ; அப்போதே என்தேகமெல்லாம் நடுநடுங்கி, இதய கமலம் தபிக்கவாரம்பித்தது. அச்சமயம், எனக்கு ஒன்றிரண்டு மூன்று சந்தேகங்களுண்டாயிருந்தன. அவையாவன:— "அந்தத்துரியோதனவரவிஷயத்தில் அவள் திருப்தியில்லாதவளாயிருந்ததனால், அவள் கோபத்

தினுற் பிராணத்தியாகஞ்செய்துகொண்டனளோ? என்ப தொன்று. அல்லது, அவளாசைக்குகந்த அந்தப்பார்த்தனே எவ்வாறோ அச்சமயம் வந்து, அவளை அபகரித்துச்சென்றுவிட்டானோ? என்பதொன்று. இன்னமும், கிருஷ்ணா! என்னென்று சொல்லட்டும்? மேலும், இப்படியுமொருபாவம் நினைத்தேனடா. அதைச்சொன்னாலுனக்குக்கோபம்வருமோ,என்னவோ? ஆயினுஞ்சொல்கின்றேன். "உன்னுடைய சூதினால் ஏதேனும் மறைபட்டிருப்பாளோ?" என்று, இவ்வொன்றுங்கூட நினைத்தேனடா. அப்பால், திரும்பவும் அவள் கன்னியாமடத்தில் நித்திரித்துக்கொண்டிருப்பதைக்கேட்டவுடனே, முந்திய சங்கைகளிரண்டும் ஒழிந்தன. பின்சங்கையொன்றுமட்டுமிருந்துகொண்டிருந்தது.

கிருஷ். (புன்னகையுடன்) ஓ! ஓ! அண்ணா! அந்தச்சங்கை இப்பொழுமிருந்துகொண்டுதானிருக்கின்றதோ?

பலரா. (கிருஷ்ணன் கையைப்பிடித்துக்கொண்டு) சீ, சீ, அந்தச்சம்சயமுங் கற்கமுனிவரால் நிவிர்த்தியாய்விட்டது.

கிருஷ். நன்று. நன்று. அண்ணா! முக்காலமுமுணர்ந்த கற்கமுனிவர், அவ்விஷயத்தைப்பற்றி என்ன சொன்னார்களோ?

பலரா. ஆ! கிருஷ்ணா! கேட்கக்கடவாய். நம் குருநாதரான கற்கமுனிவர் அவ்விஷயத்தைப்பற்றி ஞானதிருஷ்டியாற்றெரிந்து எமக்குரைத்த சங்கதியிதுவேயாம்:—

ஆசிரிய விருத்தம்

"பகர்பூத பௌதிகப் புவனதெய் வங்களாற்
பலவவஸ் தைகள் பராவிப்
பந்திப்ப துலகச்சு பாவமா மதனுளே
பைசாச வகைய னந்தம்
நிகரில்மா யாவிகள் அந்தரதி வாஸிகள்
நீநிசா சர ஜாதிகள்
நீசகந் தர்வாதி தேவதைகள் பலவாகும்
நீணிலத் தினில் யாருமே

தருமண மியற்றிடில் வருவரர் குலங்களிற்
றமக்குமுற் கோப முளதேற்
சாற்றுமிப் படிக்கேலி செய்வது வழக்கமாந்
தற்கால ஸம்பவ மதே
மிகவுமிது போற்கதைகள் கேட்டிலைகொல்? பலசங்கை
விட்டொழுத் திடுக" வென்றே
வேளொழுன் றுந்தெரிந் தாளவல் லாரிது
விளம்பினா ருளங்க ளிந்தே.

(வசனம்.) கேட்டீரோ? கிருஷ்ணா! அம்மஹா முனிவர் வாயால் இந்தச் சமாசாரஞ் சொல்லக்கேட்டவுடன், என் மனதிலிருந்த எல்லாச் சங்கைகளுந் தனியே நழுவிவிட்டன. இப்படிப்பட்ட ஸம்பவம் ஸம்பவித்திருக்கக்கூடுமென்றே என் மனதில் நிச்சயமாய்த் தோன்றிவிட்டது.

கிருஷ். ஆ! ஆ! அப்படியா? சரி, சரி. அங்ஙனமாயின், இந்தக் கல்யாணவிஷயத்தில் ஏற்பட்ட கந்தர்வகோபமானது, நம் பக்கத்திலோ? துரியோதனன் பக்கத்திலோ?

பலரா. நம்பக்கதிலன்று. அத்துரியோதனன் பக்கத்திற்றான் கோபமுற்றிருக்கின்றதாம். அதற்குங்கூட தக்க சாந்திசெய்து கொண்டாற் பிந்திய முகூர்த்தஞ் சரியாய் நடக்குமென்றும் சொல்லியருளினர். அவ்வாறே முன்னதாகவே, கந்தர்வாதி தேவதைகளை வழிபட்டுத் தக்க சாந்திசெய்துகொள்ளும்படி, உடனங்கிருந்தே அத்துரியோதனனுக்கு விபரமான பத்திரிகையொன்றெழுதி யனுப்பிவிட்டுத்தானிங்குவந்திருக்கின்றேன்.

கிருஷ். (ஆனந்தத்துடன்) (குருநாதரை உத்தேசித்து, கை அஞ்சலி செய்துகொண்டு)

(கோச்சகம்.)

சுத்தநிர்வி காரியென்மேற் சூழ்துரா ரோபசகம்
வைத்தவென்று ணவர்மன மாசகற்றி உள்ளபடி
தத்வோப தேசஞ்செய்து சந்தேகந் தீர்த்தெனெனி
முத்தனுப்ச் செய்துவைத்தாய் முனியே குருமூர்த்தி.

(கொச்சகம்.)

சந்ததமுஞ் சீடருளத் தாபஹரா மாய்ப்பெருகு
முந்தன்றிரு வாக்கமுத மூற்றெடுத்து வந்ததனுற்
சிந்தைக்கொ திப்பகன்றேன் தேகங் குளிர்ந்தேனுன்
இந்தப் பெருமுதவிக் கேதுகைம்மா றெங்குளதே.

(வசனம்.) ஆ! ஆ! சற்குருநாதா! தேவரீருடைய ஆப்த வசனத்தினு லுண்மைச்சீடனுகிய என்னைத் தோஷமுக்தனுய்ச் செய்து வைத்த இப்பேருதவி என்றென்றும் மறக்கற்பாலதன்று. (மனதைக்குறித்து) ஏ! ஏ! என் ஹிருதயா! நீ மஹா பாக்கியசாலியாக வர்த்திக்கின்றுய். நீ தயாமூர்த்தியாகிய நம் சற்குருநாதரின் தாட்டாமரைகளைச் சந்ததமுஞ் சிந்தனைசெய்யக்கடவாய்.

இராகம். கேதாரம். ஆதி. தாளம்.

[பல்லவி.]

குருபாத மேநினை மனமே—நீயனுதினமே

[அனுபல்லவி.]

கருவுறு ஜனனவு பாதியை நீக்குங்
கைவல் லியநற் பதந்தனிற் சேர்க்கும் (குரு)

[சரணங்கள்.]

அனர்த்த வாபத் தெல்லாம் நீக்கும்
கனத்த சம்பத் தனைத்து மோங்கும் (குரு)

துன்மை விலக்கித் துயர்தவிர்த் தாளும்
நன்மை யெலாந்தரும் நமக்கெந் நாளும் (குரு)

புவியில் நமக்கருள் பூண்டது திதிக்குங்
கவிமுத்து சுப்பன் கனிவொடு துதிக்கும் (குரு)

கிருஷ். (பலராமரைக் குறித்து) அண்ணு! என் மனது அவ்வர்ச்சுனபக்ஷத்திலேயே இருந்துகொண்டிருந்தாலும், பிரத்தியக்ஷத்திற் றங்கள்மனதிற்கு விரோதமாய்க் கபடஞ்செய்வேனென் றெப்படி நினைத்தீர்கள்?

பலரா. கிருஷ்ணை! மனிதர்கட்குளேதாவது சங்கடங்களேர்ந்தாற் பற்பல எண்ணங்களுண்டாகத்தான் செய்யும். இருக்கட்டும். அவ்விஷயமாய் இப்பொழுதென்ன விவகாரம்? ஈச்வர கிருபை யாற் சகல சங்கடங்களும் நிவிர்த்தியாய் விட்டன. திரும்பவும் கல்யாணநாளோ ஒரு நாலுமாததூரந் தள்ளியிருக்கின்றது. ஆனலதிலேற்பட்ட வருத்தமெல்லாம் துரியோதனராஜன் கல்யாணத்திற்கென்று வந்து வியர்த்தமாகப் பரிபவத்துடன், திரும்பிப்போகும்படி நேர்ந்ததென்ற குறைச்சலொன்றுதானே. அவ்வருத்தம் நமக்குமிருக்கத்தான் செய்கின்றது. அதற்கென் செய்வது?

கிருஷ். ஆ! அண்ணை! அஃதெப்படியேனிருக்கட்டும். இப்பொழுது சுபத்திரையின் தேகஸ்திதிக்கேதாவது, தற்கால சாந்தியாகவாவது, சிகித்ஸை செய்யவேண்டுவ தவசியமாகையா லதைப்பற்றி யென்ன யோசித்திருக்கின்றீர்கள்? இரண்டு தினத்திற்குள் அவளுடம்பரையுடம்பாய் விட்டதே.

பலரா. ஆம். ஆம். கிருஷ்ணை! அதைப்பற்றி நன்குணர்த்தினை. இப்பொழுது, ஓர் மஹத்தான அற்புத சமாசாரமொன்று உன்னிடஞ் சொல்வதற்காகத்தான் உன்னை அழைத்தது. அதற்குட் சொல்லமறந்துவிட்டேன். அதைச்சொல்கின்றேன். கவனித்துக் கேள்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

தோற்றிரைவ தாக்கிரியில் வைராக்யப் பெருங்குன்றாய்ச்
சொலிக்குஞ் ஞான
மேற்றியநல் லொளிவிளக்கா யிலங்கநர வேடத்தெ
தீந்த்ர ராகிப்
போற்றுவர்க்கெ லாநலமும் பொருந்திடநல் லருள்புரியும்
புண்ய மூர்த்தி
சாற்றிடுமெ காலொருவர் கனிவுறநற் றவம்புரிந்து
தழைக்கின் றாராம்.

(வசனம்) ஆ! கிருஷ்ணா! அவ்வெதீச்வரரின் பெருமையைப்பற்றி நம்குருநாதரான கற்கமுனிவரும் மிகமிகச் சிலாகிக்கின்றனர். அவரே அம்மகானிடத்திற் சுபத்திரையின் தேகஸ்திதியைத் தெரிவித்து, அங்கிருந்து தீர்த்தப்பிரஸாதமும், ஒரு ரக்ஷைத் தாழ்த்தும், கொண்டுவந்து கொடுத்திருக்கின்றனர். அந்தத் தீர்த்தத்தை இவண்மேற்றெளித்து, பிராசனமுஞ் செய்வித்து, அவ்விரக்ஷைத்தாழ்த்தை இவள் வலக்கையிற் கட்டியிருந்தால், இவளுடைய எல்லாப் பயங்களும் நீங்கி முன்போலுடம்பு பிரகாசிக்குமென்று சொன்னார்கள். அவ்விதஞ் செய்யவேண்டுவதின் நிமித்தந்தானிப்பொழுதிங்ஙனம் வந்தது.

கிருஷ். ஆ! ஆ! அப்படியா? ஆனல், நிரம்பசரி. எனவ்விதஞ் செய்தற்கென்ன தாமதம்? (ஒரு தாதியைக் குறித்து) அடீ! சுபத்திரை நித்திரையினின்றும் எழுகின்ற சமயமாயிருந்தால், அவளைச் சாந்தமா யெழச்செய்ய வேண்டும்.

புட்பா. ஆம். இப்பொழு தெழுப்பவேண்டுவது தான். (மெள்ள அசைத்து) அம்மணீ! அம்மணீ! எழுந்திருங்கள். எழுந்திருங்கள்.

(சுபத்திரை திடுக்கென்று பதறி எழுந்துட்காருகின்றனள்.)

சுபத். (பைத்தியம் பிடித்தவள்போலபினயித்து) இதேதடீ? யானெங்கிருக்கின்றேன்? இரக்த உடைதரித்த மஹாபுருடர் எங்கே? எங்கே?

புட்பா. மஹாராஜ! இதோ, இதோ, மங்கை சிரோன்மணியின் வார்த்தையைக் கேட்டீர்களோ? இப்படியே தான் இவர்கள் நித்திரையினின்றெழும்போ தெல்லாம். முதலில் இந்தவார்த்தை தான். இப்படித்தான் விகாரசப்தம். (சுபத்திரையைக் குறித்து) ஆ! ஆ! அம்மணீ! நமதந்தப் புரத்திற்றானிருக்கின்றீர்கள். என்ன? தெரியவில்லையா? இதுவென்கொலிப்படிப்புகன்றீர்கள்? இதோ பார்க்கவில்லையா? தங்களைப்பார்க்க நம் இரண்டு மஹாராஜர்களும் வந்திருக்கின்றார்களே.

சுபத். (பலராம கிருஷ்ணர்களை எறிட்டுப்பார்த்து) ஹா! அண்ணா! ஹா! கிருஷ்ணா! ஏன் சும்மா நின்றுகொண்டிருக்கின்றீர்கள்?

உட்காரக் கூடாதா? என்ன? என்ன? இங்கிரண்டுபேர் தாதிகளிருந்தும், வந்தவர்கட்குத் தக்க ஆதனமெடுத்துப்போட வேண்டுமென்பது தெரியவில்லை.

[தாதிகளிருவரும் பரபரப்புடன் இரண்டாதனங்களை எடுத்து எதிரேபோடுகின்றனர்.]

(பலராமரும் கிருஷ்ணனும் தனித்தனி ஆதனத்தில் உட்காருகின்றனர்.)

பலரா. சரி, சரி. தங்காய்! உன் தேகஸ்திதி இப்பொழுது என்னமாயிருக்கின்றதென்பதை முதலிற் சொல்லு.

சுபத். ஆ! ஆ! அண்ணு! எனக்கென்ன உடம்பு? யான் இப்பொழுது திடகாத்திரமாய்க் கல்லுப்போலிருக்கின்றேனே. ஏன்?—(என்று சொன்னபிறகு) என் தேகஸ்திதியைப் பற்றி யார் என்ன சொன்னார்கள்? ஆ! அண்ணு! சும்மா சும்மா வேடிக்கைபண்ணவேண்டாம். இந்தச் சடலம் ஒழியவேண்டியதுதானே. அப்படிச் செய்கின்ற தெய்வ மெனக்கெங்கேயிருக்கின்றது?

பலரா. அடி தங்காய்! இது என்ன பேச்சென்று சும்மா பேசுகின்றனை? இப்பொழுதிந்தக் கல்யாண விக்கினகாரியத்தில், உன் பேரிற் குற்ற மொள்ளளவுமில்லையென்பது நிச்சயமாய்த் தெரிந்துகொண்டாய்விட்டது. அதில் நடந்த ரகசியம் வேறு. அதில் உன்பேரிற் குற்றஞ்சொல்வேனென்று நீ கோபிக்கவேண்டாம்.

கிருஷ். அடி, தங்காய்! இதோ பார். அண்ணு அவர்கள் உனக்காக ஒரு மஹானிடத்திலிருந்து தீர்த்தப்பிரஸாதங் கொண்டுவந்திருக்கிறார்கள். இதைப் புரோக்ஷணஞ்செய்து பிராசனமுஞ் செய்துகொண்டால், ஸர்வபாதைகளும் நிவிர்த்தியாய்விடும். மற்றப்படி ஒரு இரக்ஷைத் தாழ்த்துங் கொண்டுவந்திருக்கின்றார்கள். அதையுங் கையிற் றரித்துக்கொண்டால், ஒருவித பயமுமேற்படாது.

சுபத். (தன்னுள்) என்ன ஆச்சரியமிது? இந்தத் தீர்த்தப் புரோக்ஷணத்தினுல் என் ஸந்தாபந் தீர்ந்துவிடுமா? (வெளிப்படை)

எதை யெதை எப்படி யெப்படிச் செய்யவேண்டுமோ, அப்படி யப்படிச்செய்துவிடுங்கள்.

கிருஷ். அண்ணு! நம் தங்கை சுபத்திராமணி சிறு பெண்ணுகயிருந் தாலும், நிரம்ப புத்திசாலி. இப்பொழுதிந்தக் கல்யாணத் திற்கு விக்கினம் நேரிட்டு வணங்காமுடிமன்னன் திரும்ப ஊருக்குப் போய்விட்டகாரியத்தில் இவளுக்கும் விசனமில்லை யென்றுதான் நினைக்கின்றீர்களோ?

பலரா. அடடா! எனப்படி? அவளுக்கதெல்லாந் தெரியக்கூடிய வயதில்லையா? அவளென்ன சிறுகுழந்தையா?

கிருஷ். (சுபத்திரையைக் குறித்து) அடீ! மங்கைக்கரசி என் றங்கை சுபத்திரா! யானுனக்கிப்பொழுது சொல்கின்ற வார்த் தைகளைக் கவனமாய்க் கேட்டுக்கொள்.

அகவல்.

குறித்த வரனைக் கொள்ளுமுன் காலம்
பிறித்ததென் றெண்ணிப் பேதாய்! வருந்தேல்
பங்கப் படுத்திய தெய்வமோ பங்கனம்
பங்கில்லை யென்பதும் பகர வேண்டுமோ?
வீண் காலமிது விக்கின முறினும்
ஆங் காலமஃது தடைவே யமையும்
அதுவுந்தா னெவ்வள வதிகநா ளில்லை
மதியொரு நான்கில் மன்றற் பொருந்தும்
அருமைத் துணைவியென் றண்ணு அவர்களுன்
பெருமைக் கிணங்கப் பிரியமுற் றிழைத்த
வரனெவ னென்று மதித்தாய்? பெண்ணே!
துரியோ தனப்பேர் சொலுமவ னலமிகு
வரகுண னுயர்ந்த மரபின னந்த
நரவர னுக்கே நாயக யாவாய்
மூத்தவர் கொள்கை முற்றுநீ அறியாய்
பார்த்த வரனே பலிக்கு முனக்கு
அப்பொழு தெந்தனை அகந்தை ஓங்குவை

செப்புமச் சுயோதனன் தேவியா கிடிலைமை
மதிக்கவுஞ் செய்வையா? வணங்கவுஞ் செய்வையா?
கதித்தநின் கௌரவம் கணக்க டங்குமா?

சுபத். (புருவபங்கத்துடன்) என்னடியம்மா. சீ, சீ, என்ன உபத்திரவமிது? இந்தத்தலைவலி எப்பொழுது நீங்கும்?

கிருஷ். (புன்னகையுடன்) அண்ணு! இவட்குத்தேகஜாட்டியம் பலமாயிருக்கின்றது. அதைச்சீக்கிரந்தீர்க்கவேண்டும். குருவாக்கியப்படி தீர்த்தப்புரோக்ஷணஞ்செய்து, ரக்ஷாபந்தனஞ்செய்து விடுங்கள். அதனுலாவது ஜாட்டியம் நீங்கட்டும்.

பலரா. ஆம். ஆம். (திரையை நோக்கி) யார் அங்கே? அந்தத்தீர்த்தப் பிரசாத ரக்ஷைகளை எடுத்துக்கொண்டுவா?

பரிசாரகன். (தீர்த்தப்பிரசாத ரக்ஷைகளுடன் பிரவேசித்து) மஹாராஜ! இதோ, இதோக்கொண்டுவந்துவிட்டேன்.

[பலராமர்வாங்கித் தீர்த்தத்தை அவண்மேற்றெளித்து இரக்ஷையை அவள் கையிற் கட்டுகின்றனர்.]

சுபத். (தன்னுள்) இதனுலென்னுகும்? எனது உபாதி இன்னதென்பதை யெண்ணுத இவர் செய்கின்ற உபசாரங்களாலென்னுகும்? என்னவோ, மஹான்களுடைய பிரஸாதமென்பதாலங்கீகரிக்க வேண்டியது தான். அன்றியும், அண்ணு அவர்கள் வார்த்தை தட்டவும்படாது.

பலரா. கிருஷ்ணு! யாம் இவ்விடத்திற்றுனே சும்மா இருந்துகொண்டிருந்தால், அவள் சகிகளுடனுல்லாசமாயிருக்கத்தடையாகும். அவள் அவர்களுடன் ஸரஸமாய் விளையாடிக்கொண்டிருக்கட்டும். யாம் செல்வோம்.

கிருஷ். ஸரி. ஸரி. (தாதியைக்குறித்து) அடீ! சுபத்திரையின் தேகஸ்திதியின் ஏற்றந்தாழ்வுகளை, அப்போதப்போது வந்து தெரிவிக்கவேண்டும். அவளுக்கிதமாய் நடந்துகொண்டிருங்கள். (சுபத்திரையைக்குறித்து) தங்காய்! யாம் சென்று வருகின்றோம்.

சுபத். (தலையை அசைக்கின்றனள்.)

பலரா. ஸரி. ஸரி. மெத்தசந்தோஷம். கிருஷ்ணா! என்னென்று சொல்ல நமது பாக்கியம்? நமது ஜன்மாந்தர புண்ணிய விசேஷங்களே, திரண்டுருக்கொண்டெழுந்ததெனத்திகழுந்திவ்வியத் திருமேனியரான, அவ்வெதிமஹானுடைய அற்புதாகமனம் தற்காலஞ்சம்பவித்திருப்பது, நமக்கு நற்காலமேயாம். கிருஷ்ணா! மகத்துகள்வரவு சகத்தினிலரிது. ஆதலின், அம்மஹானெழுந்தருளியது ஏதேதோ விசேஷமங்களத்தின் பொருட்டேயாகும். எனங்ஙனமன்றோ? கிருஷ்ணா! அத்தகைய மஹானை இப்பொழுதே போய்த்தரிசித்துவரவேண்டியதத்தியாவசியமாகின்றது. ஏன்? மஹத்ஸந்தரிசனம் மஹத்துவமுடையது. துக்கமொழிக்குந்துயோர்காக்ஷி. அடா! அடா! ஆச்சரியம்! ஆச்சரியம்!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மயலொழிக்குந் துன்பங்கள் வாராது காக்குமனை
மாசகற்றும்
அயர்வகற்றும் பயந்தீர்க்கு மாபத்தை விலக்கிடுமற்
றகபடம் நீக்கும்
துயர்தவிர்க்குங் கனசம்பத் துதவிடுநல் லருள்பழுத்த
தூய்மெஞ்ஞான
உயருணர்பெற் றோங்குகின்ற பெரியோர்தந் தரிசனத்தி
னொளிருங் காக்ஷி.

(வசனம்) ஆகையாலிப்பொழுதே நினைத்திராத கிடைத்திருக்கின்ற லாபத்தைதத்தவறிடாது போய்க்கைக்கொள்ளல்வேண்டும். நீயுங் கூடவேவரவேண்டும்.

கிருஷ். ஆ! அண்ணா! யானுமங்கேவரவேண்டுமா? தாங்கள் போய்த் தரிசித்துவந்தாற்சரிதான். ஏன்? வேரில் விடுகின்ற ஜலத்தால் விருக்ஷத்தின் மேற்கிளைகளெல்லாந்தழைக்கின்றவாறு, தாங்கள் போய்த்தரிசிப்பதிற்கிடைக்குஞ் சகல சௌபாக்கியங்களும் நாங்களும் அடைந்தவர்களாக ஆகின்றோமல்லவா?

பலரா. சீ. சீ. அவரவர் சாப்பிட்டால் அவரவர்க்குப் பசிதீரும். அஃ திருக்கட்டும். நின்னுடன்போய்த்தரிசித்து வரும்படியே கற்க முனிவர் கட்டளையிட்டிருக்கின்றனர். ஆகையாற்றடைசொல்லாமற் கூடவரவேண்டியதுதான்.

கிருஷ். அங்ஙனமாயின் அப்படியே வருகின்றேன்.

[என்றிருவரும் சென்றனர்.]

சுபத். அடி! ஸாரங்கநயனே! நீ முன்னதாகச்சென்று எனக்கு ஸ்நானத்திற்குவேண்டுவனவற்றைத் தயார்செய்யக்கடவாய். யான் சற்றுநேரங்கழித்துவருகின்றேன்.

ஸாரங்கநயனே. ஆ. ஆ. அங்ஙனமேயாகட்டும்.

[எனச்செல்கின்றனள்.]

சுபத். ஸகீ! புட்பாவதி! அந்தக்குண்டணி வாய்க்குப்பசிபோனது பார்த்து வாயிற் கதவை மூடித்தாளிட்டுக் கொண்டுவா.

புட்பாவதி. நன்று. நன்று.

[எனச் செல்கின்றனள்.]

சுபத். (தனியே) எனக்கெப்பொழுதுமே, அந்தச்சாரங்க நயனையைக் காணக்கரிக்கின்றது? ஏனெனில்? அவள் மிகவுங்கெட்டசுபாவமுடையவள். இங்ஙனம், யானென்னென்ன செய்கின்றேனோ, என்னென்ன சொல்கின்றேனோ, அதையெல்லாஞ் சுமைகட்டிக் கொண்டு அவ்விரேவதி மதினியிடத்திற்போய் ஒன்றுபத்தாய்ச் சொல்லி விடுகின்றது. யான் நினைக்கின்றேன்; இதற்காகவே தான் நம்பெரியமதினி இவளை நம்மிடம் வைத்திருக்கின்றன ளென்றே. இருக்கட்டும். இனியாவது அவள் விஷயத்தில் நாம் ஜாக்கிரதையாயிருந்து கொள்ளவேண்டும். அவளெதிர்ப் பிலந்தரங்கமான வார்த்தைகளொன்றுமே சொல்லக்கூடாது. புட்பாவதி மட்டிலும் என்னிடம் வாஸ்தவப்பிரிய முடையவள். எனது துக்கத்தைப்பார்த்து அவட்கும் மிக மிக வருத்தமுண்டு. அவள்தானென் செய்வள்? அவளோ மிகச்சாது.

புட்பா. (வந்து) அம்மணீ! வாயிற்கதவைச் சார்த்தித் தாளிட்டுக் கொண்டு வந்து விட்டேன்.

சுபத். ஸகி ! புட்பா ! சூதுக்காரியான அவள் நீபோகிறவரை அந்த வாயிற்படியிற்றனே நின்றுகொண்டிருந்தனள்?

புட்பா. ஆம். ஆம். அவளென்னைப் பார்த்தபிறகு தான் இறங்கிச் சென்றனள்.

சுபத். சரி. சரி. அஃதிருக்கட்டும். அடி! ஸகி! புட்பாவதி ! இதேதடி என்னுடைய கஷ்டம் மேன்மேலும் விருத்தியடைந்துகொண்டிருக்கின்றது ? இந்தச்சங்கடங்களெல்லாம் நிவிர்த்தியாய் எப்பொழுதென்மனம் சுகித்திருக்குமடி ?

ஆசிரியவிருத்தம்.

ஏதடி சகியெனது சிந்தைநோய் தீர்ந்துயான்
இன்புறுங் காலமுண்டோ?
இல்லாவிடிற்றுக்க மயமாயென் வாழ்நாள்கள்
இப்படித் தான்கழியுமோ?
பாதகத் தெய்வமும் மேதகு குலத்திலேன்
படைத்ததிப் பெண்ஜன்மமாய்ப்
பந்தத்துங்கைதி போற்பலநி பந்தனைகள்
பந்திப்ப விப்பாவியேன்
கோதறு குலத்தில்வந் தேன்பிறந் தேன்சிறு
குடிக்கொரு பெண்ணாய்ப்பிறந்தாற்
கொஞ்சமும் ஸ்வாதீன மில்லாம லிப்படிக்
கொடுமைவத் தைகளேற்படா
தாதலி னிதற்கினிச் செய்யும்வகை யறிகிலேன்
யாருடைய ஆசை எதனுல்
ஆருயிர்க் குச்சமா தானம தியற்றுவேன்
அங்கம் பறக்குதம்மா.

புட்பா. ஆ ! ஆ ! அம்மம்ம ! ஏன் சும்மாவிதனிக்கின்றீர்கள் ? இப்பொழுதிரண்டு தினங்கட்கு முந்தித்தான் இவ்வுடம்பு மறுத்தான சங்கடத்தை அடைந்திருக்கின்றது. அந்த வாட்டம் இன்னமும் நன்றாய்த் தீரவில்லை. அத்துடனிப்படிக் கவலையுமடைந்து கொண்டிருந்தால், மேலெப்படியாகும் ?

(என்றுசொல்லி அவள் முதுகைத் தடவுகின்றனள்.)

சுபத். அடீ! ஸகீ! புட்பா! நீ என்னதான் செய்யவேண்டுமென்கின்றாய்? (தொண்டைதத்தவிட்டு) அடீ! ஸகீ! உலகத்திற்றீதாகிய பெண்ஜன்மத்தை அடைந்த நமக்கெல்லாம், குலத்திற்கும், நலத்திற்கும், குணத்திற்கும், பணத்திற்கும், ஒன்றுக்கொன்றிசைந்து, வயக்கிரமம், ரூபம், தாரதரம், முதலியயாவும் பொருந்தி, இருமனமுமொருமனமாகிய உத்தம நாயகனையடைந்து, அவனுடன் சுகித்து வாழ்தலன்றோ சகல சௌபாக்கியமும்? அவ்வாறு அமையப்பெறுவிடின், அப்பெண் ஜன்மம் பிரேத ஜன்மமல்லாது மற்றெதை யதற்கிணையாய்ச் சொல்லலாம்?

(கோச்சகம்.)

தன்மனதிற் கேற்ற தகுவானல் லாவிடிற்பெண்
ஜன்மம்வீ ணல்லாற் சிறப்பென்கொல் தீவாழ்க்கை
கன்மகதி யால்மற்றோர் கயவர்க்காட் படுவதினுந்
துன்மரணஞ் செய்தற் சுகமன்றோ? பைங்கிளியே!

(ஷை கோச்சகம்.)

கூடப் பிறந்தாரே கொல்லநினைத் தாற்போல
நாடியெனைக்கெடுக்க நற்றுணிவு கொண்டதனால்
வாடுமென்சொற் கேட்பாரார் மாணிப்பாரார் பதரிற்
புடியிடித் தாலும்நோய் பற்றுமோ? பைங்கிளியே!

(ஷை கோச்சகம்.)

உற்றாரு மில்லை உறவினர்சொல் வாருமில்லை
பெற்றோரோ மூப்பினராய்ப் பேச வலியிழந்தார்
மற்றொரெனைக்காக்க வல்லுநர்யார் மாட்டுரைப்பேன்?
நற்றா யனையர்களும் நன்னினைப்ப கன்றனரால்.

(ஷை கோச்சகம்.)

இத்தனையும் பார்க்கவென்மே லென்றும்நீங் காப்பிரியம்
வைத்தவென் முதல்வர்சிறு வள்ளலுட மாமனதும்
மெத்தவிப ரீதமதை மேவியதி லென்றுக்கம்
கத்துகட லாயதடி காணேன் கரையதற்கே.

(வசனம்) அடீ! ஸகி! ஸர்வஜீவதயாபரராய், காருண்யமூர்த்தியாய், எப்பொழுதுமென்னிடம் நீங்காத வாத்ஸல்யமுடையவராய், விளங்குகின்ற என் இளைய அண்ணனுங்கூட, என்விஷயமாய்ப் பிரதிகூலஞ்செய்யத் துணிந்தனரென்றால், அவ்விதனத்திற்காறுதலுமுண்டோ? இதற்கென்செய்வேனடி? ஸகீ!

புட்டா. ஆ! ஆ! அம்மா! அதனாலென்ன? யார்யார் எப்படியிருந்தாலும், தெய்வகிருபையாலெல்லாம் தங்கள் மனம்போற சித்தியாகுமென்றுதான் நினைக்கின்றேன். ஏதோகொஞ்சங் காலவேற்றுமையால் இடையிற் சிரமத்தை அடைந்துகொண்டிருந்தாலும், தெய்வானுகூலமென்பது தங்கள் பக்ஷத்திலிருப்பதாகவே தோன்றுகின்றது.

சுபத். நீ எதனாலப்படிச் சொல்லுகின்றனை?

புட்டா. இதோ பார்க்கவேண்டும். இரண்டு தினத்திற்குமுன் தங்கள் மனம்போலில்லாமல் மஹத்தான ஆபத்துச்சம்பவித்திருந்ததே, அத்தகைய அப்பிரியமுகூர்த்தஸமயத்தில், அதினின்றும் தெய்வமானது தங்களை மறைத்துவைத்துக்காக்கவில்லையா? அப்படிக் காத்த தெய்வம் இன்னமுங்கைவிட்டிடுமா? ஆனாலின்னம் வருகின்ற முகூர்த்தம் நாலுமாதங் கழித்துத்தான் ஆகவேண்டும். அதற்குள் என்னென்ன நடக்குமென்பதை நிச்சயிக்கப்படுமா?

சுபத். ஆம். ஆம். வாஸ்தவம். வாஸ்தவம். எனக்கும் அவ்விஷயம் ஆச்சர்யமாகவே விளங்கிக்கொண்டிருக்கின்றது. எனதேகாந்தவேளையெல்லாம் அதைப்பற்றியசோசனை பற்பல உண்டாகி, அது ஒரு சொற்பனம்போலவே விளங்கிக்கொண்டிருக்கின்றது.

புட்டா. ஓ! ஓ! யானுமதைப்பற்றிக் கேட்கவேண்டுமென்றெண்ணிக்கொண்டிருந்தேன். அதற்குச்சந்திவாய்த்ததில்லை. இப்பொழுது கேட்கின்றேன். தாங்கள் காணமற்போயிருந்த அச்சமயம் அதன் மன்மம் ஏதாவது தெரிந்ததுண்டோ?

சுபத். ஆம். ஆம். அதைச்சொல்கின்றேன். கேள். யானிவ்விடத்தில் நித்திரைசெய்துகொண்டிருந்தவள் கண்விழிக்கும்பொழுது அது ஒரு கோர ஆரணியமாகவிருந்தது.

புட்பா. ஆ! ஆ! நன்று. நன்று. என்ன ஆச்சரியமிது? அங்ஙனமாயின், தங்களை யாராவது அபகரித்துச் சென்றிருத்தல் வேண்டும்.

சுபத். அடீ! ஸகீ! யானப்பொழுது எனதுத்தியானவனத்திலிருப்பதாகவேயெண்ணி, வெகுநேரமட்டுஞ் சுகமாயிருந்துகொண்டிருந்தேன். ஆனால், எப்பொழுது சந்தியாகாலமானது வந்து இருட்டுஞ் சூழ்ந்ததோ, அப்பொழுது சகிகளுமங்கு வரவில்லை. எனக்குப் பயங்கரமாயிருந்ததனால், "புட்பாவதீ," "ஸாரங்கநயனே" என்று கூவியழைத்தேன்.

புட்பா. (அவள் மார்பிற் கையைவைத்துக்கொண்டு) சரி, சரி. மேற் சொல்லுங்கள்.

சுபத். அச்சமயம், அடி ஸகீ! என்னென்று சொல்லட்டும்? இரக்த வஸ்திரதாரியான அதிசுந்தர தருண மஹாபுருஷர் ஒருவரெதிர்தோன்றி, அவர்,—(என்ற அரைச்சொல்லில்) (உரோமாஞ்சத்துடன்) (தன்னுள்) அடட! அப்பொழுதே அவரென்றறிந்துகொள்ளாத அற்பபாக்கியவதியானேனே.

புட்பா. என்ன, அவரென்ற சொல்லுக்கு மேற்சொல்லாமலிருக்கின்றீர்கள்? அவர் யாராக இருக்கும்?

சுபத். (வெளிப்படை) யானவருடைய ஊரும் பேரும் விசாரிக்கவில்லை. ஆனால் அவர் சொன்னதாவது:—"இஃதுனது உத்தியானவனமல்ல. இது ஒரு கோர ஆரணியமத்தியப் பிரதேசம். இதில், நீ எப்பொழுது எவ்விதம் எதற்காக வந்திருக்கின்றாயென்பது சொல்லமுடியாது" என்பவையேயாம்.

புட்பா. ஆ! ஆ! இஃதென்னடீ! இதுவெல்லாம் கேட்கக் கேட்க வெகு விந்தையாயிருக்கின்றது. மேல்.

சுபத். யான் அந்தப்புரத்திலிருந்தேனென்பது நல்ல ஞாபகந்தான். அப்படியிருந்த யான் எப்படி வனத்திற்கு வந்துவிடுவேன்? அஃது அகாரணமாய் அறியப்படாத விஷயமாயிருக்கின்றது. நிற்க. சகிகளொருவரையுங் காணகவில்லை. வர வர இருட்டுஞ் சூழ்கின்றது. அதனுற் பயங்கரமாகத் தோற்றுவதுந் தவிர, அண்ணு, மதினி, முதலானவர்களெல்லாம் ஏதேனும் விருதாப் பழிச்சொற்கள் சொல்வார்களே, என்ற ஒரு எண்ணமும் என் னிதயத்திற் குடிகொண்டதால், அப்படியே திடுக்கிட்டு மூர்ச்சைகெட்டுக் கீழே விழுந்துவிட்டேன். அப்பால், யான் கண்விழித்தபொழுது இந்த எனது கன்னிகாமாடத்தில் என் படுக்கையிற் படுத்திருந்தவளாகவேயிருந்தேன்.

புட்பா. (ஆச்சரியத்துடன்) அம்மணீ! இதைக் கனவுதானென்று சொல்லுவோமென்றால், மத்தியிற் காணமற்போய்த் திரும்பக் கிடைத்ததானது பிரத்தியக்ஷத்தில் நிச்சயமாயிருக்கின்றது. ஆனல், எதார்த்தத்தில் நடந்த சங்கதிதானென்றால், எவ்விதஞ் சம்பவித்திருக்கக்கூடும்? என்பது நிச்சயிக்கமுடியவில்லை. இஃதென்னென்று நினைக்கின்றது?

சுபத். ஸகி! யான் காணமற்போனதிலும், திரும்பக்கிடைத்ததி லும், இரண்டு சங்கதிகள் மட்டும் மிகவும் ஆச்சரியமாய் இன்ன மும் பிரத்தியக்ஷத்திலிருந்துகொண்டிருக்கின்றன.

புட்பா. அவ்விரண்டு சங்கதிகளென்கொல்?

சுபத். அடி ஸகி! புஷ்பா! இஃதை நன்கு கவனித்துக் கேட்கக்கட வாய். "முன்னமே இந்தத் துவாரகையில் வைத்து, என் கைப்பட ஜரிகையினுல் அவரது திருநாம விலாசங்களமைக்கப் பட்டு, விலையுயர்ந்த எந்தச்சால்வை அம்மகாபுருஷருக் கென்னலளிக்கப்பட்டிருந்ததோ, அந்தச் சால்வை உத்தரீயமே யான் திரும்பக்கிடைத்த வச்சமயம் என்மேற் கிடந்தது." ஒன்று. அவ்விதமே, யானவர்க்குத்தரீயமளித்தகாலத்தி லென்மீதிருந்த ஆசையினுல், அவர் கண்டத்திலணிந்திருந்த எவ்விரத்தினமாலிகை அவர்கையாற் கழற்றி என் கழுத்திற்

போடப்பட்டிருந்ததோ; அவ்விரத்தின மாலிகை எவ்வாறோ இப்பொழுதும் என்னிடத்திலில்லாமற் காணாமலே போய்விட்டது." என்று. ஆக இவ்விரண்டு சங்கதிகளுந்தான் இன்னமும் பிரத்தியக்ஷத்தி லிருந்துகொண்டிருக்கின்றன.

புட்பா. என்ன? என்ன? கேட்கின்ற சமாசாரங்களெல்லாமே மிக மிக ஆச்சரியத்தை விளைவிக்கின்றன. ஆனால், இவையெல்லாமே ஏதோ தெய்வீக கார்யங்களாயிருக்கின்றமையால், மேன்மேலுந் தங்கள் க்ஷேமத்திற்கும் இஷ்டகாரிய ஸித்திக்குங் காரணங்களாகவே தோன்றுகின்றன. ஆகையால், ஈச்வரன் சகலத்தையும் தங்கள் மனம்போல், நடத்திவைப்பாரென்பதிற் சந்தேகமின்று.

சுபத். ஸகீ! புட்பா! நீ ஏதனாலப்படிச் சொல்கின்றனை?

புட்பா. அஃதெதனாலேயாவதிருக்கட்டும். என் வார்த்தையை நம்புங்கள்.

சுபத். சீ, சீ என்னவார்த்தையிது? அப்படிப்பட்ட பாக்கியமெனக்கெங்கிருக்கின்றது?

அகவல்.

அந்தோ! அந்தோ! ஆருயிர்ச் சகியே!
இந்தநின் சொற்க ளேற்குமோ வெற்கே
அற்பபாக் கியவதி யாகினே னல்லால்
நற்பெருந் தவங்கள் நான்செய் திருந்தால்
இப்படிக் கவத்தை யேனடை கின்றேன்?
செப்புமிச் சமயந் தீர்த்தயாத் திரையும்
அவர்க்குச் சம்பவிப் பானே னம்மா!
தனிக்கு மருமைத் தங்கையென் மீது
சற்றுந் தயைதான் தமயற் குறாதோ?
மற்றிவ் வுலக வழக்கமு மிலைகொல்?

இணையவென் முதல்வ ரென்மீ தோங்கும்
அளவிலா வுண்மை அன்புள ரன்றோ?
அத்தகை யெழிற்செவ் வாம்பல்வாய்ச் செம்மல்
பத்தருக் கருள்கோ பால க்ருஷ்ணனும்
மஞ்சொத் தவர்தம் மனமுமிப் போது
நஞ்சொத் திடவோர் ஞாயமு முண்டோ?
அண்ணல் பலரா மர்க்குமிப் படியக்
கண்ணிலான் மகன்மேற் கருத்துறு வானேன்?
இரேவதி மதினி தானுமென் மீது
விரோதமே செய்ய மேவின தென்கொல்?

புட்பா. ஓ! ஓ! அம்மணீ! என்ன? என்ன வீண் கிலேசமடைகின்றீர்கள்? வேண்டாம். வேண்டாம். இன்று தங்கள் சகோதரர்களாகிய மஹாராஜரிருவரும் இங்கு வந்தார்களே. அவர்கள் சொன்ன வார்த்தைகளின் ஸாரத்தால் முன் தங்கள் மனதிற்கு விரோதமாய் வீண் துக்கங்கொடுத்ததைப்பற்றி, அவர்கட்கே பச்சாத்தாபம் உண்டாயிருக்கின்றதென்றே தோன்றுகின்றது.

சுபத். இருக்கட்டுமெடி. ஸகி! நீ எனக்குச்சமாதானமாகும்பொருட்டு இப்படிச்சொல்கின்றனையல்லாமல், அவர்கட்கென்மீது பச்சாத்தாபமேதடி? (சோகநீராற்றெண்டை தத்தவிட்டு) அடிசகி! நீ அந்தக்கிருஷ்ணன் சொன்னவார்த்தையைக் கவனித்துக் கேட்கவில்லைப்போலிருக்கின்றது. என்கொள்கையின்னதென்பதையும், அதற்குமாறாகச்செய்கின்ற நடைபடிக்கையைப்பற்றி யானடைகின்ற வேதனையையும், அவனறிந்திருந்தும்; என்ன என்ன விதங்களாயோ அவன் சொல்லிய வார்த்தைகள் என் மனதை எரித்துக்கொண்டல்லவாயிருக்கின்றது? அப்பொழுதவன், சிரித்துக்கழுத்தறுப்பவர்போற் சொல்லியவார்த்தைகளிற் சிலவற்றைச்சொல்கின்றேன். இப்பொழுதாவது கவனித்துக்கேள். அவன், மூத்தவரைக்குறித்து "அண்ணா! நம் சுபத்திரைக்கும் துரியோதனவராவிக்கனகாரிய விஷயமாய்

மனஸ்தாபமில்லையென்றுதான் நினைத்திருக்கின்றீர்களோ?" அடிசகி! இந்தவார்த்தையிலேயே அவனென்னை யெவ்வளவு எளனமாயெண்ணியிருக்கின்றானென்பது பார். என்ற இந்த வார்த்தைக்குப்பின், என்னைநோக்கி அடிதங்காய்!

அகவல்.

குறித்த வரனைக் கொள்ளுமுன் காலம்
பிறித்ததென் றெண்ணிப் பேதாய்! வருந்தேல்
அருமைத் துணைவியென் றண்ணா அவர்களுன்
பெருமைக் கிணங்கப் பிரியமுற் றிழைத்த
வரனெவ னென்று மதித்தாய் பெண்ணே
துரியோ தனப்பேர் சொலுமவ னலமிகு
வரகுண னுயர்ந்த மரபின னந்த
நரவர னுக்கே நாயகி யாவாய்
மூத்தவர் கொள்கை முற்றிலு மறியாய்
பார்த்த வரனை பழிக்கு முனக்கு
அப்பொழு தெத்தனை அகந்தை யோங்குவை?
செப்புமச் சுயோதனன் றேவியா கிடிலுனை
மதிக்கவுஞ் செய்வையா? வணங்கவுஞ் செய்வையா?
கதித்தநின் கௌரவங் கணக்க டங்குமா?

(வசனம்) ஆ! ஆ! அடிசகி! இந்த வார்த்தைகளால் அவர்களிப்பொழுது நிச்சயித்திருக்கின்ற அத்துரியோதனனென்பவன், குணத்திலுங் குலத்திலும் மிகச்சிறந்தவனென்றும், எனக்கெடுத்துரைப்பதுந்தவிர, அத்தகையவரனை அடைதற்கில்லாமல் இந்தக்கல்யாணவிக்கின காரியத்தைப்பற்றி யான் மனவருத்தப்பட்டுக்கொண்டிருப்பதுபோற்சொல்லி, மேலும், அவனுக்கே பாரியாளாகப்போகின்றாயென்றும், அப்பொழுதுனக்கெவ்வளவு கௌரவமுண்டாய்விடுமென்றும், சொல்லியவசனங்களில், அவனுக்கென்மீதெவ்வளவு கெட்டவெண்ணமிருக்கின்ற

தென்பது தோன்றவில்லையா? இப்படி ஜீவவதைசெய்கின்ற மாதிரியாய்க்கூடப்பிறந்தவர் தானேசொல்கின்றதானால், வெகு அழகாயிருக்குமே.

புட்பா. அம்மணீ! இந்தவார்த்தைகளெல்லாம் முன்னமேயே நன்கு கவனித்துக்கேட்டவைகடான். ஆனால், அவர்கள்மனதின்னபடியிருக்குமென்பதறியமுடியாது. அவர்களெண்ணிச்சொன்னார்களோ? எண்ணாமற்சொன்னார்களோ? அவர்கள் வார்த்தைகளெல்லாவற்றிலும் தங்கட்கனுகூலமான அர்த்தங்களே பொருந்தியிருக்கின்றதாக அறிகின்றேன். எங்ஙனமெனில்? "குறித்தவரனைக்கொள்ளுமுன் காலம் பிறித்ததென்றெண்ணி பேதாய்! வருந்தேல்" என்பது நீ முன்னமேயே குறிப்பிட்டிருக்கின்ற அவ்வர்ச்சுனனை அடைதற்கில்லாமல் ஏதோகாலம் பேதப்படுத்துவதாயெண்ணி வருத்தப்படவேண்டாம், அஃதவ் விதமேயாமையுமென்றும்; "வரனெவனென்று மதித்தாய் பெண்ணே! துரியோதனப்பேர் சொலுமவனலதிகு, வரகுணனுயர்ந்த மரபினனந்த, நரவரனுக்கே நாயகியாவாய்" என்பவை, அண்ணா அவர்களுனக்காகத் தீர்மானித்திருக்கின்றவான் அத்துரியோதனனென்றெண்ணிக்கொண்டிருக்கின்றாய். அவனல்லவென்றும்; குணத்திலுங் குலத்திலுஞ் சிறந்தவனாகிய, நரன் என்ற அர்ச்சுனனுக்கே நாயகியாவா யென்றும்; "மூத்தவர்கொள்கை முற்றும்நீயறியாய்" என்பது அண்ணா அவர்களின் உட்கருத்து அவ்வர்ச்சுன பக்ஷத்திற்றானென்பதை நீ அறியவில்லை யென்றும்; "பார்த்தவரனே பலிக்கு முனக்கு," என்பது, அவ்வர்ச்சுனனே உனக்கு நாயகனென்றும், ஆக இவையெல்லாம் தங்கட்கனுகூலமான அர்த்தங்களையே வற்புறுத்தி உறுதியாகக் காண்பிக்கின்றனவல்லவா?

சுபத். இஃதென்னமு சமத்காரம்? அவர் வசனங்களில் அனுகூலமாகப் பொருள்படினும், முன்பின் வார்த்தைகளையும், தற்காலமவர்கள் நடப்பையும், கவனியாமலிஷ்டம்போலர்த்தம் பண்ணிக்கொள்கின்றதா?

புட்பா. பிரிய வசனங்களாலும் அந்தத் துரியோதனனுக்கே பாரியாளாக ஆவாயென்று சொன்னதாக எங்ஙனம் பொருந்தும்?

சுபத். ஸரிதானடி. எல்லாம் நமக்கனுகூலமென்று மனப்பால் குடித்துக்கொள்ள வேண்டுவதுதான். கூடப்பிறந்தவரே கூற்றாயிருந்துகொல்ல நினைத்திருக்கின்ற கொடுமையையறியாமல், என்னென்னவோ வார்த்தையுளறிக்கொட்டுகின்றாய். (கண்ணீருகுத்து.)

கோச்சகம்.

எண்ணமறிந்துமிந்த ஏழையென்னிருப்பறிந்தும்
புண்ணினிற்கோல் கொண்டிடித்தாற் போலுரைத்த வார்த்தைகளாற்
கண்ணனுமெனைச்சதித்த காரணத்தை யானறியேன்
வண்ணங் கருத்தஅவன் மனமுங் கருத்தானே.

௨ கோச்சகம்.

பார்த்தமகாராஜருக்கே பாரியாளாகவென்னைச்
சேர்த்திடுவதாயுறுதி செப்பினன்றன் நாவாலே
வார்த்தையதைமறந்தவ் வாய்மைகெட்ட மாயனேயென்
ஆர்த்தஜனபந்துவென்றே அகில முரைக்குதடா.

௩. கோச்சகம்.

என்னைரக்ஷிக் கின்றவரென் றுரைநினைக் கின்றேனே
அன்னவரே இப்போதெற் கந்தகர்போ லானாரே
மன்னுயிர் துறக்காது வாழ்கின்றேன் பாவியிதற்
கென்னசெய்வே னென்னசெய்வே னென்செய்வே னென்ஸகியே.

புட்பா. (தன்னுள்) ஓ! ஓ! இனி இதற்கென்செய்வது? இவளுடைய ஸந்தாபம் வரவர விருத்தியாய்க்கொண்டே வருகின்றது. அதனால், இவள் மனதை வேறு திருப்பவேண்டும். (வெளிப்படை) அம்மணீ! அஃதிருக்கட்டும். தாங்கள் அந்தப்பார்த்த மஹாராஜருக்கு முன்னமே யளித்திருந்து திரும்பக்கிடைத்ததென்று சொன்ன அந்தச்சால்வை எத்தகையது? அதனைக்கண்ணுற விருப்புற்றவளாகின்றேன்.

சுபத். ஸகி! அதனையாரும் பார்க்கக்கூடாதென்றே அப்பெட்டியிற்குள் வைத்திருக்கின்றேன். உனக்குப்பார்க்கவேண்டுமானால் அதைத்திறந்து எடுத்துப்பார்.

புட்பா. (பெட்டியிலிருந்து வஸ்திரத்தை எடுத்துவந்து விரித்து உற்றுப்பார்த்து) ஆ! ஆ! அம்மணி! என்னென்ன சாதுரியமாய் அமைத்திருக்கின்றீர்கள்? தங்கள் கரகௌசலத்தை யென்னென்று சொல்லட்டும்! ஆச்சரியம்! ஆச்சரியம்!

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

உத்தரியம் பளபளென வொளிர்பெற் றோங்கும்
ஒண்பட்டுச் சால்வைகளி லுயர்ந்த சால்வை
அத்தலைப்பி னிரண்டிலுஞ்சற் சரிகை யாலே
அர்ச்சுனப்பே ரழகாய்க்கண் களைகொள் ளொங்கும்
பத்திரித்தி லங்குகின்ற பக்ஷி ஜாலம்
பார்க்கைகயிற் பறந்திடப்போற் பரிசு தோன்ற
இத்தனையு மியற்றியநுங் கைச்சா மர்த்யம்
இதுகாறுங் கண்டிலன்யா னின்று கண்டேன்.

சுபத். (சரேலென்றெழுந்து, உத்தரீயத்தைப் பிடுங்கிக்கீழே எறிந்து) அடி ஸகி! இதை என்னவர்ணிக்கின்றனை? எறிந்துபோட்ட இதன்மேலெனக்குக் கோபம்பொங்கி வருகின்றது. இதனைக் காணக்கரிக்கின்றது. இதையிப்பொழுதே சுக்கலாய்க்கிழித் தெறிதல் வேண்டும்.

புட்பா. ஓ! ஓ! அத்தனைக்கிந்த வஸ்திரமென்ன அபராதஞ்செய்தது?

சுபத். அடிஸகி! கேட்கக்கடவாய். இந்த உத்தரீயம் எத்தனை விசாசத்தைக் கொடுக்கின்றதென்பதைப்பார்!

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

அன்புமிகு மென்ப்ராண அதிபர்க்கென் றலே
அற்பணஞ்செய் தளித்திடப்பெற் றிருநதும் முனனலே
மன்புவியி லென்றனக்கும் வாய்ப்பதரி தாமம்
மகாபுருடர் தஞ்சுந்த ராங்கவை போகம்

இன்புறவ ணைந்திடவி தற்குக்கி டைத்தும்
இன்சுகம தனைவிடுத் தேழைமதி யாலே
என்பெரிய துர்ப்பாக்ய தேகமிதை காடி
ஏன்வந்த தேன்வந்த துத்தரிய மிதுவே.

(வசனம்) அடி ஸகி! அந்தச் சற்சங்கத்தை அலக்ஷியஞ்செய்த தான இது என் திருஷ்டிக்குக்காணப்படப்படாது. ஆகையாலிதை அப்பெட்டியிற்குட்டானே மறைத்துவைத்துவிடு.

[என்றுசொல்லித் தானே அதைஎடுத்து அங்கிருந்தே அப்பெட்டியிற்குள் வீசி எறிகின்றனள்.]

புட்பா. (அவ்விதமதைப் பெட்டிக்குள் மூடி வைத்துவிட்டு)(தன்னுள்) ஸரி. ஸரி. இவட்குச் சமாதானமாகவேண்டுமென்றதைச் சொல்கின்றேனே, அதிலிவள் ஸந்தாபமானததிகரிப்பதல்லாற் குறைந்தபாடில்லை. இனி என்செய்கின்றது? (வெளிப்படை) ஆ! அம்மணீ! தேசகாலமதிகமாய்விட்டது. ஸ்நானஞ்செய்யப் போகவேண்டாமா? வேளாவேளையில நேரந்தப்பாமலேதாவது கொஞ்சம் உண்டி, உணவு அருந்தினாலன்றோ உடம்பிற்கிதமா யிருக்கும்?

சுபத். ஆ! ஆ! அந்த எறிந்துபோட்ட ஆகாரத்தை [என் ஞாப கப்படுத்தினாய்? அந்த அன்னம் விடம்போலிருக்கின்றது. அதை நினைக்கும்பொழுதே வாந்திபண்ண வருகின்றது.

புட்பா. ஓ! ஓ! அங்ஙனமாயின், அம்மணீ! இதன் பக்கத்து ஜலோத் தியானமந்திரத்தைச்சூழ்ந்த சிங்காரத்தோட்டத்திற்குட்சென்று சற்றுநேரம் நடந்துலாவிவருவோம். அங்ஙனம் உலாவி வருவதிற்கொஞ்சம் பசியுண்டாகும்.

சுபத். ஆனலப்படியேசெய்வோம்.

(என்றிருவரும் நடக்கின்றனர்.)

(புட்பாவதி அவ்வனச்சிறப்பை வர்ணிக்கவாரம்பித்தனள்)

சுபத். சரிதானடி. இவ்வனவர்ணனைபோதும். போதும். அடிசகி! யானுன்பேச்சைக்கேட்டு, இச்சிங்காரவனத்துள் அடியெடுத்து வைக்கும்பொழுதே, பார்! இதோ!!

அகவல்.

ஓரடி யெடுத்திங் கூன்றுமப் பொழுதே
பாரடி சகிபுட் பாவதி யென்றன்
உடலெலாம் புளக முண்டா கின்றன
தடவன மிதனைத் தான்நோக் கிடவே
எந்தன் மனத்து டெழும்பிய விரகச்
செந்தழற் சொலிக்குந் திறமென் சொல்வேன்
இங்ஙன டர்ந்த இளந்தருப் பொழிலார்
பொங்கெழிற் சூர்ந்த பூங்கொத் தினங்கள்
வேலார் விழியாய்! மேவுமென் சிரத்திற்
கூரா யுதம்போற் றுளைக்கின் றனவால்
சிந்து வெவ்விடத் தீ யாமென
மந்த மாருதம் வந்து சீறுதே
எற்குங் குயின்மொழி இடியிடித் தாற்போற்
கேட்கின் றதுவென் கிளர்த்துவல் செவிக்கே
பெருக்கிய தடத்தின் பேரலைத் துளிகள்
நெருப்புப் பொறிபோ லிறைக்கின் றனவால்
இத்தனை விதத்தி லென்மனத் தூடே
மத்தெனக் கலக்கி வருத்துவ தென்கொல்?
இணங்கிப் பிணங்கி இன்குர லிட்டு
வணங்கு பெடையின் வாயின் முத்திட்டுக்
கொஞ்சிக் குலாவிக் கூடி ரமிக்கும்
அஞ்சங்க ளின்பே ரன்பே அன்பு!
தத்தம் பெடைக டாங்களிப் புறவே
நர்த்தனம் புரிவன நன்மயூ ரங்கள்
இணைபிரி யாதிங் கின்புறும் பக்ஷி
கணங்களின் சேர்க்கை கண்டிட வெற்கே
ஆசையும் வருகுது அம்மகா புருடர்தம்

நேசமும் மோசமும் நினைப்புறு கின்றனை
சித்தசப் பாவியுஞ் சீறிச் சினந்து
மெத்தவுங் கணைகள் விடுக்கலாயினன்.

புட்பா. ஆ! ஆ! அம்மணீ! சும்மா சும்மா அதையே நினைத்துக் கொண்டிருந்தாற் சந்தாபம் விருத்தியாகாமற் பின்னை எப்படி யாகும்? வேறு விஷயத்தில் மனதைத் திருப்பிச் சமாதானஞ் செய்து கொள்ளல்வேண்டும்.

சுபத். அடி சகீ! நீ சொல்வதெல்லாம் எனக்குந் தெரிந்தது தான். இப்பொழுதெந்த உபாயமுமிதனிடத்திற் செல்லாது. அடீ! புட்பா! யானென்னென்று சொல்லட்டும்? எனதுற்சாகம் ஒழிந்தே போய்விட்டது. இந்தத்துக்கத்தை எவ்வாறு சாந்தஞ் செய்துகொள்வது? எனக்குரித்துள்ளா ரொருவருமில்லையே. என் உறவினரெல்லா முறவினரல்லர். எல்லவரும் பரமவைரி களாயினர். "உடன் பிறந்தார் சுற்றத்தார், என்றிருக்கவேண்டாம், உடன் பிறந்தே கொல்லும் வியாதி" என்ற மூதுரை என்னளவிற்குண்மை மொழியாயிற்று. ஆக இவ்விதனத்திற்காறுதலில்லாதயர்வடைகின்ற தருணம், இந்த மஹா மதனவாதையும் வந்து வருத்துவதி லெவ்வாறென் மனதைத்திருப்புவேன்? எப்படித் தைரியத்தை வகிப்பேன்? ஆ! ஆ! ஸகீ! எனக்கு ஜீவனினிவேண்டாம். அதற்கேதேனு முபாயமுண்டானலதைச் செய்தாவதிந்தச் சங்கடத்தினின்றும் என்னை நீக்கிவிடு.

(——) (திரைக்குள்) அடீ! புட்பாவதீ! கதவைத்திற. கதவைத்திற.

புட்பா. யாரிவள்? ஸாரங்கநயனையே வந்து கூப்பிடுவதுபோற்றோன்றுகின்றது.

சுபத். எதற்காகக் கூப்பாடு போட்டுக்கொண்டு வந்திருக்கின்றாளோ? யாருக்குத்தெரியும்? போய்ப்பார்.

(புட்பாவதிபோய், ஸாரங்கநயனையுடன் திரும்பவருகின்றனள்.)

சுபத். (ஸாரங்கநயனையைக் குறித்து) அடீ! எனக்கு ஸ்நானத்திற்கு வேண்டுவனவற்றைச் சன்னத்தஞ்செய்யும்படி சொல்லியனுப்பினேனல்லவா? அதற்குளிங்குவந்த காரியமென்ன?

ஸார. ஆம். அம்மணி! யான் அவ்விதம் எல்லாந் தயார்செய்துவைத்து விட்டுத் தங்கள் வரவை எதிர்பார்த்திருந்தேன். அதற்குள் தங்களை விரைவில் நீராட்டிவைத்து, சுத்தமான உடைதரிப்பித்து, ப்ருந்தாவன மண்டபத்திற் கழைத்துவரும்படி சிறிய ராணியவர்கள் உத்தரவளித்தார்கள். அதனாலதைத் தங்களுக்குத் தெரிவிப்பதற்காக, அவசரத்தில் வந்தேன்.

சுபத். யார்? எம்ருக்மிணி மதினியா?

புட்பா. ஆம். ஆம். மிக அவசரத்தில் வரும்படி சொல்லியிருக்கின்றார்களாம்.

சுபத். ஆ! ஆ! என் சின்னமதினிக்குங்கூட என்னுடைய ஞாபகம் எத்தனை நாட்களுக்கு மேல் வந்திருக்கின்றது? பார்! ஆச்சரியம்! ஆச்சரியம்! ஸரி. அப்படியே செல்வோம்.

(என்றெல்லவரும் எழுந்திருக்கின்றனர்.)

புட்பா. என்னடீ! ஸாரங்கநயனே! நம் சிறிய ராணி அவர்கள் ஸ்நானமாச்சுதா? என்ன செய்கின்றார்கள்?

ஸார. அது எப்பொழுதே ஆய்விட்டது. அவர்களிப்பொழுது ப்ருந்தாவன பூஜையிலிருந்துகொண்டிருக்கின்றார்கள். அங்கேதான் சுபத்திராதேவியையும் அழைத்துவரும்படி உத்தரவாயிருக்கிறது.

சுபத். என்னடீ? இத்தனை அவசரமாய்க் கூப்பிடுவதெதற்காகவென்பதேதாவதுனக்குத் தெரியுமா?

ஸார. என்னிடம் அவர்கள் மற்றொரு விபரமுஞ் சொல்லவில்லை. ஆனால், பெரிய மஹாராஜா அவர்கள் மஹா ஆடம்பரத்துடன் யதீச்வரரான மஹானொருவரை இராஜகிரகத்திற்கு பிக்ஷைக்காக அழைத்துவந்திருக்கின்றார்கள். அம்மஹானுடைய தரிசனத்திற்காக இருக்கலாமென்று நினைக்கின்றேன்.

சுபத். அப்படித்தானிருக்கலாமென் றெதனால் நினைக்கின்றனை?

ஸார. அஃதெதனாலேயா? அந்தப் பெரிய டலாயத்து நம் கிழச் சேவகரானவர் தன் கீழ்ச்சேவக னொருவனிடம் வந்திவ்விதம்

புகன்றனர். அதாவது:— அஷ்டநாயகிகளும் ஸர்வ யாதவ ஸ்திரீகளும் சீக்கிரமாக ஸ்நானஞ்செய்து, சுத்தமான உடை தரித்துக்கொண்டு, ஆசாரத்துடன் அம்மஹாராயதீச்வர ஸேவைக்கு வரும்படி தண்டோரா மூலமாய்த் தெரிவிக்கவேண்டும்.” என்றே. அந்தச்சொற்கள் என் காதில் விழுந்ததனால், யான் அவ்விதம் நினைப்பதற்குக் காரணமாயிற்று.

சுபத். சரி, சரி. அம்மெப்படியாவதிருக்கட்டும். சீக்கிரம் போக வேண்டும். நட, நட. என்னை விரைவில் ஸ்நானஞ்செய்துவை. அடீ! புட்பா! நீ விரைவிற் சென்று எனக்குத் தரித்துக் கொள்ள சுத்தமான பட்டுவஸ்திரமும், ஜலபாத்திரமு மெடுத்துக்கொண்டுவா?

[சுபத்திரையும் ஸாரங்கநயனையுஞ் சென்றனர்.]

புட்பா. நம் சிறிய ராணி அவர்கள் இப்பொழுது கூப்பிட்டுவிட்டது மிக்கவும் நன்றாச்சுது. இல்லாவிடில் நம் சுபத்திராதேவியின் சோகம் மேன்மேலும் விருத்தியாய்க்கொண்டுதானிருக்கும். அதன் அளவு சொல்லமுடியாது. (திரையை நோக்கி) ஆ! ஆ! அவள் சொன்னது நிஜந்தான். அதோ சிறியராணியவர்கள் பூஜையிற்றானிருந்துகொண்டிருக்கின்றார்கள். யான் தாமதிப்பது சரியன்று. இப்பொழுதே சுபத்திராதேவியை அழைத்துக்கொண்டுபோகவேண்டும். (எனச் சென்றனள்.)

(அப்பால், நான்கு பேர்கள் பரிசாரகர்கள் பக்கத்தில் நின்றுகொண்டிருக்கவும், ப்ருந்தாவன மண்டபத்திற்கெதிர் ஆசனத்திருந்துகொண்டு பூஜைசெய்கின்றமாதிரி, ருக்மிணிதேவி பிரவேசிக்கின்றனள்.)

ருக்மிணி. (பூசையை முடித்து) அடா! அசோகா! ஜபமாலை எங்கே? கொடு.

(பரிசாரகனொருவன் ஜபமாலையைக் கொடுக்க வாங்கி மேல்முந்தியாற் கையை மறைத்துக்கொண்டு ஜபம் செய்கின்றனள்.)

(அப்பால், விதூடகர் ஸ்நானம்செய்து ஆசாரத்துடன் பிரவேசித்து, ஆசமனஞ்செய்துவிட்டுக் கையைத் தலையிற்றுடைத்துக்கொள்கின்றனர்.)

ருக். (ஜபமுடித்துத் துளபமண்டபத்தைப் பிரதக்ஷிணஞ்செய்துகொண்டே, விதூடகரைக் குறித்து) ஓய்! ஓய்! வக்கிர

துண்டரோ! ஏதிங்ஙனந்தான் ஸ்நானஞ்செய்யப் பெற்றீர் போலும்.

விஜ. ஆம், ஆம். அம்மணீ! இன்று யதிமஹாஸ்வாமிகளது திவ்யப்பிரஸாதத்திற்காக இங்ஙனம் வந்திருக்கின்றனன்.

ருக். ஓ! ஓ! அப்படியா? நிரம்ப சந்தோஷம். நன்று, நன்று. அஃதிருக்கட்டும். முந்தாநாள் நம் மைத்துனரவர்கள் நமக்குச் சொல்லியிருந்தும்; இன்னமும் நாழிகை கழித்து நீராடும் வழக்கம் விட்டிலீர் போலும்.

விஜ. அங்ஙனமன்று. அம்மணீ! யானதிகாலையிலேயே எழுந்து ஸ்நான ஸந்தி ஜபதபங்கள்யாவுஞ்செய்துமுடிந்தன. ஆனுலிப்பொழுதிங்கு வரும்பொழுது, மார்க்கத்திலொரு சுவானதேவரின் புச்சமானது என் காலிற்பட்டதுபோலொரு ஸம்சயமேற்பட்டது. அதனால், மறுபடியுங் குளிக்கநேரிட்டது.

ருக். ஓ! அப்படியா? சரி. சரி. இப்பொழுது நிரம்ப ஆசாரம்வந்துவிட்டாற்போலிருக்கின்றது. இப்பொழுதங்கே என்னஸமயம்?

விஜ. அம்மணீ! அவ்விடத்தில் அவ்வேதிமகாஸ்வாமிகளின் திருமுழுக்காட்டுற்சவம் முடிந்தது. அதன்பிறகு தினக்கடன் முடித்துப் பூஜாமண்டபத்திலெழுந்தருளியிருந்து, ஸ்வாமிகள் அனுஷ்டிக்கின்ற நியமாம்பாளைப் பூஜைப்புரிந்து;—அடடா! பூஜையின் பெருமை பேசவுந்தராமோ? புதுமை! புதுமை! அத்தகையருளம்பாளைப்பூஜித்து, அத்தேவி மான்மியபாராயண, தியான, யோக, ஸமாதிகளெல்லாஞ்செய்து முடிந்தன. இப்பொழுது, எல்லா யாதவஸ்திரீகளும் தரிசனஞ்செய்து, தீர்த்த மந்திராக்ஷதைகள் முதலிய திவ்யப்பிரசாதங்கள் பெற்றுக் கொண்டிருக்கின்றார்கள். அம்மணீ! யாதவமாதர்களின் வந்தனங்கட்கெல்லாம், ஸ்வாமிகள், "நாராயண, நாராயண," என்றே சொல்லிச்சொல்லி, கண்கள் வெளுத்துப்போய்விடுவார்போற்றோன்றுகின்றார்.

ருக். அடட! நாராயணேச்சாடனத்திற்கண்களைன் வெறுக்கின்றனே? சரிதான். சரிதான். அங்கு கூட்டங்குறைந்து நெருக்கில்லாதிருந்தால், யானுந்தோழியுந்தரிசனத்திற்கு வருகின்றோம். சமயம் பார்த்துச்சொல்லும்.

விது. அங்ஙனமாகட்டும். (எனச்சொல்லி நடக்கின்றனர்.)

ருக். ஓ! ஓ! வக்கிரதுண்டரே! இதோ இந்தத்தக்ஷிணையை வாங்கிக்கொண்டு செல்வீராக. (பரிசாரகனைக்குறித்து) அடா! இந்தத் தாம்பூல தக்ஷிணையை அவரிடங்கொடு.

[பரிசாரகன் அவ்விதங்கொடுக்கின்றனன்.]

விது. ஓ! ஓ! யாரது? சுபத்திராதேவியோ? ஸ்வாமிதரிசனத்திற்காகவருகின்றாள் போலும்.

[எனச்சென்றனர்.]

(அப்பால், ஸ்நானஞ்செய்து, சுத்தமான பட்டுடை தரித்து, புட்பாவதியுடன் சுபத்திராதேவி பிரவேசிக்கின்றனள்.)

ருக். (சுபத்திரையினருகிற்சென்று) ஆ! ஆ! தோழியரசே! நன்று. நன்று. நீ என் சொற்கடவாதிப்பொழுது ஸ்நானஞ்செய்து, சுத்த உடைதரித்து, இங்கு விரைவில் வந்தது மஹாபாக்கியந்தான். அப்படிக்கில்லாமல், இப்பொழுது வரச்சௌகரியமில்லையென்று நீ மறுத்துவிட்டாலென்செய்கின்றது?

சுப. ஆ! ஆ! என் அருமைமதினீ! இப்பொழுதெல்லாருமே என் மீது கத்தியை ஓங்கிக்கொண்டிருக்கையில் நீ மாத்திரமென்ன சும்மாவிட்டுவிடுவாயா? நடக்கட்டும். நடக்கட்டும். யான் கல்லுக்குங்கல்லாய்த் திடமாயிருக்கின்றேன்.

ருக். (சுபத்திரையின் கையைப்பிடித்துக்கொண்டு) நல்லது. நல்லது. வா. வா. இங்கே உட்காரு. (என்று, அவளையருகில் உட்காரவைத்து, முதுகைத்தடவிக்கொண்டு, முகத்தை நோக்கி) ஆ! ஆ! பார்த்தாயா? அடி! தோழீமணீ! உனது இந்தத்தற்காலநிலைமையைப்பற்றி யானென்னென்று சொல்லட்டும்?

(விருத்தம்.)

எத்தனை யவத்தைநேர்ந்த திரண்டுநாள் களுக்கு ளம்மா
மெத்தவு மிளைத்தாய்நீயும் வேளையிற் புசிப்ப தில்லை
நித்திரை கொள்வதில்லை நிரந்தரந் துயர்கொண் டுற்றால்
இத்தகை புத்தியுள்ளார்க் கெப்படிச் சுகம்ப லிக்கும்?

சுப. ஆம். ஆம். அது மெய்தான். அது மெய்தான். ஓ! ஓ! மதினீ! நீயுமென் நிமித்தம்விசாரப்பட்டு, விசாரப்பட்டு, மெத்தநைந்து கொண்டுதானிருக்கின்றாய். யாவர் எல்லார்களுடைய நல னுக்கு கரிந்துகொண்டுதானிருக்கின்றேன். அடியம்மா! மதினீ!

(அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

மிக்கவுமென் றனைப்பற்றி விசாரமதைக் கொண்டவள்போல்
விளம்பு கின்றாய்
துக்கமுற்ற வேளையிலென் பக்கலுற்று றுதல்வார்த்தை
சொல்வ தற்குந்
தக்கவன்று துதவியில்லை அருமைக்கோர் நாத்தியென்ற
தயவு மில்லை
பக்கமுனக் குளதாகல் யானுமிப்ப டிக்கஷ்டப்
படுவ துண்டோ?

ருக். ஆ! ஆ! அப்படிச் சொல்லவேண்டாம். அடீ! என்னுரு யிர்த் தோழிமணீ! பார்!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மன்றலுறும் லக்கினத்தி லுனைக்காண விலையென்ற
வார்த்தை வந்த
அன்றெனது மனதின்ன படியிருந்த தெனச்சொல்ல
வடங்கா தம்மா!
ஒன்றலைமற் பலவெண்ண முண்டாய்நா னிருந்தவிடத்
தாற்ற யர்ந்தேன்
நன்றுபெறப் பேசுதற்கு மின்னமுநா வெழவில்லை
நானென் செய்வேன்.

(வசனம்.) இஃதல்லாமலும், அடி தோழீ!

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

சத்துருவா யினுமிந்தக் கஷ்டமுறு சமயமது
சகிப்புண் டாமோ?
அத்தனைக்கென் னடிதோழி சிற்சிலர்போ லெனைநினைக்க
லாகா தம்மா!
சித்தமதில் யானுன்மேல் வைத்திருக்கும் பிரியமது
தெரிந்தும் நீயேன்
இத்தனைபேச் சுலாக்கின்று யீதானது சுபாவமடி
என்சொல் வேனே.

(வசனம்.) அப்பால், நீ மறுபடி உனது மாளிகைக்குளிருக்கின்றாய், என்று கேள்விப்பட்டவுடனே, எங்கிருந்தோ சற்று ஜீவன் பிடித்து, உன்னைக் காண வெகு ஆவலுடன் எப்படியோ பிராணனைக் கைப்பிடித்தெழுந்தோடிவந்தேன். அப்பொழுது, நம் கற்கமுனிவரிஞக்ஞை எல்லவர்க்குமே இவ்விதம் பிறந்துவிட்டது. அதாவது:— "அவள் பக்கத்திருக்கின்ற தாதிகளைத் தவிர, மற்று யாரானாலும் அங்கே போகக்கூடாதென்றே." இன்னு மிரண்டு தினங்கழித்து அவள் தேகஸ்திதி கொஞ்சங் குணத்திற்கு வந்தபிறகுதான் பார்க்கலாமென்று சொல்லியிருந்ததால், உன்னை வந்து பார்க்கயிடமில்லாமலிருந்தது.

சுபத். ஸரிதானம்மா. மதினீ! நீ எவ்விதம் மறைத்துப் பேசினாலும் பேசலாம். முன்போலுனக்கென்மீது பக்ஷமிப்போதில்லை யென்பது மட்டுஞ் சொல்வேன்.

ருக். நீ எதனாலப்படிச் சொல்கின்றனை?

சுபத். அதை நீதானே யோசித்துப்பார். முன்போலுனக்கென்மீதில் பக்ஷமிருக்குமானால், இப்படிப்பட்ட மகத்தான துர்த்தெசைகளெனக்கேற்படவேமாட்டாது. ஒருக்கால் விதிவசத்தாலப்படி ஏற்பட்டதென்றாலும், நீ என்னை ஏறிட்டுப்பார்க்காமற் கண்களை மூடிக்கொண்டிருக்க உன் மனந்தானிசையுமா?

ருக். ஆம், ஆம். அடி தோழி அரசே! தங்குற்றந் தமக்குத் தெரியாதென்பதுபோல், உன்குற்ற மொன்று முணராதுரைக்கின்றாய். அதை இப்பொழுது, வாய்திறந்து சொல்லவாரம்பித்தால், உனக்கொருகோட்டைகோப மொருமித்துண்டாய்விடுமே. அப்படிக்கென்னம்மா துர்த்தெசை வந்துவிட்டது? அதையென்பாற் சொல்லு. ஏதடீ, நீயாகவே யாதொரு காரணமுமின்றி வீண் ஸந்தாபத்தை யுண்டுபண்ணிக்கொண்டதன்றி, மற்றப்படி என்னவந்துவிட்டது?

சுபத். ஆ! ஆ! மதினீ! அது மெய்தான், மெய்தான். நன்றாயுரைத்தனை. நானாகத் தேடிக்கொண்ட ஸந்தாபமென்றா சொல்லுகின்றாய்? சரிதான், சரிதான்.

கலி விருத்தம்.

எந்த வார்த்தை எனக்கிசை யாததோ
அந்த வார்த்தை யடிக்கடி சொல்லியென்
சிந்தை நோய்வரச் செய்ததல் லாமலும்
நொந்த புண்ணிற்கோல் கொண்டிடிப் பார்கொலோ?

ருக். ஓ! ஓ! அதைப்பற்றியா சொல்கின்றனை? ஸரி, ஸரி. ஞாபகம் வந்தது. மைத்துனர் மிக்கப்பிடிவாதமாய் அந்தத் துரியோதன ராஜனுக்குன்னை மணஞ்செய்துகொடுக்க நிச்சயித்த விஷயத்தைப்பற்றித்தானே; அஃதுனக்குப் பிடிக்கவில்லை; அதைப்பற்றித்தானே சொல்கின்றாய்? அஃதுனக்குக்குறைச்சலாய்விட்டதோ அம்மா? அவ்வணங்காமுடி மன்னனைப் பார்த்தாவாகவடைதல் மிகத் தாழ்வென்றுதான நினைத்திருக்கின்றனையோ? அவனைப்போலொரு நல்வரன் இப்பேருலகிலெங்காவது கிடைக்குமா? அவனென்ன சாமான்யனா? அடீ! பைத்தியம்பிடித்தவளே! கேள்!

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

பேர்பெற்ற வதிகாரன் மகுடமன் னவர்வாழ்த்தும்
பீடுடை மகாப்ர தாபன்

தார்பெற்ற மணிமார்பன் கனசெல்வ வான்மிகச்
சதுரவான் சக்ர வர்த்தி
ஏர்பெற்ற துரியோதன னப்ரபுவை வரனாக
வெய்துதற் பாக்ய மன்றோ
கார்பெற்ற கூந்தற்சு பத்திரா யஃதன்க
ருத்திற்கி ணங்காத தேன்.

(வசனம்.) அடீ ! தோழீரத்தினமே ! சொல்கின்ற வார்த்தை பரிகாச மென்றெண்ணவேண்டாம். நானே அவனது பட்டமகிஷியாக நீ ஆனால் நாங்களுங்கூட உன்னை வணங்கும்படியாகத்தானே ஏற்படும். அத்தகைய பதவி மெத்தவுங் குறைச்சலாய்விட் டதோ அம்மா ?

சுபத். போதும், போதும். வாய் வலிக்கப்போகின்றது. புருஷ னும் ஸ்திரீயும் ஒரேமாதிரியாய் அச்சடித்ததுபோற் பேசப் படித்துக்கொண்டீர்களேயம்மா. போதும், போதும். உள் ளன்பில்லார், உறவும் உறவா ? மனத்துயர்தருகின்ற மதினீ ! மதினீ ! உன் வாயை மூடு, மூடு. அடியே !

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

இந்திரனே யானாலுந் தனதனிலு மைச்வர்ய
மெய்திட் டாலும்
அந்தநெடும் பணிக்கொடியன் எவ்வளவோ சிறப்பெல்லா
மடைந்திட் டாலுஞ்
சிந்தையிலெற் கவன்வேண்டா மென்றிருக்க அவனுக்கே
கொடுத்தென் ஜன்மம்
நிந்தைபெறு மண்ணைக்க நினைத்தீர்க ளென்கொலிது
நீதி தானே.

ரூக். சீ, சீ. நீ இப்படிச் சொல்லப்படாது. இப்படிக்கெல்லாஞ் சொல்வது, ஸ்திரீஜாதிகட்குச் சோபையில்லை. பெண்ணைப் பிறந்தவர்க் கிவ்வளவு பிடிவாத மேற்படுமானால், ஆணைப் பிறந்தவர்க் கெவ்வளவு ஆக்கிரகமுண்டாகமாட்டாது ? ஆ! ஆ! என்னருமைத் தோழீ ! அகந்தையொழித்து அடங்கியிருத் தலே அரிவையர்க்கழகு. ஏனங்ஙனமன்றோ ?

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மூத்தவர்தஞ் சொற்கேட்டுக் கீழ்ப்படிந்து நடத்தலன்றே
முறைமை யாகும்
வாய்த்தசிறு பெண்களுக்கெப் பொழுதுமே தன்மூப்பு
வரப்ப டாது.
ஆத்திரமே யுனக்கந்த வான்றானு மழகலனோ?
அரச னன்றோ?
கோத்திரத்திற் குற்றமுண்டோ? கூன்குருடோ? அல்லதவன்
குணங்கெட் டானோ?

சுபத். ஆ! ஆ! மதினி! பாதுக்கமான துனக்குச் சீதளமாகத்தானிருக்குமோடி? பிறரை வருத்தலே உனக்குப் பெருந்தவமாகுமோ? இஃதென்ன வார்த்தையென்று சொல்கின்றாய்? இந்த ஞாயங்களெனக்குந் தெரிந்தவைதான். மற்ற விஷயங்களைப்போலவா பெண்கட்கு வரம் நிச்சயிக்கின்ற விஷயம்? எதெப்படியிருக்கினும், வதூவரர்களின் இருமனமு மொருமனமாய்ப் பொருந்திய தக்க வரனைச் சிந்தித்து, நிச்சயிக்காவிடில், வாழ்க்கைத் துணைநலம் எங்ஙனம் பொருந்தும்? அஃதென்னை? ஜன்ம முடிவுவரை தொந்தமுடையதன்றோ? இவையெல்லாம் நீ நன்குணர்ந்தவளாயினும், பா போ த கத்தி லுனக்கென்ன வரவா? செலவா? தத்தங் குணத்தை நினைத்துப்பார்த்துப் பேசுவதானாற் சரியாயிருக்கும். அதை யான் இப்பொழுது சொல்ல ஆரம்பித்தால், ஏதோ வன்மத்தை வைத்துச் சொல்வதாய் நினைப்பாய்.

ருக். அப்படிக்கொன்றுமில்லை. நீ என்னைப்பற்றி எதையெதைச் சொன்னாலும், எனக்குச்சந்தோஷமாய்த்தானிருக்கும்.

சுப. அப்படியானாற்சொல்லிவிடுகின்றேன். மதினி! கோபம்வரப்படாது.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

மதினியுனைச் சிசுபாலற் குன்றமயன் வரிக்கவவன்
மகிப னன்றோ?

மதியிலனோ? வனப்பிலனோ? எதிலவர்க்குக் குறையுளது?
வகுப்பாய் நீயேன்
சதுர்மறையோன் றனைத்தூது விட்டெனது தமயற்காட்
பட்டா யிந்தக்
கதையுளதோ? இலதோ? அக் காரணத்தை யுரைக்கிலுன்சொற்
கடவே னம்மா!

[உருக்மிணி ஒன்றும்பேசாமற்றலைகவிழ்ந்துட்காருகின்றனள்.]

சுபத். (உருக்மிணியைக்கையாலசைத்து) அகோ! அகோ! மதினி! ஏன் ஒன்றுஞ்சொல்லாமலிருக்கின்றாய்? சொல்லு. சொல்லு. இன்னுமேதாவதெனக்குப்புத்திமதி சொல்லு. சொல்லு.

ருக். எல்லாஞ்சரிதானடி. தோழிபத்தினியே! நீ சொல்வதெல்லாஞ் ஞாயமாகத்தானிருக்கின்றன. நீ இப்படித்தான் சொல்லப் போகின்றாயென்பதும் யான்தெரிந்ததுதான். ஆனால், அதற் கென்செய்யலாம்? இந்தக்காரியம் நின்மனம்போல்நடத்துவது தானுசிதம். அதற்கென்னாலாகக்கூடியதென்னவிருக்கின்றது? ஒன்றுமில்லை. அதனாற்றான் இப்படி வளையவளையப்பேசிக்கொண் டிருக்கின்றேன்.

சுபத். ஆ! ஆ! மதினி! நீயும் அப்படியா சொல்கின்றாய்? இங்குள்ள வர்களுள் நீ ஒருத்திதான் சற்றுதயவுடையவள். நீயுமென்னைக் கைவிடிலெனக்குதவிசெய்வார்யாருமில்லை. நீ மாத்திரம் பூர்ண மனதுவைத்து, எனது சின்னண்ணு கோபாலகிருஷ்ணருடைய மனதிற்சரியாய்ப்படும்படி, என் விஷயத்தைச்சமயம்பார்த்துப் போதனைபண்ணிவைத்தால், அதுவேபோதும். இதுதான் நீ செய்யவேண்டிய உதவி. அதன்மேல் அவர் ஏதாவதொருவழி செய்து என்மனம்போலெல்லாம் நடத்திவைப்பார். நீதயவு செய்து, என்னைப்பற்றியவரிடஞ்சொல்லத்தான்வேண்டும்.

(கோர்ச்சகம்.)

ஏற்குநல்லு பாயமதி லென்மனம்போற் செய்துவைத்துக்
காக்கவல்ல வென்முதல்வர் கண்ணபிரான் றன்னிடத்தில்
நோக்கமறிந் தென்னுடைய நொம்பலங்கள் சொல்லியிந்த
வாக்குதவி செய்தால்யான் மன்னுயிர்பெற் றுய்வேனே.

ருக். ஆ! ஆ! தோழியரசே!! யானிதைப்பற்றி அவர்களிடஞ் சொல்லாமலிருக்கின்றதாகத்தான் நினைக்கின்றனையோ? எந்த எந்தச்சமயம் யானிதைப்பேசவாரம்பிப்பேனோ, அப்பொழுதெல்லாம் அவர்களுடைய இரண்டுகண்களும் மிகவும்பெரிதாய் விடும். உடனெனக்குப்பயமுண்டாய்விடுகின்றது. என்செய்யட்டும்? என்னுடைய சொல்லொன்றுமங்கே ஏறவில்லை. இப்படி எத்தனைதரமோ ஆச்சுது.

சுபத். ஆ! ஆ! மதினி! இஃதெல்லாம் என்னவார்த்தையென்று சொல்லுகின்றாய்? யானென்ன உன்னையறியேனோ? "வேண்டுமென்றிருந்தால் வேரிலும் பழுக்கும்" என்றபடி, நீ மனது வைத்துச்சொல்வதானால், பலியாமற்போகாது. மதினி! யானென்ன அறியேனோ?

(கொச்சகம்.)

இன்னுயிரா யுன்னையவ ரெண்ணியிருக் கின்றவிதந்
தன்னையறி வேனதனாற் சற்றும்நின் சொற்கடவார்
துன்னுமெ னவத்தையெலாஞ் சொல்லியவற் கென்மீது
பின்ன மதைவிலக்கிப் பிரியம் வருத்தாயோ?

(ஷை கொச்சகம்.)

பச்சைமுகி லொத்தவர்பாற் பண்பா யுரைத்திடினீ.
இச்சையென் னுளத்துறுவ தெல்லாம் பயன்பெறுமால்
நிச்சயமா யித்தனைக்கு நீதயவு செய்வையெனி
லச்சமெனக் குண்டோசொல் அம்மா அருளம்மா.

(வசனம்) அகோ! அகோ! மதினீ! உண்மையிலுனக்கென்மீதிலன்புண்டானால், யான் ஜீவனோடிருக்க வேண்டுமென்பதில் உனக்காசை யுண்டானால், எவ்வுபாயத்தினாலாவதவர் மனதைவிளக்கி, என்பொருட்டவர்க் கிந்தவார்த்தையை உறுதிப்படுத்திவைக்க வேண்டும். அப்படிச்செய்ய உன்மனதிற்றுணிவையில்லையானால், அதை இப்பொழுதே சொல்லிவிடு.

(என்று சொல்லிக் கண்ணீர் உகுக்கின்றனள்.)

ருக். (மிகோக வெகுமானத்துடன், சுபத்திரையைத் தழுவிக்கொண்டு) ஆ! ஆ! என்னருமைத் தோழிரத்தினமே! உனது துக்கத்தைப் பார்க்கின்றபொழுது என் இதயம் சிதிலமாய்ச் சிதறுகின்றது. இருக்கட்டும். நீ சும்மாவிதனப்படவேண்டாம். என்னால் கூடுமானமட்டும் இன்னமுஞ்சொல்லி அவர்மனதை இளக்குகின்றேன். நீ சும்மாயிரு. இனிக்கவலைப்படவேண்டாம். உன் கஷ்டத்தைக் கண்ணுற்பார்க்க முடியவில்லை.

சுபத். (ருக்மிணி கையைப்பிடித்துக்கொண்டு) ஆ! ஆ! மதினி! நீ யென்ன உபாயஞ்செய்வையோ, யான் உன்னையே நம்பியிருக்கின்றேன். நீ எனக்குபயந்தந்திரக்ஷிக்கவேண்டும்.

ருக். பயப்படாதே. பயப்படாதே. எல்லாம் உன்மனம்போலாகும்.

[அப்பால், அவசரத்தில் விதுரவசக பிரவேசித்து.]

விதூ. ஓ! அம்மணீ! அம்மணீ! வாருங்கள்! வாருங்கள்! பதிமஹா ஸ்வாமிகள் பிக்ஷைசெய்யப் பலகையிலுட்கார்ந்திருக்கின்றார்கள். சீக்கிரம் வாருங்கள்! வாருங்கள்! பெரிய மஹாராஜா அவர்கள் உத்தரவு நம் சுபத்திராதேவி வந்து தான் ஹஸ்தோதகங் கொடுக்கவேண்டுமாம். சீக்கிரம் வாருங்கள்!

ருக். ஸரி. ஸரி. தோழிமணீ! ஸ்வாமி தரிசனத்திற்குச் செல்வோம்.

(என்றுசொல்லி எல்லவருஞ் சென்றனர்)

2-வது அங்கம் முற்றிற்று.

---

## 3-வது அங்கம்.

---

(அப்பால், தக்க ஆசனத்தில் வீற்றிருக்கின்றவராய் பலராமரும், கிருஷ்ணனும் சிலசேவகரும் பிரவேசிக்கின்றனர்.)

பலரா. கிருஷ்ணா! ஆ! ஆ! நமது பாக்கியமே பாக்கியம்! இந்த மஹான்யதீச்வரருடைய திவ்யதரிசனத்தினால், ஜன்மஸாபல்யமாச்சுது. எனதாத்மாவான தெவ்வளவானந்த பரிதமாயிருக்

கின்றது! பார்!! இம்மஹான் கருணை கூர்ந்து நம் இராஜகிரஹத்திற்கு விஜயஞ்செய்த விசேஷத்தினால், நம் நாடு, நகரம், இராச்சிய முழுவதுமே சுபிக்ஷத்தோடு மென்மேலும் அதிசோபாயமானமாய் விளங்குமென்பதிற் சந்தேகமின்று. ஹா! ஹா! ஹா! என்ன! என்ன இவருடைய தேஜஸ்ஸு! உலகத்திலிதுவரை எத்தனையோபேர்கள் மஹா மஹா ஸன்யாஸிகளாய் வரப்பார்த்திருக்கின்றேன். அதை யெல்லாம்பார்க்க, இப்பொழுது பார்த்த யதீந்தர் மேலான தேஜஸ்வியாக விளங்குகின்றார். இவரைப் போலெங்குங்காணக் கிடைப்பதரிது. ஹா! ஹா! ஆனந்தம். கிருஷ்ணா! இவரைப்பற்றி எப்படி உனதபிப்பிராயம்?

கிருஷ். ஆ! அண்ணா! ஏதேதோ இவரைப்பற்றி மிகமிகப்புகழ்கின்றீர்கள். எனக்கு அவ்வளவு ஒத்தியமான நிலமையாகத் தோன்றவில்லை.

பலரா. ஹா! ஹா! ஹா! ஏனப்படிச் சொல்கின்றனை? பிரமசொரூபம் பிரத்தியக்ஷமாய் விளங்குகின்ற இம்மஹானிடத்திலும் உனக்குண்மையான நிலமை தோற்றவில்லையா? பார்!

(எண்சீர்க்கழிநெடில்விருத்தம்.)

நிந்தையுறு மிவ்வுலக வாழ்க்கை யெல்லாம்
நிச்சயமாய்த் துச்சமென நிராக ரித்துச்
சிந்தைநலம் பெற்றொளிர்ம காவை ராக்யந்
திகழ்கின்ற ரொருவனிலைதச் சேரப் பெற்றால்
அந்தநர னேபெரியோ னுகு மன்றே
அத்தனையோ டணிமாதி சித்தி யெல்லாம்
வந்திவர்க்குப் பணிசெயுமா றேங்கு கின்றார்
மாமுனிவ ரிவர்பெருமை வழுத்தற் காமோ?

(வசனம்) அடே! அடே! கிருஷ்ணா! என்னென்று சொல்லட்டும் அவரது பெருமையை!! அவரது ஸஹவாஸம் என்றென்று மிடைவிடாதிருத்தல்வேண்டும்.

(அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

இவருடைய ஸகவாஸம் நமக்கென்று மெய்திடப்பெற்
றிருக்கு மானுற்
கவருடைய பிரபஞ்ச வாழ்க்கையின்வன் றுயர்களனு
காது கண்டாய்
சுவமுறுகற் றனஞ்சயன்போல் மெஞ்ஞான ஒளிபரவிச்
சொலிக்கப் பெற்ற
தவதனமா றுறவியிவர்க் கிணையாக ஒருவரிந்தச்
சகத்தி லுண்டோ?

கிருஷ். அண்ணா! தாங்கள் யாரையுமே நம்பிவிடுகின்றீர்கள். அவருடைய செய்கைகளுமிருப்பும்பார்த்தால், நிந்திக்கத்தோன்றுவதைத்தவிர, வந்திக்கும்படி உயர்குணங்களொன்றுந்தோன்றவில்லை.

பலரா. (ரோஷத்துடன்) ஹே! ஹே! நாஸ்திக! இத்தகைய நிர்மல மஹாஸாதுவினிடத்திலுமுனக்கு வீண் சங்கைகள் தோன்றுகின்றனவல்லவா? உனது புத்தியே விசித்திரமாகஇருக்கின்றது. அடே! பார்!!

ஆசிரிய விருத்தம்.

கருதியிவ ரேதெதுசெய் தாலுமவை யாவு நிட்
காமகன் மங்க ளன்றிக்
காமியம தாய்ப்புரிதல் காண்கிலம் பிணுமிச்ச
கத்தவரி டத்தி லன்பாய்ச்
சரசவின யத்தொடுசி ரித்துச்சி ரித்தினிது
ஸாரமாய்ப் பேசு மந்தச்
சமயத்தி லும்மனே வ்ருத்திகளொ லாஞசச்சி
தானந்த வஸ்து வதனிற்
றிரமொடு லயப்பட் டிருக்கின்ற தாகவே
தெரிகின்ற னம்உண்மை யாய்த்

தேகமதை யேமறந் தொளிர்பிரம வானந்த
திவ்யஸா கரத்தின் மூழ்கிப்
பரிவினுட னெப்பொழுது மனுபவசு காமிருத
பானமே செய்து கொண்டு
பரமகரு ணைமூர்த்தி யாய்விளங் கின்றவப்
பண்பினை உரைக்க வசமோ?

கிருஷ். அண்ணா! தங்கட்குக்கோபம்வருவதானால், யான் திரும்ப ஓர் வார்த்தையுஞ்சொல்லவில்லை. ஆனால், அவருடைய நடப்புக ளெல்லாந் தங்கட்குண்மையாகத்தோன்றியிருக்கின்றன. அப் படி எனக்குத்தோன்றவில்லை. அதனால், தங்களிடம் யானப் படிச்சொல்கின்றேன்.

பலரா. என்னென்ன அவருடைய நடப்புகளிற் குறைச்சற்றோன்றி விட்டதுனக்கு? அதை விளங்கச்சொல்லு.

கிருஷ். ஆ! அண்ணா! சொல்கின்றேன். கோபிக்கக்கூடாது. ஆனாலு மிதம்பிசகல்லவா? இப்படி எங்காவது கண்டதுண்டா? யான் சொல்வதை நன்றாய் மனதிற் கவனித்துப்பாருங்கள். அப் பொழுதவனுடைய நிலைமை இத்தகையதென்பது நன்குவிளங் கும்.

## எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

சுந்தரிநஞ் சுபத்திரையங் குற்ற போது
சுத்தவெறி ப்ராந்தனைப்போற் சுற்றிச் சுற்றித்
தொந்தனிமை யாட்டமின்றி நோக்கு கின்றான்
சொற்றொடர்பில் நாவுளறு கின்ற தந்தோ!
சந்ததமுங் கரத்தொளிர்கோ முகியுந் தானுய்த்
தரைநழுவு கின்றதுயர் சமாதி யெல்லாஞ்
சிந்தைநில்லை தடுமாறித் தத்த ளித்துச்
சிதறுகின்ற தவனுடைய சேஷ்டை யென்னே!

பலரா. (திரஸ்கரித்து,) சீ. சீ. என்னவார்த்தை இயம்புகின்றாய்? அடே! அடே!

## அகவல்.

ஏதடா க்ருஷ்ணா இப்படிக் கெல்லாந்
தீதுள கற்பனை செய்கின் றாய்நீ
இல்லா தியற்று மிவ்வுல கியற்கை
எல்லா நின்பா லிருப்பிடங் கொண்டு
வந்தன வென்றே வழுத்தவுந் தகுமால்
இந்தநின் புத்திக் கிருப்பிட மெதுகொல்?
இதனா லன்றோ இத்தகைக் குடில
மதியர்க டம்ஸக வாஸத்தை விட்டு
மனவழுக் கறுத்த மஹரியோ கியரெலாம்
வனவரைக் குகையில் வசிக்கின் றனரால்
ஈடணை மமதைகள் யாவு மொழித்து
நாடிடு மாத்மா னந்தத்தின் மூழ்கி
நித்ய த்ருப்தராய்ச் சுத்தசை தன்யராய்
முக்தராய் விளங்கு மூர்த்தியிம் முனிவர்
தானந் தவமுஞ் சாது சங்கமும்
ஞானநூ லறிவும் நாடிடா தென்றும்
புசிக்கவு மார்ச்சிதம் புரியவு மாகவே
பசுக்களை யொத்த பாமர ராகிய
நம்மவர்க் கெல்லாம் நல்லறி வூட்டிச்
சன்மோத் தாரணஞ் செய்தற் பொருட்டாய்த்
தோன்றின ராகுமித் துறவியர்க் கரசனை
யொன்றி யோசித் துளவறி யாமலே
நிந்தனை யுரைத்து நின்னைநீ யாகவே
சந்ததம் பாவ சமுத்திரத் தாழ்த்தியுன்
றன்னைநீ கெடுத்துக் கொண்டதுந் தவிர
என்னையும் வீழ்த்த வெண்ணுகின் றாய்கொல்?
நன்று நன்றடா நந்தகோ பாலா
இன்று யாமிவர்க் கியற்றிய விருந்தில்
பிக்ஷையின் விமர்சை பேசுதற் கெளிதோ ?
பக்ஷண வகைகளும் பலவகைக் கறிகளும்
அன்னபா யஸமு மாகிய வெல்லாம்

என்னென்ன பக்குவம்! எப்படிச் சமைந்தது!
புசித்ததி லவர்க்கே தேனு மற்பமும்
ருசித்ததாய்த் தெரிந்ததா? உண்மை நவலுதி
ஏற்றமோர்க் குழம்பி லெலுமிச் சங்கனிச்
சாற்றினைப் பிழிந்துந் ததியினிற் பஞ்ச
தாரையைக் கலந்துஞ் சட்டினி வகைகளை
க்ஷீரபா யஸத்திற் செழிப்புறச் சேர்த்தும்
உப்பொடு நெய்யை யூற்றிப் பிசைந்தும்
செப்புமிவ் விதமாய்ச் சிலசில வற்றை
வாயடங் காது வாரிப் போடுவர்
காய்கிழங் கருந்திக் கானத் திருந்தவர்
உடனெழுந் திடுவர் உட்கார்ந் தவர்மறு
படியெழுந் திடுமிப் பான்மைக ளெல்லாம்
வீண்சேஷ்டை என்ன விளம்புதற் றவறே
ஊணுறக் கங்க ளொழித்தவ ரிவரே
ஏக வஸ்துவி லேயிவர்க் கிலக்கு
ஆகலி னிவர்மே லையம கற்றுவை.

கிருஷ். அண்ணா! வாஸ்தவத்தில் மஹானாயிருந்தால் வம்பாய்த் தூஷிக்கப்படாதுதான். இவன் அப்படிப்பட்டவனாகத் தோன்றவில்லை. இவன் வாஸ்தவ ஞானியாயிருந்தால், பிக்ஷை புஜிக்கும்பொழுதிப்படி யெல்லாமேன் செய்கின்றனன்? இதற்குள்ளிருக்கின்ற கூடார்த்தத்தைத் தங்களாலறிய முடியாது. அஃதெனக்குத்தான் தெரியும்.

பலரா. ஹா! ஹா! நீ புத்தியிற் பிரகஸ்பதியல்லவோ? அஃதென்கொல் கூடார்த்தம்? அதையுஞ் சொல்லிவிடு.

கிருஷ். அண்ணா! கோபிக்கவேண்டாம். சிறுவனாயிருக்கின்ற என் புத்திக்கெட்டியதைச் சொல்லுகின்றேன்.

(எழுசீர்க்கழிநெடில் விருத்தம்)

சோதியின் னனநஞ் சுபத்திரா மணியுந்
தோன்றியங் கடிக்கடி வந்த

ஹோதுவா லவட னெழிலுரு வதனி
வீடெட் டதிமைய லெய்தி
மேதையு மயங்கி மெய்மறந் திந்த
விதமெலாஞ் சேஷ்டைசெய் கின்ற
ஹேதுமந் நான்செய் ஜாலத்தி னீவி
ருண்மருண் டுரைப்பதை யொத்தே.

(வசனம்.) அண்ணா! ஏதோ இப்படிச் சொல்கின்றனென் றெண்ண வேண்டாம். சற்றேபந்தி மத்திமயியானில்லாதிருந்தால், தாங்கள் சூது வாதற்ற சுத்தரென்று தெரிந்துகொண்டு, அவனிவ்வித சேஷ்டைகளெல்லாஞ் செய்திருக்கின்றான். ஆனாற் காமாதுரற்குப் பயமேது லச்சையேது? நா, சுபத்திராவிஷயக்காமப்பித்திவனுக்குச் சிக்கேறிவிட்ட தென்பது நிச்சயமாய்த் தெரிகின்றது. இந்தமர்மங்கள் தங்களாலறிய முடியாது.

பலரா. சீ. சீ. எனக்கும் ஒரு சொட்டுப் போடுகின்றனையா? நல்லதிருக்கட்டும். கேடுகெட்ட நின்நாவை நறுக்கல்வேண்டும். யாவனொருவனுக்குப் பாத்திரா பாத்திரங்களை விசாரித்தறிகின்ற சக்தியில்லையோ, அவனை மனிதனென்று சொல்வதைவிட மாடென்றே சொல்லலாம். செவிடனிடத்தூத் திருமந்திரத்தைச் செப்புவதுபோல், அம்மஹானுடைய வர்ணனையை இந்தமூர்க்க சிகாமணியினிடத்திலேன் வீணேசச்சொல்கின்றேன். சீ. சீ.

(என்று முகத்தை வேறுபக்கத்திற் றிருப்பிக்கொண்டனர்.)

கிருஷ். அடட! இதுவொரு பெரிய கெடுதலாக வல்லவா வந்து விட்டது? அவன் சாதுவாயிருக்கட்டும், அசாதுவாயிருக்கட்டும். ஏதோ ஸல்லாபமாய் வார்த்தை பேசுகின்ற இடத்தில், மனஸ்தாபம் வைத்துக்கொள்வானேன்? சரி. சரி. அண்ணா! அவர் பெரியவர்தான். பெரியவர்தான். அப்படியேயாகட்டும். என்னைவிடத் தங்களுக்கனுபோக மதிகமிருக்குமல்லவா? அதனாற்றங்களுக்குச் சரியென்று தோன்றியிருந்தாலதுதான் சரி.

பலரா. (திரும்பிப் பார்க்காமலே) அடே! அடே! போ. போ. நீ மிகப் பெரியவனாகவேயிரு. ஸத்ஸாதுவினிடத்தில் விசுவாசமில்லாத

ஒருவன் தமயனுக்கெப்படி மரியாதை செய்வான்? அஃதெல்லாம் ஸஹஜமாய்த்தெரிகின்றது.

கிருஷ். ஆ! ஆ! இதுவென்கொல்? அண்ணா! ஸாமான்ய காரணத்தினாலிப்படிக் கோபித்துக்கொள்வது நன்றாயிருக்கவில்லை. என் பேரிற் குற்றந்தான். இப்படிக்கோபித்துக் கொள்வீர்களென்று தெரிந்திருந்தால், முன்னமேயே யானிதைப்பற்றிச் சம்பாஷித்திருக்கமாட்டேன். ஆகையால், மன்னிக்கவேண்டும்.

பலரா. (கிருஷ்ணனை ஏறிட்டுப்பார்த்து) அடே! கிருஷ்ணா! உன்னுடைய நிலைமையினனுபோகம் வெகுநாளா யெனக்குண்டு. என் மனதிற்கு விரோதபக்ஷத்தைச் சார்ந்து, எனக்குக் கோபத்தை யுண்டுபண்ணுவதே உனது வழக்கம். அடே! எனக்குறு கோப, முனக்குற்சாகம். இதனாலுனக்கு பெரியமதிப்புண்டாகட்டும்.

கிருஷ். ஆ! ஆ! அண்ணா! போதும். போதும். தங்கட் கிவ்வளவு சங்கடங்கொடுத்ததென் மனதிற்கே வருத்தமாயிருக்கின்றது. மன்னித்துக்கொள்ளவேண்டும்.

(என்று கால்களைப்பிடித்து வணங்குகின்றனன்.)

பலரா. (ஆனந்தத்துடன்) (தன்னுள்) இந்தமஹாமாயாவியின் ஜாலவித்தை மிகமிகச் சாதுரியமாக யிருக்கின்றது. (வெளிப்படை) அடே! அடே! போதும். போதும். கிருஷ்ணா! கோபம் போய்விட்டது. எழுந்திரு. எழுந்திரு.

கிருஷ். (சிரித்துக்கொண்டு) (தன்னுள்) இப்பொழுதிந்த எனது பிரசங்கமானது பின்னொலொருசமயம் மிக்க உசிதமான உதவியாகும். அதைப்பற்றி என்னென்று சொல்ல!

பலரா. கிருஷ்ணா! அவ்யதீச்வரர்விஷயமாய் உன்னிடங் கொஞ்சம் யோசிக்கவேண்டியிருக்கிறது. ஆனால், இப்பொழுது நடந்திருக்கின்ற வார்த்தைகளினால், உனதபிப்பிராய மின்னபடிதானிருக்குமென்பதுந் தெரிந்துதானிருக்கின்றது. ஆயினும், உன்னிடஞ் சொல்லாமற் செய்வது சரியன்று. அதனாலதையுஞ் சொல்கின்றேன். கேள்.

**கிருஷ்.** அஃதென்ன யோசனையோ? அதையுஞ் சொன்னாலெனக்குத் தோன்றுவதைச் சொல்கின்றேன். அது தங்கட்கு யுக்தமா யிருந்தாலொப்புக்கொள்கின்றது. இல்லாவிடிற் றள்ளிவிடு கின்றது.

**பலரா.** கிருஷ்ணா! மற்றொன் றுமில்லை.

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

அருந்தவப் பேறாய்க் கிடைத்தநல் லிதனை
யகற்றிடு வார்கொலோ வறிவோர்
சுரந்தமெய் ஞானத் தூய்முனி யிவரைச்
சுகமுற மாதமோர் நான்கு
பொருந்திநம் பவனத் திருந்திடச் செய்தாற்
புண்ணிய மிகமிகப் பொங்கும்
நிரந்தர மிவர்சொல் வேதவாக் கியங்கள்
நித்தலு நஞ்செவிப் படுமால்.

(வசனம்) கிருஷ்ணா! ஸாதுஸங்கஞ் ஸாமானியமன்று. அம்மகானுடைய முகமாய்வருகின்ற அபூர்வ வேதவேதாந்த உபநிடத சாரங்களைச் சிரவணஞ்செய்வதிற் கிருஹஸ்தாச்சிரமத்திலிருக்கின்ற நம்முடைய ஜன்மமெல்லாம் ஸாபல்யத்தைப்பெறும். பருதியைக்கண்ட கங்குல்போல் நமது பாபங்கள் பறந்தோடி விடும். இதுதானெனது மனோரதம்.

**கிருஷ்.** ஓ! ஓ! அண்ணா! தங்கள் மனோரதம் நிரம்ப யோக்யமாக விருக்கின்றது. அண்ணா! இவரைமட்டிலுமன்று. இவரைப் போலைம்பதாயிரம் ஸாதுக்களையானாலும் வைத்துச்சம்ரக்ஷணை செய்யச்சக்தியில்லை யென்றில்லை. ஆனால்........................

**பலரா.** என்ன? "ஆனால்," என்று, மேலென்ன சொல்லவாரம்பிக்கின்றனை? அதையுஞ்சொல்லிவிடு.

**கிருஷ்.** அண்ணா! யான சொல்லப்போகின்ற வார்த்தை, தங்களபிப் பிராயத்திற்கு விரோதமாயதிகமில்லை. நிராசையாயிருக்கின்ற யோகிகளுக்கு, கிரகஸ்தர்களுடைய கிருஹத்தில் வசிப்பதற்குச்

சரிப்படாது. அதனால், இந்தச்சமுத்திரதீரத்திலிருக்கின்ற சிவாலயத்திலிருந்துகொண்டிருக்கட்டும். அதுவே போதும். தினந்தோறும் தரிசனத்திற்குப்போய்வந்து கொள்ளலாம்.

**பலரா.** சீ. சீ. அதனாற்குடும்பத்திலெல்லார்களுக்குந் தரிசனத்திற்குச் சௌகரியப்படாது. வீட்டிற்றானே வைத்துக்கொண்டால், வீட்டிலுள்ளவர்களெப்போதெப்போது தரிசனஞ்செய்யநினைப்பார்களோ, அப்போதெல்லாந்தரிசனஞ்செய்துகொள்ளலாம். அடிக்கடி சிரவணஞ்செய்து கொள்ளவுஞ்சௌகரியமாயிருக்கும்.

**கிருஷ்.** அங்ஙனமாயின், நம் இராஜ கிரஹத்திற்குப்பக்கத்திலிருக்கின்ற மாடகசாலையின்புறத்துப் பங்களாவிலிருந்துகொள்ளட்டும். போக்குவரவுக்கதிகதூரமுமில்லை.

**பலரா.** அடடா! என்ன? என்ன ஜாகை தீர்மானித்துவிடுகின்றாய். அப்படி ஒதுக்கிவைக்கப்படாது. செய்கின்றகாரியம் பயன்பெறவேண்டும். அதற்கு எனது முக்கிய உத்தேசம் வேறே இருக்கின்றது. அதுதானுசிதமாயிருக்கும்.

**கிருஷ்.** அஃதெப்படி?

**பலரா.** நம் சுபத்திரையின் கன்னிகாமாடத்திலேயே அவர்க்குச் சாகை ஏற்படுத்தவேண்டும். அங்ஙனமாயின், சுபத்திரை இப்பொழுது கொஞ்சகாலமாய் நம் வரிதியிலில்லாமல் ஒருவிதப்பிடிவாதச்சுபாவத்தையடைந்து, பல விகாரமாய்த் தோற்றிக்கொண்டிருக்கின்ற துர்க்குணங்களெல்லாம் மாறி, நல்ல சுபாவங்களையடைந்து, சௌக்கியமுற்றிருப்பள். அவளுடைய கல்யாணமுந்தோஷகரமான கெடுதல்கணீங்கி, அவட்கிதகரமாகவேபலிக்கும். ஏன்? அங்ஙனமன்றோ? ஸாதுஸங்கம் ஸகல நன்மையுந்தருமென்பது ஸத்தியமாகையால், அவளே அனவரதமும் அவர்க்கண்டையிலிருந்து பணிவிடைபுரிந்து, அவரதனுக்கிரகவிசேஷத்தாற் சகல சௌபாக்கியங்களையும் அடையட்டும்.

கிருஷ். சரி. சரி. நிரம்பநன்றாச்சுது. அண்ணா! நல்ல யோசனைசெய்தீர்கள். இந்த ஒரு சங்கதிமட்டிலுமெனக்குச்சம்மதமாகாது. என்ன? என்ன? சுபத்திரையின் அந்தப்புரத்திற்றானே அந்தத் தருணஸன்யாஸியை வசிக்கச்செய்கின்றதோ? சீ. சீ. அதிலெவ்வளவு ஏளனமேற்படும்? “கள்ளன்கையிற் கஜானுச்சாவியைக்கொடுத்ததுபோலன்றோ ஆய்விடும்?”

விருத்தம்.

தருண வயதுஞ் சுந்தரமுந் தந்தவொளியும் புன்சிரிப்புங்
கருணை சுரந்த விருவிழியுங் காமந்தழைக்கு மெழிலேனுக்குஞ்
சரஸ வினய வார்த்தைகளுந் தடந்தோண்மார்புந் தைரியமும்
உருமன் மதன்போ லொளிர்கின்ற னிவன்போலுண்டோ ஒருசாது.

பலரா. (அருவையுடன்) அடட! இப்பொழுதென்னதான்செய்கின்றது? இந்த உனது வார்த்தை நடுச்செவியிலொராசங்காய்ச்சிவிட்டதுபோலிருக்கின்றது. பாபமயமாகிய உன் மனதிற்கும், அம்மஹாயோகியின் சுத்தாந்தக்கரண யோக்கியதைக்கும், தாரதம்மியத்தைச் சமமாகவெண்ணியோ இப்படிக்கெட்ட கற்பனை செய்கின்றனை? சீ. சீ. உன்வார்த்தையைத்தள்ளு. உன்னிடமிதைப்பற்றிச் சொல்லவந்ததே தப்பு. போ. போ.

கிருஷ். ஆ! ஆ! அண்ணா! என்வார்த்தைகளில் மரியாதைக்குறைவான சொற்களிருந்தாலும், மன்னித்துக்கொள்ளுங்கள். சமயத்திற் சொல்லவேண்டியதைச் சொல்லாமலிருந்துவிட்டாற்பின்னாற் கெடுதல்வருமென்பதையுத்தேசித்துச் சொன்னேன். பொதுவாகவே யோசித்துப்பாருங்கள். அவரை மேலானயோகியாகவே வைத்துக்கொள்ளுங்கள். ஆயினும், இத்தகைய ஸர்வாங்க சுந்தரிகளான தருணஸ்திரீ ஸகவாஸத்தால், அநேக யோகியர்களெல்லாம் தவத்தினின்றுஞ் சலித்துத்தவறுதலடைந்துள்ள இதிகாசங்களொத்தனையோ கேட்டிருப்பதில்லையா?

வெண்பா.

காதிசுதர் மேனகைமேற் காமுற்று நற்றவங்கள்
சேதமுற்ற செய்தி தெரியாதா?—சதொன்று?

முன்னம் பராசரரும் மோகத்து ழன்றனரால்
அன்னவர்க்கே அப்படியானால்.

(வசனம்.) ஆ! அண்ணா! இவ் யதியைப்பற்றி என்னென்றுநினைக்கின்றீர்கள்?

(விருத்தம்.)

கருப்பஞ்சிலையும்பூங்கணையுங்கையிற்றரித்தாற்காமனென்றே
உரைப்பவிளங்கும்வனப்புடையோன்யுவாவாயதிலுமொளிர்கின்றான்
இருப்புமிவன்றனிதயமதிலெழும்பிச்சொலிக்கும்விடயசுக
விருப்பமதனைமறைப்பான்போல்மெய்யில்விபூதிமிகப்புனைந்தான்.

(வசனம்) ஆ! ஆ! அண்ணா! என்ன! என்ன அவ்யதிவிலாசம்! ஓ! ஓ! ஆச்சரியம்! ஆச்சரியம்!

விருத்தம்

விடயவிருப்புள்ளடங்காதும்மேலேகுவிந்ததனிதமென்ன
முடியின்சொருக்குஞ்செஞ்சால்வைமுருக்குண்டொளிருமுருமாலும்
இடையிற்றழைத்தரோஸ்கலர்வாய்ந்தெழிலார்ந்திலங்குங்காஷாய
உடையுந்திகழவரங்கபுரிஉலவுஞ்சூத்ரதாரனொத்தான்.

(வசனம்) அடட! அரங்கபுரியிற் சூத்திரதாரன்றோன்றி உலாவுதல் போலுலாத்துகின்றான். அன்றியும், அரைக்கச்சைகட்டி, ஜப மாலை கையிற்றரித்து, தியானத்திலிருக்கின்ற சமயத்திற்பார்த் தால், மஹாடாம்பிகனுகவே விளங்குகின்றான். அண்ணா!

விருத்தம்.

தந்தப் பாத குறடேறிச் சடசடெனவே சத்தமிட
அந்தப் பாதர் நடக்கின்ற அழகைப்பார்த்தா லவ்விடம்பம்
இந்தப் பாரி லுருவெடுத்திங் கெய்திட்டதுவென் றேசொலலாம்
விந்தைக் கோல முனிவேட மேவுமிவனோர் விடனுகும்.

(வசனம்) எல்லாமிடம்பமயமாகவே தெரிகின்றன. அண்ணா! இன்னமும், அவன் மெய்யான தன் சொரூபத்தை மறைத்து வேடமாய் வந்தவனென்பதுவிளங்க, அவன் மெய்யான ஸர்வாங்கமும் விபூதியைப்பூசிப்புண்டாங்கமட்டி, உருத்திராக்ஷமாலைகள்

மென்மேலும் புணர்ந்து, வெகுஜாக்கிரதையுடன் பார்க்கின்ற பார்வையானது வேடமென்று தோற்றிவைக்கவில்லையா? ஓ! ஓ! ஓ!

## விருத்தம்.

வெள்ளைப் படிக குண்டலங்கண் மேலிட்டசைய முகமினுங்க
உள்ளக் கவட மக்கவட வுருவாய்த்திகழ்ந்த தெனமேவாங்க
கொள்ளைக் கன்னக் கோலெனவே கொண்டான்கரத்திற் றிரிதண்
கள்ளத் தனமா யேதேதோ கவர்வான் றுறவுக் கள்வனிவன். [டம்

(வசனம்) அண்ணா! அத்தகையஇவனையோ ஸர்வாங்க சுந்தரியான நம் சுபத்திராமணியினந்தப்புரத்திற்றலோ வயிக்கச்செய்ய வேண்டுமென்றெண்ணுகின்றீர்கள்? நன்று. நன்று. வெகு அழகாயிருக்கின்றது தங்கள் யோசனை.

பலரா. பேஷ், பேஷ். கிருஷ்ணா! இப்படித் தருணவயதுந் தக்க ஸௌந்தர்யமுமுடைய புருஷனுக்கு வைராக்கியமுண்டாகமாட்டாதென்றுதானுனதெண்ணமோ? அடட! நீ எல்லாம் கண்டறிந்தவனன்றோ! ஆயினும், உனக்கு முக்கிய தத்துவஞ்சொல்கின்றேன். கேள். பொதுவாகவே இவ்வுலகமானது, நன்று, தீது, ஸத்தியம், அஸத்தியம் ஆகிய இவைகளால் வியாபிக்கப்பட்டுள்ளதென்றிருந்தாலும், நன்றைத்தீதாகவும், ஸத்தியத்தை அஸத்தியமாகவும், புத்திமான்களெண்ணப்படாது. விஷய ஜாலத்தைத் தாண்டினவர்கள் உலகத்திலொருவருமில்லையென்றுதான் நினைக்கின்றனையா? அடே! அடே! பேதமற்றவர்க் கேதுபயம்? கிருஷ்ணா! கேள். முன்னொருகாலத்தில் எல்லாரையு மோகிக்கச்செய்கின்ற அரம்பைக்குச் சுகமுனிவர் குருவாயிருந்திருப்பதும், உலகத்திற்கெல்லாம் காமத்தைக் கொடுக்கின்ற மன்மதனும் பரமேச்வரனாற் றகிக்கப்பட்டிருப்பதும், அறிந்திருப்பதில்லையா? அன்றியும், கார்த்திகேயர், மாருதி, இவர்கள் ஒருத்தியின் வசத்திலாவதகப்பட்டவர்களாயில்லை. பீஷ்மகுரு இவ்வுலகத்திற் கலங்காரராய் இன்னமுஞ் சாக்ஷியாயிருந்துகொண்டிருக்கின்றனர். கிருஷ்ணா! இவ்வளவு ஸத்தியஸ்திதி இப்படியிருக்க, உனக்குமாத்திரம் விய

ரீத புத்தியுண்டாவானேன்? அதற்குக் காரணஞ் சொல்லட்டுமா? கோபம் வரப்படாது.

கிருஷ். இதுவென்சொல்? அண்ணா! தங்கள் வார்த்தையி லெப்போதாவது கோபப்படுவதுண்டோ? சும்மா சொல்லுங்கள்.

பலரா. கிருஷ்ணா! யார்தானாகட்டும்; தன்மனம்போற் சகத்தெல்லா மிருப்பதாகவே எண்ணுவது வழக்கம். பொருளிடத்தும் பூவையரிடத்தும், இச்சையற்றவ ரிச்சகத்துளரென்று ஒருவன் சொன்னால், அதைக்கேட்ட, திருடனும் விடபுருடனும் அதைச் சம்மதிப்பார்களா? அதுபோல், மேற்சொல்வானேன்? நீயே தெரிந்துகொள்.

கிருஷ். அண்ணா! தாங்களெப்படியெல்லாமோ நினைக்கின்றீர்கள். நம் சுபத்திரையை அவ்யதியின் ஸகவாஸத்தில், எப்பொழுதுமிருக்கும்படி செய்வது எனக்குச் சரியாய்ப்படவில்லை. அதனாற் பின்னுமென்னென்ன சங்கடமுண்டாகுமோ, அதை யென்னாற் சொல்லமுடியாது.

பலரா. ஸரி, ஸரி. மஹா மேதாவிதான். நடக்கட்டும். நடக்கட்டும். எது எப்படியானாலுஞ்சரி. யானவ்விதமே செய்ய நிச்சயித்தாய்விட்டது. அதற்குப் பங்கமினிக்கிடையாது.

கிருஷ். சரிதான். தங்களிஷ்டம். ஏதாவது சூசனை செய்யவேண்டுமென்றென்னுடைய யோஜனை. அதைச் செய்துவிட்டேன். என்மேலிற் குற்றமில்லை.

பலரா. ஆம். ஆம். அப்படித்தான். அதில்வருகின்ற குற்றமெல்லாம் வரட்டும். அதை யானே தாங்கிக்கொள்கின்றேன். நீ ஒன்றுஞ் சுமக்கவேண்டாம். யானவ்விதந்தான் செய்யப்போகின்றேன்.

(என்று எழுந்திருக்கின்றனர்.)

(கிருஷ்ணனும் எழுகின்றனன்.)

(இருவரும தனித்தனி அவ்ரவரிடஞ் செல்கின்றனர்.)

கிருஷ். (ஆனந்தத்துடன்) (தன்னுள்) நன்று, நன்று. யாம் இன்று நடத்திய வேலைப்பாடுகளின் மாதிரிகளெல்லாம் மிகச் சாதுரியமேயாம். இதனால்,

### வெண்பா.

பலராமர்க் கவ்யதிமேற் பற்றியதோர் பக்தி
உலையா துறப்பித் துவந்தேன்—நலமாகத்
தூறு கனனமெனச் சொல்ஞாயம் போலவே
கோறு துரைத்தமொழி கொண்டு.

(தன்னைக்குறித்து) அடே! அடே! கருஷ்ணா! சிச்சீ, என்னகாரியம் செய்யத்துணிந்தனை ?

### வெண்பா.

கங்கா ஜலம்போற் கலக்கற் றவரிடத்து
மிங்காய் கபட மியற்றுவித்தாய்—சங்கையின்றி
சீச்சீ யிதென்னமதி செய்தாய் சகத்திலொரு
பேய்ச்சன்ம மேயுன் பிறப்பு.

(சற்றாலோசித்து) சீ, சீ. அங்ஙனமன்று. அடே! அடே! நீ உற்பவித்தது நற்பிறப்பேதான். இஃது தேமாற்றுகின்ற பாவ காரியமன்று. எந்தக்காரியமானது முடிவிலிதத்தைக் கொடுக்கின்றதோ, அஃது ஆரம்பமுதல் கடரூபமாய்த் தோன்றினும், அதனுள்ளே கொஞ்சமுந் தோஷமில்லை. அதனால், இப்படிப்பட்ட எனது நடபடிக்கைகளெல்லாம் உலகொப்பத் தகுந்தவைகளேயாம். நிற்க, நிற்க. இன்று சுகமாய் நமக்கு நித்திரைவரும். ஏனெனில், எந்தக் கட்டிடத்திற்கு அஸ்திவாரமாரம்பித்திருந்தோமோ; அது மென்மேலும் சரியாகவே சம்பாரத்திற்கு மேற்பாகம்வரை வளர்ந்துவிட்டது. விக்கினங்களின்றி எல்லாமொற்றிணங்கி வந்துசேர்ந்துகொண்டன. அவ்விஷயமாய்க் கவலை அநேகமாய் நீங்கிவிட்டது. இனிப் பயமில்லை. ஆகையால், இப்பொழுது மனதிற் குற்சாகத்தைத் தருகின்ற இடத்திற்குப்போய் விச்ராந்தி செய்துகொள்ள வேண்டும். அதற்கிப்பொழுது சத்தியபாமையின் கிரஹத்திற்குப்போகின்றதா ? அல்லது, உருக்குமிணியினந்தப்புரத்திற்குப் போகின்றதா ? (சற்று நிதானித்து) சரி, சரி. உருக்மிணியின் மாளிகைக்கே செல்கின்றேன்.

(கொஞ்சம் நடந்துகொண்டு) ஆனால், இச்சமயம் அங்கே சௌக ரியமெப்படியிருக்குமோ? தெரியவில்லை. யானோ கொஞ்ச நாளாய் அவளுக்கு பேட்டி கொடுக்காமலே யிருந்துவிட்டேன். அதனாற் கோபத்தை வகித்துக்கொண்டே யிருப்பாள். அவ ளிடத் தாசை வார்த்தைகள் சொல்லி, நயம்பேசிச் சமாதானஞ் செய்தபிறகுதான், அவளுடைய அற்புத ஸரஸானந்தத்திற்குப் பாத்திரனுகபவிக்கலாம். நன்று, நன்று. எப்படியேனிருக் கட்டும். அங்கேயே செல்கின்றேன். (—) (திரையை நோக்கி) ஓ! ஓ! யாம் வார்த்தைப்போக்கிலேயே, அவளுடைய அந்தப் புரத்திற்குச் சமீபமாகவே வந்துவிட்டேம்போலும். பேஷ், பேஷ். ஏந்து மெம்பிரான காந்தாமணி! இரமணீமணி, எம் ருக்மிணி இன்புற்றிருக்குமம்மாளிகைக்கிடு அவ்வைகுந்த வீடே. ஓஹ! ஓஹ! ஓஹ! இம்மாளிகையின் வளப்பத்தை என் னென்று சொல்வேன்!!

அகவல்.

வளமின்ன படியென வர்ணித் திடவதி
லுளவொரு பொருட்கெவ் வுலகுமே நிகரில
சொலச்சொல விரியும் சுருக்கி யுரைக்கி
லிலக்குமி விலாச மெனப்பெய ரிதற்கே
உற்றதெ னத்தகும் ஓங்குமதன்பாற்
சுற்றிலு மழைபோற் சொரிபூங் காவே
சாலவு மின்பந் தழைக்கின் றதுவால்
மாலையு நெருங்க வந்தது கங்குல
தேவிநீ ராடும் வாவியி னருகாய்ச்
செல்வழி யிதுவே நல்வழி யாகும்
உளமதின் மிகவு மூடல்கொண் டனர்போல்
நளின மடந்தையர் நன்முகங் குவித்து
வாட்டமுற் றிருப்ப மதுகர நாயகர்
காட்டமுற் றடிக்கடி நயமுரைப் பவர்போல்

வந்துவந் தருகின் மன்றாடி நிற்பச்
சுந்தர மயில்கள் துணையுடன் களிப்ப
என்னென்ன வளமை! என்னென்ன புதுமை!
என்னென்ன காக்ஷி! என்னென் றுரைப்பேன்!!

ஹா! ஹா! ஹா! இதோ! இதோ!!

சித்ரட்ட மாமணைச் சிங்கார மாயிர
குரோட்டன் செடிகள் குலவிடு மழகை
என்சொல வென்சொல லிவ்வரா ண்டாக்கள்
மின்சா ரங்களாம் விளக்கொளி சொலிப்ப
ஆச்சர்ய மாக அணியணி யாகப்
பூச்சரந் தொடுக்கும் பூவையர் சிலரோர்
அடுக்கு மெத்தைக ளாகிய பற்பல
படுக்கைக ளெல்லாம் பளபளப் பாக
வாசனைத் தைல வகைகளை மெதுவாய்ப்
பூசுகின் றார்சில பொற்றொடி யார்களை
தட்டிகள் பலவுஞ் சாளர முகப்பின்
வெட்டிவேர்ப் படுதா மேற்கட் டிகளெலாம்
தண்பெறும் பன்னீர்ச் சலத்தினைத் தெளித்துப்
பண்புறக் குளிர்ச்சை பண்ணுகின் றார்சிலர்
தேவிநம் ப்ரியமணி ஸ்ரீருக் மிணிக்கு
ஏவற் புரிபவர் எத்தனை பெண்கள்
ஓஹோ! அங்ஙன முட்டாக் கங்களிற்
பாகார் மொழிச்சியர் பாடுகின் றார்கொலோ ?
எமது நாயகி யின்மனங் களிக்கச்
சமரஸ மாகச் சப்த சொரங்களும்
பெருகிடும் வீணைப் பிடிலுஞ் சித்தார்
வரிசை பெரும்பல வாத்யங்கள் வைத்து
ஓவிய முஞ்சிர மசைத்திடு மாறு
பாவையர் கீதம் பாடுமேன் மேலும்
ச்ரோத்ரா னந்தஞ் சொரிகின் றனரால்
நேர்த்தியிக் காக்ஷிகள் நேத்ரா னந்தம்.

(வசனம்) அடடட! என்னென்ன ராமணீயகம்!! இம்மாளிகைக்குள்ளே யாம் மடமடென்று சென்றுவிடக்கூடாது. சற்று நின்றுநிலைத்து, இந்தக்கான விசேஷங்களையெல்லாம் நன்றாய்க் கேட்டுக்கொண்டே, கொஞ்சம் ஸாவகாசமாய் மெள்ளமெள்ளப் போகவேண்டும்.

[என்று சொல்லிக்கொண்டு, மெள்ளமெள்ளச் செல்கின்றனர்.]

(அப்பால், மேல்வர்ணித்தபடி, பற்பல அற்புதக்காக்ஷிகளுடன் விளங்குகின்ற அந்தப்புரமொகமத்தியில், ஸர்வஸிங்கார்த்ததாதிகள் சூழவிருந்து திவ்யகானங்கள் செய்யவும், மத்தியில், ஹம்ஸதூளிகா மஞ்சத்தின்மீது, ஸ்ரீருக்மிணிதேவி உட்கார்ந்திருப்பதுமாகப் பிரவேசிக்கின்றனள்.)

ருக். (சற்றுநேரங்கானங்கேட்டுக்கொண்டிருந்து) அடி! கோகிலா! பாங்கியர் வெகுநேரமாய்ப்பாடுகின்றார்கள். அதிகநேரமாய் விட்டது. இன்றைக்கென்னுடம்பும் அவ்வளவுசௌக்கியமாகயில்லை. ஆகையால், பாங்கியர்யாவரும் விச்ராந்தியின்பொருட்டுச்செல்லக்கடவது. நீயுமிந்தப்போர்வையை என்மீது போர்த்திவிட்டு, உன்னிடத்திற்குப்போய் விச்ராந்திசெய்துகொள்ளலாம்.

[என்று சொல்லிவிட்டு, ருக்மிணிதேவி சயனித்துக்கொள்கின்றனள்.]
[கோகிலாள் போர்வையால் ருக்மிணியைப் போர்த்துகின்றனள்.]

கோகிலாள். (மற்றப்பாங்கியர்களைக்குறித்து) சகிகாள்! அம்மா அவர்கட்கு நித்திரைவந்துவிட்டதாற் சத்தம்போடாமல், அவரவர் ஜாகைக்குச்செல்லுங்கள்.

(எல்லாரும் சென்றனர்.)

கோகி. (ருக்மிணியின்மஞ்சத்தினருகில் வந்து உற்றுநோக்கி) ஓ! ஓ! என்ன! சொற்பநேரத்திற்குள் கனமான நித்திரையுண்டாய் விட்டதுபோலுமிருக்கின்றது. சரி. சரி. இனியான்செல்ல வேண்டியதுதான். (அப்படியே நாலைந்தடி நடந்து) (பார்த்து) ஆ! ஆ! என்னடி! இதோ நம்மகாராஜா அவர்கள் வருகின்றார்கள்போலிருக்கின்றதே. (திரும்ப இரண்டடிவந்து) ஓ! ஓ! இப்பொழுதென்னசெய்கின்றது? தேவியை எழுப்புவதுங்

குற்றம்; எழுப்பாதிருப்பதுங்குற்றம். இதற்கென்செய்வது? (கட்டிலினருகிற்சென்று) அம்மணீ! அம்மணீ! ஓகோ! இவர்களெழுந்திருக்கவுமில்லையே.

(அப்பால், ஸ்ரீகிருஷ்ணன் பிரவேசிக்கின்றனர்.)

கிருஷ். (கோகிலாவைக்குறித்து) அடீ! என்னநடக்கின்றது? என்ன சமயம்?

கோகி. (அஞ்சலிசெய்துகொண்டு) மகாராஜா! ஒன்றுமில்லை. இராணியவர்கள் கொஞ்சம் நித்திரையிலிருக்கின்றார்கள்.

கிருஷ். என்ன? நித்திரா சமயமா? அதற்குள்ளாகவா? இதுவென்சொல்? நேற்றிரவுகளில், நித்திரைவிழித்துத் தூக்கச்சடைவுகளேதேனுமுண்டோ?

கோகி. ஆம். ஆம். எத்தனையோநாட்களாய்த் தாங்கள் சவ்வாரி வாராதிருந்த நிலைமையை யெதிர்பார்த்துப்பார்த்து, நித்தியமுமே நித்திரை விழிப்புத்தான்

கிருஷ். (தன்னுள்) சரி. சரி. என்மேல் நம் ருக்மிணி கோபமூட்டையைச் சுமத்தப்போகின்றனளென்பதிவள் வாய்மொழியாலேயே தெரிகின்றது. (வெளிப்படை) அடீ! யாம்வந்திருக்கின்றதைச் சொல்லி மெள்ளஎழுப்பு.

கோகி. (மறுபடி கட்டிலினருகிற் சென்று) அம்மணீ! அம்மணீ! மகாராஜா அவர்கள் வந்திருக்கின்றார்கள். எழுந்திருங்கள். எழுந்திருங்கள்.

ருக். (திடுக்கிட்டெழுந்துட்கார்ந்து) (புருவபங்கத்துடன்) இதென்னடீ இங்கிதந்தெரியாதவளாயுபத்திரவஞ்செய்கின்றாய்? சிற்சில தினங்களாகவே தூக்கமில்லாதேக்கமுற்றிருக்கின்ற கண்களுக்கின்றேதோ கொஞ்சம் நித்திரைவந்ததும், உனக்குச்சம்மதமில்லாமற் போச்சுதே.

கோகி. அம்மணீ! இங்கேதோ;

[என்று ஸ்ரீகிருஷ்ணபிரானைக்கைநீட்டிக் காட்டுகின்றனள்.]

ருக். (கிருஷ்ணனைப்பார்த்துக்கொஞ்சமிலச்சையுடன்) (கட்டிலிலிருந் திறங்கி) அடீ! கோகிலே! இப்பொழுதெனக்கிங்கே சுகப் படாது போலிருக்கின்றது. உஷ்ணத்தினால் வேர்வைபெருகு கின்றது. ஆனால், இச்சமயம் ஜலோத்தியானமந்திரத்திற் சுகி க்கத்தக்கது. ஆகையால்,

வெண்பா.

சந்திரகாந் தத்தொளிக டங்குஞ் சலோத்தியான
மந்திரத்தைச் சார்ந்தால் வசதியாம்—இந்தவிடத்
தின்றிளங்காற் றில்லா திருத்தலாற் கோகிலைநீ!
சென்றுமுன்பே வேண்டுவன செய்.

(வசனம்) அதுதான் சுகமாயிருக்கும்.

கிருஷ். ஸரி. ஸரி. அங்கேயே செல்வோம். இவ்விடம் உஷ்ணகாலத் திற்குபயோகமில்லைதான். அன்றியும், இச்சமயம் ஆகாயத் தைப்பார்!!

விருத்தம்.

விரிகடன்மொண்டுமேகம் விண்ணெலாம்பரந்துலாவக்
கருதுமின்னொளிகள்செய்யக் கடகடென்றிடிகர்ச்சிக்கப்
பரவியகங்குல்பாராய் பரிவுறுஞ்சேர்க்கைவிட்டு
விரகநோய்கொண்டார்க்கிந்த வேளையும்வேதைசெய்யும்.

ருக். (கொஞ்சங்கண்களை மூடிவிழித்துக்கொண்டு, பார்த்து) ஆம். ஆம். ஆனால், விரகஜனசாந்தியின்பொருட்டு, அங்கேயேபோக வேண்டியிருந்திருக்கலாம். அங்ஙனமிருக்க, இங்ஙனம்வந்து எனக்கு நித்திரைபங்கஞ்செய்யும்படி யார்சொல்லிவிட்டது?

(அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.)

ஆசைநுமக் கங்கிருந்தா லவள்பாற்சென் றெய்துதனன்
கடைவே யாகும்
மோசமத னாலெனக்கிங் கொன்றுமிலை யாமெனன்ன
முருக்கம் பூவே

வாசமுறு மல்லிகைப்பூ அவளாகும் வண்டுய்க்க
மணமிங் கில்லை
நேசமுடை யாளிவளென் றெனையுளத்தே கொளுமந்த
நினைப்பே போதும்.

கிருஷ். ஆ! ஆ! ஆசைநேசப்பிராணேச்வரீ!! ஏதேதிங்ஙனம் புகல்கின்றாய்? உனக்கிப்படிக்கோபமுண்டாகும்படி ஒருவித நடப்புமென்னிடத்திலில்லை. அங்ஙனமிருக்க, அகாரணமாய் உனக்குக் கோபம் வருவானேன்? இதுநூயமில்லை. அடி! சுந்தரீ!! யானெங்கெங்குசென்றாலும், உனது ஞாபகமே என்சிந்தையிற் குடிகொண்டிருக்கும். அடி! காதற்கண்ணாட்டி!!

ஆசிரியவிருத்தம்.

இதுவென்ன கோபமென் மீதுனைக் கப்பொழுதி
யான்செய்த பிழையென் கொலோ?
இன்பமதி பிம்பமுகி என்பிரான நாயகி
ஏற்கனவே சிலநாள் களாய்
இதமுறவே யாணிவண் சார்ந்திடத் தடைகளாய்
ஏற்பட்ட ஜெராஸி யாலே
ஏற்றநின் னுஸிங்க னுதிசுக மெய்துதற்
கில்லாத இவ்வ ருத்தம்
அதிகரித் திடவுளம் வாடுகின் றேன்சினம்
அகற்றிநல் லருள்செய் கண்டாய்
ஆனவரி வையர்கள்பல பேரிருந் தாலுமென்
அன்பெலா நின்னி டத்தே
பதிவுள்ள தென்பதும் அறியாய்கொ லங்கம்
பறக்கவிக் கோப மென்னே
பரமகல் யாணிநீ ஸரஸமொடு தழுவவிவண்
பக்கலில் வா ருக்மிணீ!!

(வசனம்) ஆ! ஆ! பிராணேச்வரீ! என்மீது நிரம்ப தயவோடு கூடு. கோபஞ்செய்வது தகுதியன்று. ஆகையால், சாந்தத்தை வகித்து, ஸரஸத்தைக்கொடு. என்ன? கோபம் போச்சுதா?

ருக் (தன்னுள்) என்னசெய்யட்டும்? இப்படி மோகன ஜாலத்தை வீசுகின்றபொழுது, என்னுடைய உபாயங்களென்ன நடக்கும்? ஒன்றும் நடக்காது. (வெளிப்படை) ஆம், ஆம். இப்படி இனிமையான வார்த்தைகளினால், எத்தனையோதடவை ஏமாறிப் போயிருக்கின்றேன். ஆனுலிப்பொழுது, தங்களுக்குத் தக்க சிக்ஷைசெய்தாலொழிய, என் கோபமானது சமனத்தையடையாது.

கிருஷ். (சிரித்துக்கொண்டு) அடீ! அப்படிச் சிக்ஷைசெய்யவேண்டுமென்றால், அதற்கென்ன தடை? அடீ! காதற்குரிய மாதுசிரோன்மணீ! என்னைச் சிக்ஷிக்கவேண்டுவதற்கு, எல்லாமே உன்னுடைய சுவாதீனத்திலிருக்கின்றனவே. யான் எத்தனை நேரமானாலும், உன்னுடைய சிக்ஷைக்குட்பட்டவனாகவே யிருக்கின்றேன். பார்!

வெண்பா.

என்றேகந் தன்னை இனிநுன் கரபாசம்
ஒன்ற வளைத்திறுக்கி என்னுரத்திற்—குன்றாக
மீட்டிகளைக் கொண்டிடித்தே இப்படிநீ சிட்சைசெயின்
மாட்டினது கோபம்போம் மட்டும்.

(வசனம்) அடீ! மனோகரீ! அதுமட்டுமன்று. என் கேசத்தைப் பிடித்து, முகத்தை மலர்த்தி, எனது கபோலங்களில் உனது தந்தங்களையூன்றி, உன்னாலானமட்டும் புண்படுத்திவிடு. ஆகவே, இத்தகைய சிக்ஷைகள்தான் என்னுடைய குற்றத்திற்குத் தக்க தண்டனைகளாம்.

(என்றுசொல்லி, அவளை ஆலிங்கனஞ் செய்கின்றனர்.)
(கோபிலை சென்றனள்.)

ருக். (இலச்சையுடன்) (தன்னுள்) இப்பொழுதென்னசொல்கின்றது?

[மஞ்சத்தில், தம்பதிகளிருவருஞ்சேர்ந்தட்காருகின்றனர்.]

கிருஷ். ஓ! என் மனோஹரீ! ஒரு காரணமுமின்றி, வீணாகக் கோபத்தையடைந்து, தனக்கும் பிறர்க்கும் துன்பத்தைக் கொடுக்

கின்றதனுல், என்ன சுகமிருக்கின்றது? பார்! எதார்த்த மின்னதென்றறியாமல், சும்மாவாவது வீண் துராரோபத்தைக் கொண்டு துன்பத்தைக் கொடுப்பதி லென்ன பிரயோசனம்? யானே முதன்முதலிற், கல்யாணஜோஸிகளிற் சிலநாட்கழிய வும், அப்பால், சுபத்திரையின் தேகஜாட்டியத்தின் கவலை ஏற்பட்டுச் சிலநாட்கழியவும், ஆக இப்படியே தடைசெய்யப் பட்டவனுய், நாட்கள் வீணுய்க் கழிந்தன. அதற்கென் செய்யலாம்?

ருக். ஆம், ஆம். எத்தனையுண்மை? தோழியின் கல்யாணச்சோஸி யிற்றுங்கள் தலையிட்டுக்கொண் டுழைத்ததும், அவளது தேக ஜாட்டியத்தைப்பற்றிக் கவலையடைந்திருந்ததும் எவ்வளவு? எல்லாம் அறிவேன். இருக்கட்டும். நல்ல வார்த்தைக் கிடங் கிடைத்தது. நானே அவ்விஷயமாய்ச் சில வார்த்தைகள் சொல்லவேண்டுமென்றிருந்தேன். அதற் கிடங்கிடைத்தது. இப்பொழுது, யான் எதையெதைக் கேட்கின்றேனே, அதை யதை உள்ளபடி சற்றுமொளியாமல், நிஷ்கபட மனதுடன் சொல்லவேண்டும்.

கிருஷ். அதிருக்கட்டும். அடீ! சுந்தரீ! இப்பொழுது நடுராத் திரியாகின்றதல்லவா?

ருக். எவ்வளவுநேரம் ஆனுலுமாகட்டும்.

கிருஷ். ஆ; அப்படியா? நன்று, நன்று. ஆனுல், என்ன வார்த் தைகள்? கேட்டுக்கொள்.

ருக். மற்றென்றுமில்லை. தோழியின் கல்யாண விஷயத்தைப்பற்றித் தான். அதுவோ மகா தொந்தராவாயிருக்கின்றது. அவள் மனதிற் கிடப்பொருவிதம்; இங்கு நடப்பொருவிதம். அதைப் பற்றித் தாங்களோ சற்றுங் கவனிக்கின்றதில்லை. அப்படியா னுல், அதிலென்ன முடிவுண்டாகும்?

கிருஷ். அதிலென்ன தொந்தரை வந்துவிட்டது? அதைப்பற்றி என்ன கவனிப்பு? என்ன முடிவுண்டாய்விடும்? எல்லாம்

நானகாவது மாதக்கடைசியிற கலயாணம ஒழுங்காய முடிவு பெறும். அவ்வளவுதான் சொல்லலாம்.

ருக். தாங்களப்படி நிச்சயித்திருந்தால், அவளுக்கெங்கே சம்மதம்? அதுவும் வேண்டாமோ?

கிருஷ். சரி, சரி. நீ இதைப்பற்றிப் பேசுவதிலென்ன பிரயோஜன மிருக்கின்றது? எல்லா விஷயத்திற்கும் அண்ணா அவர்களோ பெரியவர்களாயிருக்கின்றார்கள். எல்லா அதிகாரங்களும் அவர் கட்கேயிருக்கின்றன. ஆகவே, நன்று, தீது என்று பகுத்துப் பார்க்கவேண்டுவதெல்லாம் அவர்களுடைய ஜோலியாய் விட்டன. அப்படியிருந்தும், உன்னைப்போல் யானுமொருக்கால், அவர்களிட மிதைப்பற்றிப் பேசினேன். அதற்குச் சரியாய்ப் பதிற்சொல்லிவிட்டார்கள். அதாவது:—"நீ இந்தச் சங்கதியிற் றலையிடவேண்டாம். அதைப்பற்றிய பொறுப்புக ளெனக்குத்தான். என்னுடைய இஷ்டம்போல் நடக்கும்." என்றே. இப்படிச் சொன்னபிறகு என்னுலென்னவிருக்கின் றது?

ருக். ஆ! ஆ! அதை அப்படிச் சொல்லப்படாது. அவர்கள் பெரி யோராயினும், அவர்கள் செய்வது பிசகாயிருந்தால், அதைப் பற்றித் தடுத்துப்பேசுதற்கஞ்சினுல், எல்லாங் கெடுதலாக வல்லவா சம்பவிக்கும்? ஆனுல், அவர்கள் எப்பொழுதுமே கௌரவர் பக்ஷத்திற்றான் அபிப்பிராயமுடையவர்கள். ஏன்? அப்படியல்லவா?

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

ஆதிமுதன் மைத்துனர்த மெண்ணமெலாங் கௌரவர்பா
லதனு லன்றே
சாதுவெனப் படுமவர்க்குச் சரிதானென் றவளுமதைச்
சம்ம தித்தாற்
பேதமுறு துயர்வாகு மில்லையெனி லக்கார்யம்
பிசகா மன்றோ?
மாதவருஞ் சிறுபெணவள் விஷயமெல்லா நன்குணர்யு
வதியா மன்றோ?

(ஷை விருத்தம்.) (இதுவுமது)

இருவர்மன மொத்தவொரு குடிவாழ்க்கை மிகவினிதங்
கியற்றல் நன்றே
பிரியமிலா தனையிசைத்தாற் சன்மத்தின் முடிவுவரை
பிணியே செய்யும்
பெரிததுவே விபத்தாகு மாலோசித் தவள்மனம்போற்
பேணிப் பார்த்துப்
புரிதலன்றோ சரியாகு மில்லையெனிற் பெண்பாவம்
பொல்லா தன்றோ!

(ஷை விருத்தம்.) (இதுவுமது.)

தங்கைஇவ ளொருத்தியலா லெமெழுட்டிப் பேருளரோ?
சாற்றி வட்டும்
பங்கமியற் றிடிலென்று மாயிரங்கா லத்துவளர்
பயிரி தன்றோ?
பொங்குமவள் சம்மதம்போல் வரனமைத்து மணக்கார்யம்
பொருத்தல் நன்றே
உங்களுட கடமையிதே ஒவ்வாக்கா ரியமுளுற்ற
லுசித மாமோ?

(வசனம்) இது நீர்க்காலோசனையின்பேரிற் செய்யவேண்டிய காரியம். மைத்துனரவர்களோ; இவைகளையெண்ணி யோசிக்கின்றவர்களல்லர். பிடிவாதமே குடிகொண்டவர்களாயிருக்கின்றார்கள். தாங்களும் உதாசீனத்துடன் ஒதுங்கியிருந்தால், அவள் தன்னுடைய ஜீவனுக்கேதாவது செய்துகொண்டாளென்றால், அதிலேற்படுகின்ற குற்றம் மைத்துனரவர்களை மட்டிலுந்தான் சாருமென்பதில்லை. (கிருஷ்ணனுடைய முகத்தை ஏறிட்டுப்பார்த்து) என்ன? யான் ஏதேதோ சொல்கின்றேன். தங்கள் ஞாபகம் இங்கேயேயில்லைப்போலிருக்கின்றதே.

கிருஷ். (கொஞ்சங் கோபத்துடன்) போதும், போதும். உன் நினைப்புத் தெரிந்துகொண்டேன். எனக்கும், அண்ணா அவர்கட்கும் பிரித்துவிட்டு, ஸ்வதந்திரத்துடன் வேறாயிருக்க

வெண்ணமுற்றிருக்கின்றாய், என்பது நன்கறியலாயிற்று. சத்தியமாகவே இவ்வுலகத்தில்,

### வெண்பா.

சண்டை விளைத்துச் சகோதரரை வேறாக்கப்
பெண்டுகளே காரணஸ்தர் பேசுங்கால்—அண்டுலகில்
இத்தகைச்ச ரித்திரங்க ளெத்தனையோ யானறிவேன்
அத்தனையு மத்தாக்ஷி யாம்.

(வசனம்.) ஆகையால், ருக்மிணீ!! நீ இதுவிஷயமாய் இனிமேற் பேசுவாயானால், ஒரு கணப்பொழுதாயினும், எனக்கிங்கிருக்கப் பிரியமிராது. இஃது உண்மையே.

ருக். (கோபத்துடன்) (கட்டிலிலிருந்து கீழிறங்கிச்சற்றெழுந்துநின்று கொண்டு) யான் சிறுபிராயமுதலே தங்களுடைய இந்தவனுபோகங் தெரிந்தவள்தான். இந்தக்கள்ளத்தனங்களெல்லாமறிவேன். இதற்கெல்லாம் யான் பயந்தவளில்லை. இஃதென்னடி! இது நான்காவது தடவை. எப்போதெல்லாமிந்த வார்த்தையை எடுக்கின்றேனோ, அப்போதெல்லாமிப்படித் திண்டுமிண்டுகள் சொல்லிக் கடந்துபோய்விடுகின்றன. இருக்கட்டும். சரிதான். சகோதரருக்குள் சண்டைவிளைத்துப் பிரித்துவிடுகின்ற பாபிகளிருப்பார்கள். அவர்களைப்போல் பெண்ணியோ என்னைப்பேசுகின்றது? பாலும் பதக்கு, மோரும் பதக்காகத்தான் சொல்லுகின்றதோ? அவர்களெனக்குச் சாக்ஷியோ? அப்படிப்பட்ட பாபிகளிருப்பார்கள்.

[என்றுசொல்லி, கோபத்துடன் சற்றுதூரவிலகி நிற்கின்றனள்.]

கிருஷ். (ஆனந்தத்துடன்) (தன்னுள்) பேஷ். பேஷ். இப்பொழுதிவளுடைய கோபசின்னமானது, எவ்வளவழகாயிருக்கின்றது! ஆ! ஆ! இவளுடையகோபமுமெனக்குச் சுகத்தைக்கொடுப்பதாகவே யிருக்கின்றது. என்ன மனோகரம்!

### விருத்தம்.

தூமநிறைபோற்குழல்சரியத் துப்பாமுதடுதுடிதுடிப்பக்
காமர்விழிகள்கலக்கமுறக் கன்னமிரண்டுஞ்சிவப்பெய்தச்

சோமமுகத்தில்வேர்வொளிரத் துவண்டுகொடிபோலுடம்பாட
ஓமகுண்டத்தக்கினிபோ லொளிர்கன்றாளிவ்வுருக்குமிணி.

ஷை விருத்தம்.

எனைவிட்டொதுங்கிநிற்கின்றா ளிவண்மாமுகில்விட்டொருமின்னற்
றனிநின்றாற்போற்றேகஒளி தளதளென்னச்சக்கரம்போற்
குனிவிற்புருவம்வளைவுற்றுக் குடிலப்பார்வைகொண்டிலகுஞ்
சொனநற்பதுமைதனைநற்காய்ந்து சொலிக்குமாறுசொலிக்கின்றாள்.

(வசனம்) (உருக்மிணியைக்குறித்து) (வெளிப்படை) ஆ! என் காதற்குரிய மாதுசிரோன்மணீ !! இதுவென் சொல் ! வேடிக்கையாய்ப்பேசிக்கொண்டிருப்பதில், ஏதோ ஒரு வார்த்தை தவறிவந்துவிட்டால், அதற்காக இத்தனைகோபமேன் உண்டாச்சுது?

ருக். (அங்கிருந்தே) இது ஒரு வேடிக்கையா ? கொலைசெய்கின்றவிதமாய் வேடிக்கையுமுண்டா ? எல்லாம் எனக்குத்தெரியும். தங்கட்கு இங்கிருந்தெப்படியாவது புறப்பட்டுப்போவதற்கேதாவதொரு காரணம்வேண்டுமே ; அதற்காக இந்தமாதிரியுக்திபண்ணிப்பேசினது.

கிருஷ். சீ. சீ. இதை என்னவோ ஒரு பிரமாதமாய் நினைக்கின்றாய். நீ இங்கிருந்து போ, போ வென்றென்னைத்தள்ளினாலும், யான் போகிறவனன்று. தெரிந்ததையா ? ஆகையால், எப்படியாவதுன்னிடத்தில் வந்துட்காரு.

ருக். ஆம். ஆம். எதற்காக ? ஒன்றும்வேண்டாம். யான்சொல்வதெல்லாந் தங்கட்கொன்றும் பிடியாது. வீண்மனஸ்தாபமெதற்காக ?

கிரு. இனி யான் உன்மனம்போற் பேசுகின்றேன். அது மெய்தான். நீ கோபத்தைவிட்டென்பக்கத்தில் வந்துட்காரு.

ருக். (அப்படியேவந்துட்கார்ந்துகொண்டு) தாங்கள் ஸரஸமார்க்கமாகப்பேசுகின்றதானால், எனக்குக்கோபமொன்றுமில்லை.

கிருஷ். சரி. சரி. உன்னுடைய எண்ணந்தானென்ன ? அதை என்னிடந்தெரிவி.

ருக். அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

வெற்றிபெறும் வில்விசய வீரனிடத் தவளுடைய
விருப்ப மெல்லாம்
உற்றநந்தம் வாக்குறுதி யதனாலுண் டாகிவளர்ந்
தோங்கப் பெற்றாள்
பெற்றியுள தோழிசுபத் திரைமனம்போ லர்ச்சுனர்க்கே
பேணி மன்றன்
முற்றுறச்செய் திடவேண்டு மங்ஙனமே யருண்மினது
முக்ய மன்றோ.

கிருஷ். (சற்றாலோசித்து) ஆ! ஆ! என் பிராணேச்வரீ!! மிக்கவும் நீ தக்க புத்திசாலியாகையால், உனக்குக் கொஞ்சஞ் சுருக்கிச் சொன்னாற் போதுமல்லவா? யான் அந்தக்காரியத்திற்கா னிருந்துகொண்டிருக்கின்றேனென்றறிந்துகொள். அனேகமாய்த் தங்கையின் மனம்போலவே நடக்கும்.

ருக். சரிதான், சரிதான். இப்படித் தட்டுவைத்துப் பேசவேண்டாம். தாங்களந்தக் காரியத்திற் சாக்கிரதையுடன் சத்தியமாகவே இருக்கின்றீர்களென்பதென்மனதிற்கல்லவோ தோன்றவேண்டும். அப்படியானாற்றான் எனக்குச் சமாதானமுண்டாகும்.

கிருஷ். (தன்னுள்) ஓ! ஓ! இப்பொழுதென்னதான் செய்கின்றது? இதுவொரு பெரிய விக்கினமாகவல்லவா யிருக்கின்றது? இப்பொழுதிவளிடம் இதைச் சொன்னாலுங் கெடுதல்; சொல்லாமலிருக்கவுமுடியாது. என்செய்கின்றது?

ருக். என்ன? என்னயோசிக்கின்றீர்கள்? இன்னமுமேதாவது தட்டுவைத்துப் பொய்க்கற்பனை சொல்ல யோசிக்கின்றீர்களா?

கிருஷ். (திரும்பவும், தன்னுள்) இதை இவளிடஞ் சொல்லாமல் முடியாது. ஆனால், இவளை நம்முடைய உத்தேச காரியத்திற் சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான். ஒருக்காலத்தில் இவளுடைய உதவியும் வேண்டியிருக்கும். (வெளிப்படை) அடீ!

என் பிராண சஞ்சீவி !! இப்பொழுதுனக் கதனுண்மையைச் சொல்கின்றேன். ஆனால், அது மிகவுமிரகசியமாயிருக்கவேண்டியது. பொதுவாகவே, ஸ்திரீகளிடத்தில் ரகசியத்தைச் செப்புதல் தீதேயாகும். "பெண்டிற் கொருவன் பேசிடு ரகசியம், மண்டலத்துலவும் வளியா கும்மே" என்ற உலக வழக்கிற்கிணங்கி, மாதர்ஸ்வபாவத்தினால், நீயுமிந்த ரகசியத்தை வெளியிடுவாயாகில், அதில் விளைகின்ற தீங்கிவ்வளவவ்வளவென்று சொல்லிமுடியாது.

ருக். ஆ! ஆ! பிராணவல்லபா !! என்னிடம் தங்கட் கிவ்வளவுநாளனுபோகமிருந்தும், மற்ற ஸாமான்ய ஸ்திரீகளைப்போலென்னையும் நினைத்து, ஸம்சயப்படுகின்றீர்களல்லவா ? இது ஞாயமில்லை.

கிருஷ். (ருக்மிணியின் நாடியைப் பிடித்துக்கொண்டு) ஆ! ஆ! அங்ஙனமன்று. அடீ! என் ஆருயிர்க் காதலீ !! இப்பொழுது சொல்லுகின்ற சமாசாரமானது, வெகு பந்தோபஸ்தாய்ச் சூக்ஷிக்கவேண்டிய விஷயம். அதனாலதைப்பற்றி அவ்வளவு சொல்லவேண்டியிருந்தது.

ருக். சரி. சரி. அப்படிப்பட்ட ரகசியத்தைச் சீக்கிரஞ்சொல்லவேண்டும்.

கிருஷ். எங்கே, உனது காதைக்கொடு. ("என்றவள்காதினவின்றனர் எல்லாம் ; இப்படி அப்படி, இதுவதுவெனவே.")

ருக். (ஆச்சரியத்துடன்) சீ, சீ. இஃதுண்மையாகத் தோன்றவில்லை. இப்படி எப்படியமையும் ?

கிருஷ். அடீ ! பொய்யல்ல. பொய்யல்ல. அவனே இவன். நீ அவனைக் கவனித்துப்பார்த்தால், உனக்கது தோன்றும். இந்த ரகசியம் உனக்குத் தெரிந்திருப்பதால், எப்படியாவது அவன் ரூபத்தைச் சூக்குமமாய்க் கண்டுகொள்ளலாம்.

ருக். அஃதெல்லாம் சரிதான். இதனாலவன் கல்யாணமெப்படிச் செய்யமுடியும் ?

கிருஷ். (திரும்பவும்) (இன்னின்னபடியெனக், கன்னத்தியம்பி னன்.) என்ன? தெரிந்ததா?

ருக். (ஆனந்தத்துடன், ஆலிங்கனஞ்செய்துகொண்டு) ஆ! பிராணேச்வரா !! இப்பொழுதுதான் என் கவலை தீர்ந்தது. இப்படியிருக்கின்ற மன்மம் எனக்கெப்படித் தெரியும்? தங்களிடம் வீணுகத் தோஷாரோபஞ்செய்து, கோபத்திற்குள்ளாகிப் பற்பல குற்றத்திற்குள்ளானேன், என் பிழையெல்லாம் பொறுத்தின்னருள் செய்யவேண்டும்.

கிரு. (சற்று நிதானித்து) (வேறுபக்கஞ் செவிசாய்த்து) ஓ! ஓ! பிராதக்காலசமயம் வந்துவிட்டதுபோலிருக்கின்றது. நம்முடைய இந்த வார்த்தைப்போக்கினால், இராப்பொழுதிராப்பொழுதாய்க்கழிந்ததுபோலும். அது போனதுகூடத் தெரியவில்லை. இதோபார். நகராச்சத்தங் கேட்கின்றது.

ருக். என்னடி!! அது வாஸ்தவந்தான். சரி. சரி. யான் சீக்கிரம் போகவேண்டும். ஸ்நானஞ்செய்து, மாமனார் மாமியார்களின் பாதவந்தனத்திற்குப் போகவேண்டியசமயம் வந்துவிட்டது.

கிருஷ். ஆம். ஆம். சரி. சரி. (என்று சொல்லிக்கொண்டு) (ருக்மிணியுடனெழுந்து) (வெளிமுன்முகப்பில்வந்து) ஹா! ஹா!! ஹா!!! அடீ! இச்சமயம் என்னென்ன மனோக்கியமாயிருக்கின்றது!! பார்!!

விருத்தம்.

உள்ளகங்குற்கழிந்துகழிந் துஷக்காலமோங்கி
மெள்ளமெள்ளவெளிக்கொண்டு மேவுகின்றதருணன்
தெள்ளியதன்கிரணமதைச் சிறிதுசிறிதாக
விள்ளுகின்றதிசைவெளிற விளக்கஞ்செய்கின்றான்.

இன்னமும்; (ஷை விருத்தம்.)

முண்டகமுதற்புட்ப முகுளங்களெல்லாம்
விண்டிதழ்மணங்குலவ விகசிக்கின்றனவால்
வண்டினங்கள்களிப்பினொடு மதுவுண்ணவாசை
கொண்டுசுழல்கின்றவிக் கொள்கைமிகநன்றே.

அன்றியும்; (ஷை விருத்தம்.)

குக்குடநற்றொணிகளுடன் குலவும்புட்குரலின்
மிக்கொலிகள்கலகலென மேவுகின்றனவால்
தக்கபடிசீதவிளஞ் சமீரணனுலாவும்
முக்கியபிராம்மீய மூர்த்தமிதுவாகும்.

மேலும்; (ஷை விருத்தம்.)

தத்துவவிசாரணையிற் சகலபாவனையும்
வத்துவிலயப்படுத்தி மாதவத்தின்யோக
நித்திரைசெய்திருந்தனையு நீத்துமறையோர்கள்
பத்தியுடனரிநாம படனஞ்செய்கின்றார்.

(வசனம்.) ஆ! ஆ! சரி. சரி. இனி இங்குதாமதிப்பது சரியன்று.

[என்று சொல்லிக்கொண்டிருவருஞ் சென்றனர்.]

3-வது அங்கம் முற்றிற்று.

---

# 4-வது அங்கம்.

---

(அப்பரல், புட்பாவ்தியும், ஸாரங்கநயனையும் கையிற் பூக்குடலை கொண்டு, அவசரத்திற் பிரவேசிக்கின்றனர்.)

ஸார. ஸகி! புட்பா!! இத்துறவரசர் இங்கே இன்னும் எத்தனைநாள் தாமதிப்பார்? யான் சொல்கின்றேன், அவரின்னுங்கொஞ்ச காலம், இங்கே தாமதிக்கும்படி ஏற்படுமானால், யான் ஜீவனோ டிருப்பது பிரயாசந்தான்.

புட்பா. அடீ! அதிலிவ்வளவு வருத்தம் உனக்குவரக்காரணமியாது? நீ இப்படிச்சொல்கின்ற வார்த்தையானது, சுபத்திராதேவியின் காதில் விழுமானால், அதிலேற்படுகின்ற துன்பபரிணாமமிவ்வள வென்று சொல்லிமுடியாது.

ஸார. அடீ! யானென்ன மற்றவரிடமிப்படிச் சொல்வேனோ? நீ என் றமக்கைபோலெண்ணி, உன்பால் என் சுகதுக்காதி வருத்தத் தைச் சொல்கின்றேன்.

புட்பா. அஃதிருக்கட்டுமடி. சண்டாளி! அவ்யதிராஜர் இங்கெவ்வளவு நாளிருந்தாலும் உனக்கென்னடி வருத்தம்? அதிலுனக்கேதாவது செலவுண்டா?

ஸார. உனக்கென்னதான் சொல்லட்டும்? முன்னமேமுதற் சுபத்திரையம்மாளுக் கென்மீது கோபமுண்டு. அதிலுமவள், இந்தத் தருணஸன்யாஸியின் சேவையில் மனம்பொருந்தி, முக்கியபக்தியுடன், எப்பொழுதும் அவரண்டையிலேயே யிருந்துகொண்டிருக்கின்றனள். அதைப்பற்றி நாமென்ன சொல்லுகின்றது? இரா முற்றும், நித்திரையென்பதே கிடையாது. வயிறாறச் சாப்பிடக்கூட நேரமில்லை. எப்பொழுதுமங்கேயே வெளியினின்று பாராக்கொடுத்துக்கொண்டிருக்கின்ற காரணத்தினால், என்னுடம்புகளைத் திருக்கின்றது. என்ன? தெரியவில்லையா?

புட்பா. ஆ! ஆ! நல்லவார்த்தை சொல்கின்றாய். நம்முடைய ஜன்மமே சேவைசெய்கின்ற ஜன்மந்தானே. அதிற் சலிப்புவருவதினாற் பிரயோசனமியாது?

(——) (திரையை நோக்கி)

அடடீ! அடடீ! அதோபார்!! சின்னராணியவர்களும், சுபத்திரையம்மாளும், இங்கேயே வருகின்றார்கள்போலிருக்கின்றது. உன் நாவை உள்ளடக்கிக்கொள்.

[அப்பால், சுபத்திரையும், ருக்மிணியும், பிரவேசிக்கின்றனர்.]

சுபத். (தன்னுள்) அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

யதிராஜர் சன்னதியி லிருக்கின்ற நேரமெலா
மின்ப மெய்தும்
அதுநீங்கித் தனித்திருக்குஞ் சமயமிகத் துயரடங்கா
ததிக ரித்துச்
சதுர்மாத முடிவினிலத் தூர்த்தினமுஞ் சாருமெனத்
தபித்துச் சித்தஞ்
சிதைவாகப் படீரென்று வெடித்திடுகின் றதுவிதற்கென்
செய்வேன் மாதோ.

(வசனம்) ஆக இவ்விதமான அவஸ்தையுடன், பற்பலவெண்ணங்கள் மனதினிடமாய்த்தோன்றி, இரவெல்லாம் படுத்தபடுக்கையிற் றானே பரிதபித்துக்கொண்டிருக்கின்றேன். இந்தக்கஷ்டங்கள் நீங்கி, என் மனம் சுகித்திருப்பதெப்பொழுதோ? (தாதியைக் குறித்து) (வெளிப்படை) அடீ! புட்பத்தைவைத்துக்கொண் டிங்கேயே நிற்கின்றீர்களோ? நன்றாச்சுது. ஜன்மஸாபல்யமாச் சுது. அடீ! அடீ!! புட்பாவதீ!!! நீயுமிவளுடன்சேர்ந்து கெட்டுப்போய்விட்டாய்.

புட்பா. (நமஸ்கரித்து) அம்மணீ!! இப்பொழுதங்கவசரமொன்று மில்லை. யதிவேந்தர் ஸ்நானமுடித்து நிஷ்டையிலிருக்கின்ற ஸமயம். யாருமங்கு வரக்கூடாதென்று ஆக்ஞையளித்திருப்ப தாற்றான், இங்கு நின்றுகொண்டிருக்கின்றோம்.

சுபத். ஸரி, ஸரி, ஸமயம்பார்த்துச்செல்லுங்கள். அங்கேஎல்லாந்தயார் செய்துகொண்டிருங்கள். யதிராஜர் யோகமுடிந்த உடன், யாராவதொருத்திவந்து தெரிவிக்கவேண்டும். ஜாக்கிரதை.

[தாதிகளிருவரும், அங்ஙனமே யாகட்டுமெனச் சொல்லிச்சென்றனர்.]

ருக். (சுபத்திரையின் கையைப்பிடித்துக்கொண்டு) அடீ! தோழீ ரத்னமே!! இப்பொழுதுனக்குவர வரச்சாவகாசமேகிடைப்ப தில்லையே. ஸாமியார்ஸேவை கிடைத்தாலுங்கிடைத்தது, உன் னைக்காணச் சமயங்கிடைப்பதரிதாயிற்று. உன் பேட்டிகாண எத்தனை நாட்களாகவோ எதிர்பார்த்திருந்தேன். அஃதின்று தான் கிடைத்தது. ஒரு கணப்பொழுதாயினும் உன்ஜோலியை நிறுத்திக்கொண்டு, என்னுடன் பேசச் சாவகாசமுண்டோ?

சுபத். நீ சொல்வது வாஸ்தவந்தான். மதினீ!! *

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

எட்டுச் சாமமுந் தினந்தின மவர்பா
விருந்துகொண் டிருப்பதென் ஜோலி
நிட்டைக் காலமு மவர்க்கென்மேற் பிரியம்
நீங்கிடா தென்னலா மவரை

விட்டொ துங்கிச்சற் றிருந்திடி லவர்தம்
மெய்மனோற் சாகங்க ளெல்லாங்
கெட்டொ ழிந்திடு கின்றன அவ்யதி
கேசரி இடர்ப்படு கின்றார்.

ருக். ஆ! ஆ! எப்படி? அந்நறவேந்திரர் இவ்வளவுதூரம் உன்பே ரிற் பிரமையுடன் இருக்கின்றார்கொல்? அங்ஙனமாயின்; அடீ! தோழிமணீ!! நீ சற்று சாவதானமாயிருந்துகொள்ளவேண்டும்.

சுபத். சிச்சீ; இதென்ன? எதிர்த்துபோட்டவார்த்தை இயம்புகின்றாய். பிரமைகொண்டிருக்கின்றாரென்று பேசுகின்றது? என்னைத் தவிர மற்றுயாராளுனும், அவர்மனம்போல்நடக்கமாட்டார்கள். அதனாலவர்க்குற்சாகங்குறைந்து, கோபமுண்டாகுமென்றல்ல வா சொல்லுகின்றேன்? அதற்கு, நீ சொல்லுகின்றவார்த்தை அழகாயிருக்கின்றது. உனக்கேதாவது கொஞ்சங்கிடைத்தாற் போதும். வெறும்வாயை மெல்லுகின்ற மதினீ!! கொஞ்சம் வெள்ளவற்கிடைத்தாற் சும்மா விட்டுவிடுவாயா? மேற்கவனங்க ளெல்லாங் கற்பனைசெய்து விடுகின்றாயே. உனது பரிஹாஸ வார்த்தைகட் கெல்லையில்லைப்போலும். அஃது மென்மட்டிற்று னென்பதில்லை. ஸகஜ நிஷ்டாபரரான இத் தவச்சிரேஷ்டரிடத் திலும், சற்றுங்கவனியாமற் றாராளமாய்ச் சாற்றுகின்றாயே. இதுவும் உன் சாமர்த்தியமா?

ருக். அஃதிருக்கட்டும். அடீ! தோழியரசே!! ஆனாலும், எனக் கிதுவே ஒரு ஆனந்தமாயிருக்கின்றது. பார்!!

(அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

தேசுடைஇம் முனிவர்வந்த தினமுதலா யுன்றேகந்
தெளிவுற் றுற்ற
தோஷகுண நீங்கியொளிர் பானுவின்முன் றாமரைபோற்
றுலங்கு கின்றாய்
ஈசனருள் செய்கஉனக் கெல்லாநன் னலமும்யதி
இவரா லெய்தி
ஆசகலம் க்ஷேமமுனக் காகட்டு மெனக்கதுவா
னந்த மம்மா!

சுபத். அஃதெல்லாஞ்சரிதான். மதினீ! நீ எனக்கு முன் வாக்குக் கொடுத்திருந்த சங்கதி என்னவாயிற்று? அதைப்பற்றி என்ன செய்திருக்கின்றாய்? அந்தக்காரியம் காயா? பழமா? அதைச் சொல்லவேண்டும்.

ருக். ஆ! ஆ! அதை யென்னென்று சொல்லட்டும்? நாலு நாள்களாகவே, அதைப்பற்றித்தான் பிடிவாதமாயெடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கின்றேன். அதற்கிதுகாறும் ஸரளமான உத்தரமே கிடையாது. என்னவாவது, வளை, துளை, என்று பதிற்சொல்லு கின்றதைத்தவிர, என்னுடைய உபாயமொன்றுமங்கே நடக்க வில்லை. யான் என்ன செய்யட்டும்?

சுபத். (வாடிய முகத்துடன்) (தொண்டை தத்தலிட்டு) ஆ! ஆ! அப்படியா? மதினீ!! அநாதையாயிருக்கின்ற இந்த அபலையைக் கழுத்தை அறுத்துவிட்டாலும், உங்களிருவருக்குந் திருப்தி யாகுமல்லவா? எல்லாம் உங்கள் மனம்போலாகட்டும். மதினீ!!

ஆசிரிய விருத்தம்.

ஆராரி ருந்தாலு மாப்தரென் றில்லையே
அந்தோ அநாதை யானேன்
அன்பிலா ருறவினும் ஆலால நலமாகும்
ஆனவென் மன வேட்கையைத்
தாராள மாய்க்ருஷ்ண சமுகமதின் மதினிநீ!
சாற்றுவா யெனவு முனது
சாரமுள போதனையி லவர்மனம் வசப்படத்
தகுமெனவு மவர்தயவி னாற்
சீராரு மென்ப்ராண நாதனைத் தேடித்
தெரிந்தென தபீஷ்ட மெல்லாஞ்
சித்திபெற லாமெனவு மாகியவிவ் வாசையென்
சிந்தையிற் குடிகொண்ட தால்
காரார் கருங்குழலி நீயுநிர்த் தயவாய்க்
கடுந்துயர தேதுணைய லாற்
கதியற்ற பாவியாய் யானுமாய்த் துன்புறக்
கற்பித்த தொரு கடவுளே.

(வசனம்) அந்தோ! அந்தோ!! பாழ்த்த கெட்டதெய்வமானது, என் ஜன்மத்தை விருதாவாகச் செய்துவிட்டதனால், இப்பொழுதி யான், என்னைப்பெற்றவர்கட்கு பெரிதான வேதனையைக்கொடுக் கின்றவளாகின்றேனல்லவா? ஹா! ஹா! ஹா! கஷ்டம். கஷ்டம்.

ருக். ஆ! ஆ! தோழியரசே!! ஏதேது? சும்மாவாயில் வந்தபடி யெல்லாஞ் சொல்லிப்புலம்புகின்றாயோ? உனக்குக் கஷ்டத்தை யுண்டுபண்ண வேண்டுமென்றுதான் எங்கள் கருத்தோ? நீ எப்படிவேணுமோ அப்படி நினைத்துக்கொள். அதிலுனக்கு முக்கியமான வார்த்தையைச் சொல்கின்றேன். ஆனால், அது குறிப்பான ஸமாசாரமென்று தெரிந்துகொள். அதாவது:— "நீயாரைச் சேவித்துக்கொண்டிருக்கின்றாயோ, அம்மகானே உன்மனம்போல், நடத்திவைக்கவல்லவர்." என்பதேயாம். இப் பொழுதிருக்கின்ற ஸ்திதிக்கு அப்படித்தான் சொல்லலாம்.

சுபத். ஆ! மதினீ! நீ இனிமேல் ஒன்றுஞ்சொல்ல வேண்டாம். என் காரியம் எப்படியேனுமாகட்டும். யான் எனக்கின்பத்தைத்தருவது அம்மகானுடைய சேவை ஒன்றுதான், என்று நம்பியிருக்கின் றேன். அவர் விட்டபடி விடட்டும். உங்கள் சோதனை எல்லாம் முடிந்தனவல்லவா?

ருக். நீ சொல்வதுவே சத்தியம். அதுதான் சரி. நடக்கப்போகின்ற தப்படித்தான். நீ ஒன்றுஞ் சொல்லவேண்டாமென்றாலும், இன்னமு மொருவார்த்தை உனக்குச் சொல்கின்றவளாகவே யிருக்கின்றேன். ஆனால், அந்தத்துறவேந்திரர், எந்தவேளை உன்னிடம் பிரஸன்னராகயிருப்பாரோ, அந்தவேளையில் நீ அம் மகானிடம், இப்படிச் சொல்லவேண்டும். என்னெனில்?

(அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.)

பாண்டவர்தம் நடுமணியைப் பார்த்தபூ பதியையே
பதியாய்ச் சேர
வேண்டிநாமைச் சரண்புகுந்தேற் கவ்விதமுற் றுறச்செய்ய
வேண்டு மன்றேல்

ஆண்டவைகயில் விஜயனுருக் காட்டுமட்டு மெனையடிமை
யாக்கிக் கொண்டு
பூண்டதனி நிழல்போலெங் காகிலுமென் றனைக்கூட்டிப்
போமி னென்றே.

சுபத். (கோபத்துடன் வெறிச்சென்று பார்த்து) அடீ! சுடு, சுடு. எறிந்து போட்ட நின்நாவிற்கு நரம்பே கிடையாதுபோலும். அடீ! உன்னை மதினியென்று சொல்லக்கூட இலச்சையுண்டாகின்றது. உன் புத்தியைத் தெரிந்துகொண்டேன். சட்டம் சட்டம். இனி உன்னுடன் பேசுவதுகூடப் பிசகாகும்.

(என்று சொல்லிக்கொண்டெழுந்து செல்கின்றனள்.)

ருக். அடி! அடீ! தோழீ ரத்தினமே!! கோபப்படாதே. கோபப்படாதே. என் வார்த்தை குறையுங் கேட்டுக்கொண்டுபோ.

சுபத். (ஒன்றுஞ்சொல்லாமலே போய்விட்டாள்.)

ருக். (தன்னுள்) சரி. சரி. யான் இப்பொழுது சொல்கின்றவார்த்தை கசப்பாகத்தானிருக்கும். பின்னாலதுவே இனிப்பாகும். அஃதிருக்கட்டும். இப்பொழுது, யான் அங்ஙனஞ் சென்று, அவ்யதி அரசரைத் தரிசனஞ்செய்து, அதனுண்மையைத் தெரிந்துவர வேண்டும். செல்கின்றேன். ஆ! ஆ! என்னசாமர்த்தியமடீ!! யான் அவரை முதல் நாள் பார்த்தபொழுது, அவரொரு பெரிய சாதுவென்றே எண்ணியிருந்தேன். அவரது அந்தரங்கம் யார் அறிவார்கள்? அப்பால், அவரை எப்பொழுது பார்ப்போம், என்ற எண்ணமே எனக்குண்டாய்க் கொண்டிருக்கின்றது.

(——) (திரையை நோக்கி)

அடீ! அடீ! அந்தத்துறவரசர் அதோ உட்கார்ந்துகொண்டிருக்கின்றனர். யான் திடீரென்றங்கே போய்விடக்கூடாது. இங்கு சற்று தாமதித்து, சமயம்பார்த்து, அப்பால் அங்கு செல்லவேண்டும்.

(என ஒதுங்கிச் செல்கின்றனள்.)

(அப்பால், யதிவேஷதாரியான அர்ச்சுனன் ஆஸன ஸ்திதனைகப் பிரவேசிக்கின்றனன்.)

அர்ச். ஹரி:, ஓம். நாராயண. நாராயண. ஆ! என்னென்ன விதங்களாகவோ, எனது ப்ராரத்துவங்களெல்லாம், ஆடித்தீர்க்கவேண்டி வந்துவிட்டன. இருக்கட்டும். இதில், இதற்குமுன் என்னென்ன வார்த்தைகள் நடந்து வந்திருக்கின்றனவோ, அவையெல்லாம் என்மனதிற்குச் சொற்பனம்போலவே தோன்றிக்கொண்டிருக்கின்றன. பார் !! முன்கோர அரணியமத்தியில், அம்மாது சுபத்திராமணி எப்பொழுதென் கண்முன் தென்பட்டாளோ ; னே அவள் மறைந்து விட்டாள். அத்தகைய சுந்தரி இங்கெப்படி வந்தனளோ ? அஃதின்னமுந் தெரியவில்லை. அது நிற்க. இந்த என்னுடைய கபடவேஷத்தை சத்தியமாகவே நினைத்துப் பலராமனும் மெய்யாகப் பஜித்து வருகின்றனன். திரிகாலக் ஞானியாகிய கற்கமுனிவரும் என்மாயைக் குட்பட்டவராகவேயிருக்கின்றனர். கபடநாடக சூத்ரதாரியாகிய எல்லாம் வல்ல அந்தக் கண்ணனுடைய புத்தியும், என் ஜாலத்திலெப்படியோ மயங்கியிருக்கின்றது. ஆகவே, எல்லாவிதத்தையுமெண்ணி யெண்ணிப் பார்த்தாலும், எனக்கே ஒன்றுந்தோன்றவில்லை. மாயாகாரியங்களான விஷயங்களின் விலாசங்களை யெண்ணி, ஒருவன்புத்தி எவ்விதஞ் சலிக்குமோ, அவ்விதமாக என்னுடையபுத்தி சஞ்சலத்தை யடைகின்றது. ஆனவிப்பொழுது, அதைப்பற்றி நினைப்பேவேண்டாம். வர, வர, நாட்களைத்தள்ள வேண்டும். அப்பால், அதன் முடிவானதெப்படியோ, அப்படியேயாகட்டும். ஒருவிதம் பார்த்தாலிப்பொழு தென்னுடைய ஸ்திதியானது சுகமாகத்தானிருக்கின்றது. எங்ஙனமெனில் ?

கோச்சகம்.

சோதிமின்னு ளென்றனக்குத் தொண்டு புரிவதிலுந்
தீதறவென் சேவையினுஞ் சிந்தை பொருந்தினள்யான்
ஏதெது புகன்றாலும் என்சொற்க ளத்தனையும்
வேதமொழி யென்றே வினவுகின்றாள் மீனாக்ஷி.

டி கோச்சகம்.

மாதவமம் மாதுருவாய் வந்தென் னருகிருந்தென்
பாதவந்த னம்புரியும் பதவி யடைந்தேற்குக்
கோதி லமுதருந்துங் குளிர்கற் பகவாழ்வின்
மேதகுதே வேந்திரனர் மெச்சுபதந் துச்சமன்றோ.

அங்ஙனமாயினும்; ௸ கோச்சகம்.

சிந்தைகுடி கொண்டிருந்த திவ்வியம ஞோகரமாஞ்
சுந்தரசொ ரூபமெதிர் தோன்றியே காந்தமதாய்
வந்திருக்கு நற்சமயம் வாய்த்திருந்துஞ் சேர்ந்தணையப்
பந்தவினை யொன்றிருந்தென் பாற்றடைசெய் கின்றதுவே.

௸ கோச்சகம்.

காதல்தரு மவ்வுருவ காந்தமென் னிதயகருந்
தாதுவையி ழுத்திடவுந் தான்கூட வொட்டாமற்
பாதகவி னைதடுக்கும் பான்மையினு லென்பகர்வேன்
ஓதுமனற் பக்கமுறும் வெண்ணெய்க்கொப் பானேனே.

௸ கோச்சகம்.

பசிக்கு மொருவனுக்குப் பானகமும் போனகமும்
ருசிக்குங் கறிவகையும் ஒன்ருய்ப் படைத்துவைத்தும்
மசிக்குங் கொடும்பாவ வல்வினையால் வாயிலிட்டுப்
புசிக்கப் படாமற் புலம்புவன்போ லானேனே.

(வசனம்) அடட! திவ்விய மங்களவிக்கிரக சொரூபமாய் விளங்குகின்ற சுந்தரி, ஏகாந்தத்தில் என்னருகில் வந்திருக்குஞ் சமயங்கிடைத்திருந்தும், அவளைத் தழுவியணைந் தின்பசுகமனுபவிக்கவொட்டாமல், என்துர்ப்பாக்கியப் பிரதிபந்தகம் ஒன்றிருந்து தடைசெய்கின்ற சங்கடமானது என்னை உருக்குகின்றது, என்னென்றுரைப்பேன்? ஹ! ஹ! என்கதி அங்ஙனமாய்விட்டது. ஆயினும்; அந்தச்சுந்தரியானவள் ஒருக்ஷணமாவது என்னைவிட்டுப் பிறிந்திருந்தால், அப்பொழுதென்பிராணன் போகவா? இருக்கவா? என்றபடி, அவஸ்தையேற்படுகின்றது. இருக்கட்டும். எனது நித்யநியமனப்படி, அவளது பத்திரிகாபாராயணமும்; அந்த இரத்தினமாளிகையினுல் அவளது திவ்வியமங்களத்திருநாமமந்திரோச்சாடன ஸஹஸ்ராவர்த்தி ஜபமும் முடிந்தன. இப்பொழுதவளுடைய திவ்யமங்கள சொரூபத்தைத் தியானித்து, மானஸிக பூஜையுஞ் செய்தாற் சகல ஆன்ஹிகமும் முடிந்தது போலாகும்.

(கொஞ்சந் தியானத்திலிருந்து) ஹா! ஹா! ஹா! யாதொரு சுந்தரியின் நகசிகாந்தமுள்ள, திவ்யமூர்த்தியானது, அப்படியே பிரகாசிக் கின்றது. ஹா! ஹா! ஹா! ஜகத்ஜோதி ஒன்றே, தழைக்கின்ற திங்கே. மஹாத்ஸேவை இஃதே. மஹாத்ஸேவை இஃதே. ஹோ! ஹோ! ஸௌந்தரவல்லீ! ஹோ! ஹோ! ஆனந்தவர்த்தகே!!

அகவல்.

அரும்பிய பதும வாதனத் திருந்து
விரும்பும் பாவனா மெய்ப்பொரு ணினைந்து
சிந்தையை யறிவிற் றிகழுறச் சேர்த்து
ஐந்திந் திரியங் களையு மடக்கித்
தியான யோக ஸமாதியின் முக்கிய
மான இளைபிங் களையெனுஞ் சுவாச
பந்தனஞ் செய்து பகிர்முக மின்றி
அந்தர் முகத்தென் அர்த்தவீ க்ஷணத்திற்
பார்க்கையிற் றிகழும் பாவனா மூர்த்தி
ஏற்குமென் னுள்ளத் திதயா லயத்தில்
நன்னக சிகாந்த நல்லுருப் பெற்று
மின்னொளி மழுங்க விளங்கிடுந் திருவே!!
சுந்தரா க்ருதியே! சோதிநல் விளக்கே!
என்றனா ருயிரே! இன்பமா கடலே!!
காவியங் கணியே! கருணா லயமே!!
தேவிமீ னாக்ஷீ!! திவ்விய கடாக்ஷீ!!
அன்பு நிறைந்தொளி ரானந் தவர்த்தகே!!
நின்பெருந் தயைபெற நீடு வேண்டியே
பத்தியாய்ப் பூசனை பண்ணுகின் றேனிதைச்
சித்தமு வந்துநீ சேர்த்துக் கொள்ளுதி
நலந்திக ழூற்று நன்னீரும் பாலும்
கலந்தது போனம் இருவர்தங் கருத்தின்
சங்கற் பானிங் கனஜலத் தானுன்
அங்கங் குளிர வபிடே கித்து
என்னுடைப் பார்வை யெனும்வத் திரத்தால்

உன்னுடை யுடம்பி னுடைதரிப் பித்து
இன்புறும் நம்ம ளிராகருங் குமத்தை
அன்புட னுனக்கே அற்பணஞ் செய்து
இருவர்நந் தேகத் தெழிலுறும் நல்ல
பருவவெவ் வனமாம் பன்மலர் பறித்துனை
அர்ச்சனை புரிந்துன் னாவலா லெற்குறும்
உச்வாச தூபம் உன்னெதிர் காட்டி
ஆகு மதனுக் கினியாற் சொலித்து
வேகு மெனது மெய்யுட லிதையே
கமழுறுந் தீப கற்பூர மாகச்
சமற்பிக் கின்றேன் றயவுடன் கொள்ளுதி
ஆதர வாகவென் அதரா முதத்தைநி
வேதனஞ் செய்குவன் மேன்மையிற் கொள்ளுதி
ஹேகுங்கு மாதரீ! ஹேகட பயோதரீ!!
ஹேக்ருஷ்ண சோதரீ! என்னைநீ யாதரி
மிகவுநின் னாசையால் மேவுமென் கபடமாஞ்
சகலா பராதமும் க்ஷமித்தருள் க்ஷமித்தருள்.

(வசனம்) (ஸமாதிவிட்டு) அடே! அடே! எனது நயனானந்தகரி என் இன்றிதுகாறும் இங்ஙனம் வரக்காண்கவில்லை? ஓ! ஓ! சரி. சரி. எனது வேஷத்திற்குத் தக்கசோடை யுண்டாகவேண்டுமென்று, யானாகச் செய்துவைத்திருக்கிற சேமகம் அப்படியன்றோ? அந்நியமனப்படி, ஒவ்வொருதினமும் பிராதஸ்நானங் கழித்திரண்டு ஜாமம்வரையும், ஒருவரும் என்னருகில்வரக்கூடாதென்ற காரணத்தினால், அதையனுசரித் தென்னாசை மனோகரியானவள், அங்கெங்கேயாவது ஒதுங்கி மறைந்திருந்துகொண்டிருப்பளென்று நினைக்கின்றேன். அங்ஙனமாயின், அவளிங்கு வரும்படி ஒரு அடையாளம் செய்யவேண்டும்.

("நாராயண, நாராயண" என்று பெரிதான சப்தத்தைச் செய்கின்றனன்)

(அப்பால், தாசி புட்பாவதி விரைவிற் பிரவேசித்து)

புட்பா. யதிமகாராஜருக்கு யாதுதேவை?

அர்ச். (மனவெறுப்புடன்) போ, போ, அடிபுழுக்கச்சி! எட்டிநில். எட்டிநில். என்ன? என்ன உத்தண்டஸ்வபாவம்? இங்ஙனம் யாம் ஆசாரத்துடன் உட்கார்ந்திருப்பது தோன்றவில்லைப் போலும்.

(அதற்குள், ஸாரங்கநயனை பிரவேசித்து, புட்பாவதியைக் குறித்து)

ஸார. அடியே! யதிமகாராஜருக்குக் கோபம்வரும்படி என்ன நடந்தது?

புட்பா. (ஸாரங்கநயனையின் கிட்டவணுகி) அடி! எனது பிராரப்தம். நம் சுபத்திரையம்மா பக்கத்திலில்லாதிருந்தால், இந்தப்படி தடபடல்தான் செய்கின்றார்.

ஸார ஆம், ஆம். வாஸ்தவந்தானடி. இது நமக்கு ஏழரைநாட்டுச் சனியாகத்தான் வந்திருக்கின்றது. இது என்று ஒழிந்ததோ, அன்றுதான் சுதினமாகும்.

புட்பா. அடி சண்டாளி! மெள்ளச்சொல்லு, மெள்ளச்சொல்லு. இவ்வார்த்தைகள் அவர் காதிற்படுமானல், நமக்குச் சுபத்திராதேவியிடங் குடியிருப்பில்லை. இதைப்பற்றிச் சுபத்திராதேவியிடம் அவர் கொஞ்சமாய்ச் சொல்வாரென்று நினையாதே.

அர்ச். (சுபத்திரை ஏன் வரவில்லை? என்ற கேள்வியடையாளத்தைக் கைஸமிக்ஞைசெய்து) நாராயண. நாராயண. (என்றுச்சரிக்கின்றனர்.)

ஸார. (தனிமொழி) இது எறிந்துபோக. எதற்காணுலும், நாராயண, நாராயணவென்றுசொன்னல், என்ன அர்த்தமாகும்?

அர்ச். (கோபத்துடன், திரும்பவும் அப்படியே, ஹஸ்தஸமிக்ஞை செய்து) நாராயண, நாராயண. (என்றுச்சரிக்கின்றனன்.)

புட்பா. (சற்று கிட்டவணுகி) ஸ்வாமி மகராஜ்! மூடபுத்தியையுடைய தாசிகள் நாங்கள்; எங்கட்கிவ் வடையாளங்களாலொன்றுந் தெரியவில்லை. தேவரீருக்கு யாது தேவையோ, அதை வெளிப்படச் சொல்லவேண்டும்.

அர்ச். (கோபத்துடன்) நீங்களிருவரும் இங்கே நிற்கக்கூடாது. உங்களுடைய கைங்கர்யத்தை உத்தேசித்து, யாம் இங்கிருக்கவில்லை. ஓடிப்போகவேண்டியது. நாராயண, நாராயண.

புட்டா. அடியே! அடியே!! இப்பொழுதிவர் கருத்து எனக்குத் தெரிந்தாச்சுது. இவர் பக்கத்திற் சுபத்திலாயம்மாள்தான் வந்திருக்கவேண்டும். என்றுதான். ஸ்வாமி மகராஜ்!!

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

தேவரீர்க் குற்ற பணிவிடை செய்யுந்
தேவிசு பத்திரை யம்மாட்
கேவல்செய் கின்ற பெண்கள்யா மடிகாள்
எங்கண்மா தரசியிங் கெய்துங்
கோவமும் திருப்பு தொழியுமின் விரைவிற்
கூப்பிட வேண்டினு லிவனுஞ்
சேவைபெற் றிடவே ஆவலுற் றிருக்குந்
திருவையிங் கழைக்கின் றேஞ் சென்றே.

அர்ச். (மண்டையை யசைத்து) (அப்படியே யழையென்று ஸம்க்ஞை செய்து) நாராயண, நாராயண.

புட்டா. அடி! ஸாரங்கநயனே!! நீ விரைவிற்சென்று, சுபத்திரா தேவியை சீக்கிரம் அழைத்துக்கொண்டுவா.

ஸார. சரி, சரி. இதோ அழைத்துவருகின்றேன்.
[எனச் செல்கின்றனள்.]

அர்ச். (தன்னுள்) அம்மனோன்மணியானவள், நம் ஆக்ஞையின்படி, இப்பொழுது வந்தால் நன்றாச்சுது. இல்லாமற்போனால், என்ன? என் புத்திக்கே ஒரு மாதிரியாய்வருகின்றது. இதனால் யாதொரு சுந்தரியை யடைதற்காக, படாதபாடெல்லாம் பட்டு, ஆடாத ஆட்டமெல்லாம் ஆடிப் பிரதிபந்தகமாய் வந்த இவ்வாண்டிவேஷத்திற்கவளைப் பக்கத்தில்வைத்துப் பார்த்துப் பார்த்துப் பரிதபிக்கின்றதே பலனாய், அவளைக் கிரகிப்பதற்கு ஒருபாயமுந் தோன்றாமைகொண்டு, நாட்கள் விருதாவாய்க்

கழிகின்றதுபற்றி, புத்தி மலினத்தை யடைந்துகொண்டிருப்பதனாலும், இன்றிதுமட்டிலும், அவளைக் காணுதயேக்கத்தினாலும், அவள் வாராதிருந்த கோபாவேசத்தினாலும், ஏதேனும் நாவுதடுமாறிக் குட்டு வெளிப்படுத்திக் கொள்ளலாகாதென்று பயமடைகின்றது. (திரையிடஞ் செவிசாய்த்து) இதோ காலடிசத்தங் கேட்கின்றது. ஆ! சரி, சரி. என் காதலி சுபத்திரைதான் வருகின்றாளென்று நினைக்கின்றேன். வரட்டும். அவள் இன்றெனக்குத் தாமதஞ்செய்து துன்பத்தைக் கொடுத்ததனால், அவளிங்குவந்தவுடன், யானுங் கொஞ்சநேரங் கோபங்காட்டி, ஒன்றும் பேசாதிருக்கவேண்டும். (என்று நிச்சயித்துக்கொண்டிருக்கின்றனன்.)

[அப்பால் ருக்மிணி அவசரத்துடன் பிரவேசித்து.]

ருக். (புட்பாவதியைக்குறித்து) அடீ! ஏனின்னம் கைகூப்பிக் கொண்டிங்கேயே நின்றுகொண்டிருக்கின்றாய்? இராஜகிரகத்து விசேடங்களொன்றும் உனக்குத் தெரியாதுபோலிருக்கின்றது.

புட்பா. ஆ! ஆ! அம்மணீ! யாதொன்று மறியேனே. காலைமுதலிங்கேயே நின்றுகொண்டிருக்கின்றேன். அப்படிக் கென்ன விசேடம் அங்கே?

அர்ச். (ருக்மிணி வரவைக்கண்டு, பயத்துடன்) (தன்னுள்) அடடா! இதுவென்கொல் விபரீதம்? இவளெங்கிருந்துவந்தனள்?

## எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

வெய்யிலிற் றபிக்கு மொருவனுக் கெதிர்விண்
மேகமார்ந் தொளிர்தர மாரி
பெய்யுமென் றெதிர்பார்த் திருப்பவத் தருணம்
பேரனல் மழையுற்றாற் போலே
செய்யவாய்ச் சுபத் திரையின்நல் வரவிற்
றேட்டமுற் றவடா வந்த
மையல்வெப் பாற்ற இருக்கின்ற வென்முன்
வந்தனள் ருக்மிணி யம்மாள்.

(வசனம்.) ஆ! ஆ! ஆ! இப்பொழுதகாரணமாய் இவள் வரவு சம்பவித்திருக்கின்றதனுல், இவளாலெனக்கென்னென்ன சங்கடங்கள் நேரிடப்போகின்றதோ? தெரியவில்லை. ஏற்கனவே, இச்சமயம் கோபாவேசத்தினுல், என் மதிமருண்டிருக்கின்றது. இப்பொழுது யாம் நிரம்ப ஸாவதானமாயிருக்கவேண்டும்.

ருக். அடீ! என்ன விசேஷமா? எல்லாம் தோழி சுபத்திரையின் கல்யாண விசேடந்தான்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

குலமணிநஞ் சுபத்திரையின் கல்யாண மகோற்சபத்தைக்
குறித்து நன்னுள்
பலமுறநிச் சயஞ்செய்து கற்கமுனி யதற்காகப்
பகர்ந்த வண்ணம்
நலமுறவே இஷ்டதெய்வ சுமங்கலிப்ரார்த் தனையின்று
நடப்ப தாலே
நிலமகிழுஞ் சுபத்திரையை நீராட்டி வைப்பதற்கு
நீசெல் வாயே.

புட்பா. ஆ! ஆ! அம்மணீ!! அங்ஙனமாயின் சுபத்திராதேவிக்கு, இங்ஙனம் யதீச்வரஸேவைக் கின்றுவரச் சௌகரியப்படாதோ?

ருக். அடீ! சீ, அவட்கிங்குவர இன்று ஸாவகாசமேது? அன்றியும், இந்நாள்வரை யதீச்வரசேவைசெய்தது போதுமென்று, கற்கமுனிவர்தம் ஆக்ஞையாய்விட்டது. நாளையத்தினம் மஹாபர்வகாலமாகையால், ஸகலரும் ஸமுத்திரஸ்நானத்திற்குப் போகப்போகின்ருர்கள். அங்கேயே இவ்யதிராஜருடைய சாதுர்மாஸபூஜையை ஸம்பூர்ணஞ்செய்து, அவரை அங்கிருந்தேயனுப்பிவைக்கவேண்டுமென்றுஞ் சொல்லியிருக்கின்ருர்கள்.

அர்ச். (கோப சோக பயத்துடன்) (தனிமொழி) ஹா! ஹா! ஹா! அந்தோ! அந்தோ!! எந்தத்தினத்தைக் குறித்துக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தேனே, அந்தத்தினமே வந்துவிட்டாற்போலிருக்கின்றது. இனி என்ன அவஸ்தைகள்வந்தாலும் வரட்டும்.

புட்பா. அப்படியானுலும், அம்மணீ! அஸ்தினுபுரத்துச் சம்பந்திகள் ஒருவரும் வரவில்லையே. அதற்குள் சுமங்கலிப் பிரார்த்தனை என்ன தடபடலிது?

ருக். அடி! அடி! பைத்தியகாரி! முன்தடவை இங்கே கல்யாண விக்கினம் வந்ததினுல், இனி அந்த முகூர்த்தத்தை அஸ்தினுபுரத்தில்வைத்தே நடத்தவேண்டுமென்று, துரியோதனராஜனுடைய அபிப்பிராயம். அதுதெரிந்தவுடன் இங்கெல்லவருமதையொப்புக்கொண்டு, அவ்விதஞ்செய்ய முகூர்த்தமும் நிச்சயித்தாய்விட்டது. அங்கும் அதற்குவேண்டிய எத்தனங்களெல்லாஞ் சரியாய் நடந்திருக்கின்றன. முன்னடி முகூர்த்தமாகையால், இன்றுமுதலே ஜனங்கள் அனேகர் அவ்வஸ்தினுபுரத்திற்குப் போய்க்கொண்டிருக்கின்றார்களே. அங்ஙனமிருக்க, பெண்வீட்டுச் சுமங்கலிப் பிரார்த்தனை இங்கே முன்னதாக நடத்தவேண்டாமா? அதுதானின்று அவசரத்தில் நடக்கின்றது. நீ இங்கேயே நின்றுகொண்டிராதே. சீக்கிரம்போ. ஆவலாதிகள் வந்துவிடாமல்; தோழியோ; உன்னைத்தவிர யாரையுந் தொடச்சம்மதிக்கமாட்டாள். சீக்கிரம் போ.

புட்பா. சரி, சரி. யான் செல்கின்றேன். இங்ஙனம் யதீச்வாரிடமொருவருமிருப்பதற்கில்லையே.

ருக். நீ போடிபோ. இங்காகவேண்டியதை யான் பார்த்துக்கொள்கின்றேன்.

புட்பா. நன்று. நன்று. (என்று சென்றனள்.)

ருக். (அர்ச்சுனனருகிற்சென்று) (அஞ்சலித்துக்கொண்டு) யதிராஜருக்கு யாது இச்சையோ, அதைத் தெரிவிக்கவேண்டும். யான் இன்று கைங்கர்யத்திற்குத் தயாராக இருக்கின்றேன்.

[என்று சொல்லி உற்றுநோக்கினள்.]

அர்ச். (கோபாவேசத்துடன்) (கோமுகியைக் கீழே எறிந்து) அடீ! அடீ! நீயோ? கெட்ட கேடோ? உன் சேவையிலிடிவிழ. இப்படிப்பட்ட துக்கவார்த்தையை யுச்சரித்த நின் நாவைச்

சேதிக்கவேண்டும். இருக்கட்டும். நீ இதைவிட்டுப் போய் விட்டாலே, எனக்குக் கைங்கர்யஞ் செய்ததைவிட அதிகந் தான்.

ருக். என்னடி இவனிப்படி யுளறுகின்றான்? திருட்டுத்தனமாய் வந்த குருட்டாண்டிபோல சீறுகின்றானிவன். ஆரடீ! இப் பொழுதிவனை வாஸ்தவயதியென்று சொல்ல வாய்வரவில்லை. ஏனெனில்? தோழியின் கல்யாண நிச்சயத்தை நான் சொன் னதில், இவனுக்கிப்படிக் கோபம்வருவானேன்?

அர்ச். (படபடத்த மார்பை யமர்த்திக்கொண்டு)

விருத்தம்.

ஆக்ரமத் திந்தச்சிங்க மடையுமோர் பாகந்தன்னைச்
சாக்கடை நரிகொண்டுய்க்குந் தன்மையைக் கேட்டாலெற்குத்
தாக்குவெஞ் சினமெழாதோ? தப்புரை தந்த நின்புன்
னாக்கடை நறுக்காதுன்னை விட்டதுன் நலமென்றெண்ணாய்.

ருக். அடே! அடே! சரி, சரி. நிச்சயமாய் அவன்தான் இவன். நன்றாய்த் தெரிந்துகொண்டேன். அடே! அடே! கள்ள அர்ச்சுனா!! யானுன்னைத் தெரிந்துகொண்டேன். தெரிந்து கொண்டேன். நீ எவ்வளவோ சாதுரியமாய் எடுத்த வேஷத் திற்குத்தக்கபடி நடித்திக்கொண்டிருந்தாலும், கடைசியில் என் னால் நீ ஏமாந்துபோனாயடா.

அர்ச். (தன்னுள்) ஓ! ஓ! புத்திமோசம் போய்விட்டோம். எந்த உத்தேசத்தினால், இத்தனை ஸாஹஸப்பிரவர்த்திகளுஞ் செய்ய நேர்ந்ததோ, அவ்வுத்தேசகாரியமே பங்கமடைவதாய்ச் சொல் லிக்கொண்டுவந்த, இவளது சாதுரியத்தினால், மட்டற்ற கோபா வேசத்திற்குள்ளாகி, மதிமயங்கி, தேகத்தையும் மறந்து, இத் தகைப் பிரமாதத்திற்குள்ளாய் எல்லாங் கெட்டுப்போய்விட் டன. இனி இதற்கென்செய்வது?

ருக். அடே! அடே!

## விருத்தம்.

கள்ளடாம்பிகநீயாவன் ? காரியமொளிக்காதென்பா
லுள்ளதையுரைத்தாலிங்கே உனக்கொருகேடுமில்லை
விள்ளுகின்றாயா ? அன்றேல், வீரமைத் துனர்தங்கோபக்
கொள்ளியால்வேகின்றாயா ? கூறுதிஇரண்டிலொன்றே.

அர்ச். (உளம்பதறி) (கைகால் நடுங்க எழுந்து)

## அகவல்.

சரணஞ் சரணந் தாயே சரணங்
கருணை சுரந்த கண்ணாய் சரணங்
கருமணி நிறத்த கண்ணற் குகந்த
திருவே கமலைத் தேவீ சரணம்
மங்களந் திகழ்ருக் மணிநா யகிநின்
துங்கநா யகர்க்குத் தொண்டன்யா னன்றோ ?
மற்றெது கொண்டு மறைத்தொளித் தாலும்
உற்றதா யறியா வொருசூ துண்டோ ?
இச்சம யத்திவ் வர்ச்சுன னென்மேற்
பக்ஷம்வைத் தென்னை ரக்ஷித் தருளே.

(எனத்துதித்து, அவளது தாட்டாமரைகளிற் சாட்டாங்கமாய் விழுந்துபணிந்துகொண்டு)

## வெண்பா.

மன்மயிதைக் கண்டுகொண்டாய் மற்றூர்க் குரைக்கிலது
தன்மமன்று தாயே சரண்புகுந்தேன்—என்மேற்
றயவுடனே எற்கபயந் தந்தாள வேண்டும்
ஐயருக்மி ணீதேவி யே.

ருக். (சிரித்துக்கொண்டு) (அர்ச்சுனன் முதுகைத்தடவி) அடே! அடே! அர்ச்சுனா !! இதுவென்கொல் ? எழுந்திரு. எழுந்திரு.

அர்ச். அம்மணீ ! இச்சமயம் எனக்கபயந்தந்தாலொழிய எழுந்திருப்பதில்லை.

ருக். அஞ்சேல். அஞ்சேல். அர்ச்சுனா!! இந்தா அபயந் தந்தேன் தந்தேன். எழுந்திரு. எழுந்திரு. என்னாலுனக்குக்கேடுறு மென்றுதான் எண்ணுகின்றாய்கொல்?

[அர்ச்சுனன், எழுந்துதன் ஆசனத்திலுட்காருகின்றனன்.]

ருக். அடே! அடே! பிரமைகொண்டவனே! எல்லாஞ்சரிதான். என்தோழி சுபத்திரை நிமித்தம் இத்தனை ஸாகஸப்பிரவர்த்திகளேன் செய்யவேண்டும்?

வெண்பா.

பித்தப்பி ராந்தி பிடித்திட்ட பேயாசு
பத்திரையை எய்துதற்கு பாயமிதோ?—மெத்தப்
பிறவினையெ லாமிருக்கப் பேசுதற்குக் கூசுந்
துறவிதனைக் கொண்டதென்ன சொல்.

(வசனம்) இதனாலவளை எப்படி மணஞ்செய்ய உத்தேசித்திருக்கின்றாய்?

அர்ச். வெண்பா.

மெய்த்துறவி தன்றிந்த வேடந் தரித்ததுபோற்
பொய்த்துறவே யானும் புனைந்திட்டேன்—ஸத்யமிதே
இத்தருண மென்பே ரெடுத்துரைத்தாற் கன்மங்க
ளத்தனையு மேயவத்த மாம்.

(வசனம்) அம்மணீ! தயவுசெய்து, அர்ச்சுனா! அர்ச்சுனா!! என்றிப்படி என்பேரைச்சொல்லியழைத்திடக்கூடாது. அதனாலென் பிரயத்தனமெல்லாங்கெட்டுவிடலாகாது.

ருக். சரி. சரி. அஃதிருக்கட்டும். மேலென்னசெய்யப்போகின்றாய்?

அர்ச். அதைப்பற்றியான் ஒன்றுமே நினைக்கவில்லை. முன்னம் சுபத்திரை துரியோதனனுக்கு நிச்சயிக்கப்பட்டாளென்று கேட்டவுடனே, ஒருவிதவிரக்தியையடைந்தேனாயினும்; அவள்மீதுள்ளவாசை என்னுள்ளத்திற்குடிகொண்டிருந்ததால், ஒருக்காலவளையடைதற்குப் பிராரத்துவமேற்படுமானால், அதற்குத்

நடையுறுதப்டி, இப்படி வேடமாகிய திரிதண்டஸன்யாசத்தைத் தரித்துக்கொண்டு, ரைவதகிரியில் வந்துட்கார்ந்தேன். அதன் மேல், பலராமர் பிரியபக்தியுடன் அழைத்துக்கொண்டுவந் தென்னை இங்கே வைத்திருக்கின்றனர். ஆனால், இதற்குமேல் இன்னது நடக்கப்போகின்றதென்றும், சுபத்திரையையடை தற்குபாயமின்னதென்றுந்தோன்றவில்லை.

ருக். அர்ச்சுனா!! அங்ஙனமாயின், அதற்கோருபாயஞ்சொல்கின் றேன். அவ்விதஞ்செய்கின்றாயா?

அர்ச். அம்மணீ! அவ்வுபாயமெனக்குச்சொல்லவேண்டும்.

ருக். சற்றுசெவிசாய்த்திடு. ஊற்றதுரைப்பேன்.

அர்ச். நன்று. நன்று. [என்று செவிசாய்க்கின்றனன்.]

[ருக்மிணி அர்ச்சுனன் காதிலேதேதோ ஓதுகின்றனள்.]

ருக். ஜாக்ரதை. ஜாக்ரதை. யான் செல்கின்றேன்.

அர்ச். அம்மணீ! அங்ஙனமாகட்டும். கிருஷ்ணபிரானுக்கிதுதெரிந் தால் சம்மதமாகுமா?

ருக். அதைப்பற்றி ஒன்றுஞ்சொல்லவேண்டாம். எல்லாம் பின்னுற் றெரியவரும். யான்செப்பிய முறைப்படி செய்யக்கடவாய். செல்கின்றேன்.

அர்ச். (கையஞ்சலிசெய்துகொண்டு) அம்மணீ! தங்கள் அனுக்கிரகத் திற்குப்பாத்திரனாகிய யான் தன்னியனானேன். இந்நன்றி என் றென்றும் மறக்கற்பாலதன்று.

ருக். சரி. சரி. இனியுன் வேடத்தையனுசரித்து நடக்கல்வேண்டும்.

(என்று சொல்லி) சிங்காரக்கவி.

துதிகூறும்ஞான முதிர்பானுவான
யதிராஜரேநும் பாதமேபணிந்தேன்.

[எனத்தொழுகின்றனள்.]

அர்ச். (புன்னகையுடன்) நாராயண. நாராயண.

[என்றுச்சரிக்கின்றனன்.]

[ருக்மிணி சென்றனள்.]

அர்ச். (தன்னுள்) **விருத்தம்.**

மாதுருக்மிணியென்பாற்சொல் வாக்கியோபாயமெல்லாம்
சூதுகொலுண்மைமேயகொல் சூக்குமந்தோன்றவில்லை
பாதகமவள்சொல்வாளோ ஒருவிதம்பார்த்தாற்கார்ய
சாதகமாச்சுதென்றே தான்நினைக்கின்றேன்மாதோ!

(வசனம்) அடட! அவள்தான் என்ன சாதுரியஞ்செய்துவிட்டனள்? இன்று கல்யாண அங்கமாய்ச் சுமங்கலிப்பிரார்த்தனை நடக்கின்றதென்றும், இப்பொழுதே கல்யாணத்திற்கு அஸ்தினுபுரிக்குச் செல்லவேண்டுமென்றுஞ்சொல்லி, எனக்குக்கோபமூட்டி எனது நிஜரூபத்தை வெளிப்படுத்திய சாமர்த்தியம் என்னென்று சொல்லட்டும்!! அஃதிருக்கட்டும். இன்றிதுகாறும் சுபத்திராமணி இங்குவராதகாரணந்தானென்னை? அதன் மன்மம் அவள்வந்து சொன்னலொழியத்தெரியாது.

[அப்பால், ஸாரங்கயனை பிரவேசிக்கின்றனள்.]

ஸாரங்கயனை. (அஞ்சலி செய்துகொண்டு)

அகவல்.

போற்றி! போற்றி! புண்ணிய மூர்த்தி!
சாற்றக் கேண்மோ! சாற்றக் கேண்மோ!
தேவரீர் நமது திவ்யபொற் கமலச்
சேவடி களுக்குத் தேவிசு பத்திரை
தெண்டனிட் டன்பாய்த் தெரியப் படுத்திக்
கொண்டதோர் மனுவிது கூறுவ தென்னெனின்?
"என்றனக் கன்னை யின்னரு கிருக்க
இன்றொரு காரணம் ஏற்பட் டதனல்
வேண்டுவ தளிக்கும் விபரீத நீக்கும்
பூண்டுளக் கவலையைப் பொன்றிடச் செய்யும்
மாயையவன் முகிற்கு மாமா ருதராம்
தூயவெ தீந்திர சுந்தர வடிகளின்
மகத்துவ மிகுத்த மாண்புடைச் சேவை
சகத்திலெற் கெளிதிற் ருன்கிடைத் திருந்தும்
ஏற்றநும் பணிவிடைக் கெய்துதற் கில்லேன்
சாற்றுமிப் பிழையை க்ஷமித்தரு ளென்றே."

அர்ச். நாராயண. நாராயண. (என்று சொல்லி மவுனம் வகித்தனன்.)

(———) (திரைக்குள்) இங்ஙனம் யாருமில்லையா?

ஸார. யாரோ தரிசனத்திற்கு வந்திருக்கின்றார்கள் போலும்.

[திரைக்குட்சென்று, திரும்பவந்து.]

ஸ்வாமிமகராஜ்!! யாதவசேனாதிபதி சாத்தகியாரவர்கள் தரிசனத்திற்கு வந்திருக்கின்றார்கள். ஆக்ஞையானால் அழைத்து வருகின்றேன்.

அர்ச். (தலையசைத்து, வரட்டுமென்றடையாளங்காட்டி) நாராயண.

[என்றுச்சரிக்கின்றனன்.]

[அப்பால், ஸாரங்கநயனைஸஹிதம் சாத்தகியார்பிரவேசிக்கின்றனர்]

ஸார. இதோ! இதோ! யதிராஜர் வீற்றிருக்கின்றார்கள்.

சாத். (யதிவேந்தர் தம் சரணாரவிந்தங்களில், ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரிக்கின்றனன்.)

அர்ச். (மேலாகக்கையையுயர்த்தி) நாராயண. நாராயண.

[என்றுச்சரிக்கின்றனன்.]

சாத். (எழுந்துநின்றஞ்சலிசெய்துகொண்டு)

ஆசிரியவிருத்தம்.

மாதவ யதீச்வர மகாமுனிவ ரேநும்
மலர்ப்பதம் போற்றி போற்றி
மன்னர்பெரு மானெங்கள் மகராஜர் பலராமர்
வாழ்த்துவிந யத்தி னோடு
பாதகம லந்தீர்க்குந் தேவரீர் திவ்யபொற்
பாதக மலங்க ளுக்குப்
பண்புட னமஸ்கரித் தன்புடன் றெரியப்
படுத்துவிண் ணப்ப மிதுவே
தீதறும காபருவ காலமது நாளைத்தி
னத்தில்வர லாற்சகல ரும்

சென்றுகட லாடிவன போஜனு திகணடத்
தித்திரும் புவம் நாளையே
ஆதலி னுமக்குமவ ணெய்துதற் கிச்சையுள
தாகிற்சு பத்திரை யுடன்
அப்படிச் செயல்வேண்டும் இல்லையேற் கருத்தெதோ
அறிவிக்கல் வேண்டு மென்றே.

அர்ச். ஆ! ஆ! நன்று. நன்று. நாளைக்குதயமகாபர்வதத்திற்கு பட்டணஜனங்களுடன் மஹாராஜர் கடலாடிவரச்செல்கின்றார்களா? நிரம்பஸந்தோஷம். நிரம்பஸந்தோஷம்.

சாத். ஆம். ஆம். அடிகாள்! நாளைக்குதயகாலத்திற்குமுன் எல்லவரும் சமுத்திரதீரத்திற்குச்சென்று, ஸ்நானமுதலானதுகணடாத்தி, வனதேவதா ஸமாராதன போஜனுதிகளுமுடித்து, சாயங்காலம் மறுபடிமீள்வதாகும். யதிவேந்தருக்கும் வர இச்சையிருந்தால், சுபத்திரையையுங்கூடவழைத்துக்கொண்டு போகவேண்டிய எத்தனஞ்செய்யவேண்டிவரும். அல்லது இங்கேயேயிருக்கப் பிரியமானல், அவளையுமிங்கிருக்கும்படி செய்யவேண்டிவரும். ஆகையால், தங்கள் கருத்தின்னதென்பதைத் தெரிவித்தருளல் வேண்டும்.

அர்ச். சரி. சரி. எல்லவருஞ் சமுத்திரஸ்நானத்திற்குப் போகின்றபொழுது, யாம்மாத்திரமிவிடத்திலிருந்தென்னபயன்? யாமும் உற்சாகமாகவே வருகின்றேம். ஆனல், அந்த ஜனஸமுதாயங்களின் ஸம்ஸர்க்கங்களொன்றும் இல்லாமல், எங்கட்குத்தனிப் படயிருக்கும்படியேற்பாடு செய்யவேண்டும்.

சாத். அங்ஙனமேயாகட்டும். அடிகட்கேகாந்தமாயிருக்கும்படியே ஏற்பாடுகள் செய்கின்றேம். அவ்விடங்களிற் சுபத்திரையும், அவளது சகிகளுமல்லாது மற்றுயாவரும் தேவரீர் திருஷ்டிக்குத் தென்படாவண்ணம் ஏற்பாடுசெய்கின்றேம்.

அர்ச். நிரம்பசந்தோஷம். நிரம்பசந்தோஷம்.

சாத். (அஞ்சலியுடன் திரும்பவும் நமஸ்கரிக்கின்றனன்)

அர்ச். நாராயண. நாராயண. (என்றுச்சரிக்கின்றனன்)

[சாத்தகி சென்றனன்.]

அர்ச். (தாதியைக்குறித்து) அடீ! மாத்யான்ஹிக ஸ்நானந்தயார் செய்யவேண்டும். யாம் இப்பொழுதங்கே வருகின்றோம்.

ஸார. ஆக்ஞை.

[என்று செல்கின்றனள்.]

அர்ச். (எழுந்துநின்றுகொண்டு) (ஆனந்தத்துடன்) (தனிமொழி) ஒருவிதத்தில், உருக்மிணிப்பிராட்டி சொல்லியவார்த்தைகளெல்லாம் ஒத்துவருகின்றன. அதனல், நங்காரியம் ஸித்தியாகுமென்பதிற் சந்தேகமின்று. ஆனல், யாம் நாளைக்காலையிற் றனிப்பிரயாணஞ்செல்வதிற்செய்யவேண்டிய காரியமாவது:— அவளைசகீஜனத்தைப்பிரித்துத்தனிப்பட ஏகாந்தத்திலழைத்துக்கொண்டு செல்வதில், நான் இன்னனென்பதை, அவட்குத் தந்திரமாய் வெளிப்படுத்தி, அப்படியே அவளைக்கிரஹித்துக் கொள்ளுமுபாயத்தைத் தேடவேண்டும். அதில் யாதவசைன்யங்கள் தடைசெய்யவந்தால், இந்தத்தண்டத்தையும், இவ்வுடையையும் நீக்கிவிட்டு, சஸ்திரங்களினல், அவர்களை முற்றுஞ் சங்கரிக்கவேண்டும். அதற்குள்ள சக்திகளுண்டாய்விட்டன. துர்த்தினமெல்லாம் போய்விட்டன. நாளைவிடிவதற்கு முன்னலேயே இந்நகரங்கடர்ந்து, அவளுடன் வனமார்க்கத்தை நாடல் வேண்டும்.

இனித் துணிவே துக்க மொழிக்கும்
பய மகன்றது ஐயம் வளர்ந்தது.

[என்று சென்றனன்.]

4-வது அங்கம் முற்றிற்று.

---

# 5-வது அங்கம்.

---

(யதிவேடதாரியான அர்ச்சுனன் ஆதனத்தில் தியானத்திருப்பவனாகவும், பக்கத்தில் சுபத்திராதேவியும், புட்பாவதியும் நின்றுகொண்டிருப்பவராகவும், பிரவேசிக்கின்றார்கள்.)

அர்ச். (தியானத்தினின்றும் நீங்கி) (தன்னுள்) இன்றே நம்காரியஞ் சித்திபெறவேண்டும். இன்றிந்தப்பிரயாணத்தில், எப்படியாவது நம்முடைய சங்கற்பத்தை நிறைவேற்றிக்கொள்ளல் வேண்டும். (வெளிப்படை) நாராயண, நாராயண. (என்றுச் சரிக்கின்றனன்.)

[சுபத்திரையும், தாதியும் நமஸ்கரிக்கின்றனர்.]

அர்ச். நாராயண. நாராயண. (சுபத்திரையைக்குறித்து) இஷ்டவரப்ராப்திரஸ்து. ஓ. ஓ. மாதுசிரோன்மணீ! சுபத்திராமணீ!! எம்மைப்போன்றயதிகளுக்கெல்லாம், நகரவாசத்தைக்காட்டிலும், இத்தகைய வனவாசமே நிரம்பசுகமாயிருக்கும். எத்தனையோ நாட்களாய் உனதந்தர்கிரகத்தில் அடைபோட்டிருந்ததுபோலிருந்தது. இன்றுதான் சுகம்பெறுகின்ற சுதினமாகப்போகின்றது. என்? அங்ஙனமன்றோ?

வெண்பா.

காட்டிற் றிரிந்து களிக்குங் கிளிதனையோர்
கூட்டி லடைத்துவைத்த கொள்கைபோல்—வீட்டுள்
பலநா ளமர்ந்திட்ட பாவம்போ யின்றே
நலநாள் வெளிப்போந்த னம்.

சுபத். (புன்னகையுடன்) (தன்னுள்) இதுகாறும் இவரிடம் என் எண்ணத்தை வெளியிடச் சந்தர்ப்பமில்லாமலே போயிற்று. இன்றெப்படியாவது எனதபீஷ்டத்தை வெளிப்படுத்தி, இவரால் எனதுற்ற பந்துக்களாகிய சத்துருக்களுடைய சங்கடத்தினின்றும், தப்ப வழிதேடிக்கொள்ளல்வேண்டும். அதற்குத்

தக்கசமயம்பார்த்துத் தந்திரமாய்வெளியிடவேண்டும். (வெளிப் படை) ஆம். ஆம். ஸ்வாமிமகராஜ்!! யதீச்வரர்களுக்கு வன வாசஞ் சுகமென்பது வாஸ்தவந்தான். ஆனால், அதில் எப்படி யானுந் றங்கட்கு அதிக வானந்தமுண்டாகுமோ, அப்படிக் கில்லை. ஏனென்றால், யான் எப்பொழுதும் நம்பக்கத்தைவிட் டகலாதிருக்கின்ற தொந்தரை யிருப்பதனுற்றான்.

அர்ச். சீச்சீ! அதிலொருதொந்தரையுமில்லை. "இரஸிகஜனத்தா லின் பம்வளரும்; அரஸிகஜனத்தால் அனர்த்தம் விளையும்." என்ற படி, இந்த அரஸிகையான தாதியைக் காண்பதில்லாதிருந்தால், மகாரஸிகோத்தமையாகிய உனது ஸம்ஸர்க்கந் தொந்தரை யென்று சொல்லப்படுமா? அதுவே ஆனந்தமாகும்.

சுபத். ஆம். ஆம். வாஸ்தவந்தான். அஃதெனக்குந் தெரிந்தவிஷயந் தான். ஆயினும், அடிகளுக்கிதமாய்ப் பெரியபெரிய ஏவல்களைச் செய்ய யான் பழக்கமில்லாதவளா யிருந்ததுபற்றி இவர்களைத் தங்களெதிர்ப்பிற் கூட்டிவர நேர்ந்தது. அங்ஙனமாயினும், இன்றைப்படியேனுகட்டும். யானே தங்கட்குரிய ஸகல கைங் கரியங்களையும் பார்த்துக்கொள்கின்றேன். அதனாலடிகளுக் கானந்த முண்டாகட்டும். (தாதியைக்குறித்து) அடீ! புட்பா!! இன்றுனக்கு விடுமுறைநாள். இன்றைப்படி பட்டண ஜனங்க ளெல்லோரும் நாலாபக்கங்களிலுஞ் சஞ்சரித்துக்கொண்டிருக் கின்றார்களோ, அப்படியே நீயும் ஏதேச்சையாயிருக்கக்கடவை. செல்வாயாக.

புட்பா. அம்மணீ! தங்களைப்பார்த்துக்கொண்டிருப்பதே எனக்குப் பரமோற்சாகம். ஆயினும், தங்களுத்தரவுப்படி இப்பொழுது செல்கின்றேன். இங்கெங்கேயாவது சமீபத்திலிருந்துகொண் டிருப்பேன். அவசியம் நேர்ந்தபோதழைத்தல்வேண்டும்.

[எனச்சென்றனள்.]

அர்ச். நிரம்ப சந்தோஷம். நிரம்பசந்தோஷம்.

[சற்று நடந்துகொண்டே.]

வெண்பா.

இன்புறுமே காந்தசுக மின்றெமக்கு நீயருள்வாய்
அன்புறுநின் கைங்கரிய மத்தனையும்—மன்புவியில்
தக்கபிரி யத்துடன்யாம் தாமேற்றுக் கொள்ளுதற்கு
மிக்கவுமே யோக்கியமாம் மேல்.

சுபத். (கொஞ்சங்கோபத்துடன்) அடிகாள்! யதிகளாயினோர் எதை யெதைச்சொன்னாலும், அததுவுமொரு சோபையாகத்தானிருக்கும். எனங்ஙனமன்றோ?

அர்ச். ஆ! ஆ! மாதுசிரோன்மணீ!! உலக ஜனங்களிடத்தில் எப்படி யெப்படிச் சம்பாஷிக்கவேண்டுமோ, அப்படி எமக்கு அப்பியாசமில்லாததால், யாம் பேசுவதிலேதேனும் குற்றங்குறைகள் வந்தாலும் வரும். நீ அதற்காகக் கோபப்படக்கூடாது.

சுபத். (கையஞ்சலி செய்துகொண்டு)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

அத்துவிதப் பிரமநிஷ்டை யகலாத அதிவர்ணா
ச்ரமிக ளான
முத்தர்கள்சம் பாஷணையிற் சிலமிலாச் சிறுமிமுழு
மூடம் நானே
தத்துவநுஞ் சப்தார்த்த மறியாது விபரீதஞ்
சார்ந்திட் டாலுஞ்
சித்தமதிற் றயையுடனே பொறுத்தருளல் வேண்டுமுனிச்
சிரேஷ்ட ரே.

அர்ச். ஹ! ஹ! ஹ! ஸபாஷ்! சுபத்திராமணீ! நீ மிக்கவுஞ்சமர்த்தி, வெகு சாதுர்யமாய்ப் பேசுகின்றனை. அஃதே எமக்கானந்தம். ஆனந்தம். கண்களிகூரும் பெண்களுயகம்மே!! இப்படி நின்னுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்தாலே அதிக உற்சாகம் எமக்குண்டாகின்றது. அதனால், ஒருநாள் ஒரு நிமிடமாகவும், ஒரு வருஷம் ஒரு நாளாகவும் தோன்றும்.

சுபத். (தன்னுள்) இன்றேதோ இவர் வெகு சுமுகத்துடன் சரசமாய்ப் பேசுகின்றனர். அதனால், இன்றிவரிடம் எனதெண்ணத்தைவெளியிட ஏற்றசமயம் வாய்த்திருக்கின்றது. (வெளிப்படை) (கையஞ்சலித்துக்கொண்டு) அடிகாள்! தேவரீர்க் கங்ஙனந்தோன்றுவது ஸகஜமே. அதுபோற்றங்களை யடுத்திருக்கின்ற இவ் வேழைஜனத்திற்கும் அப்படிச்செய்துவைக்க வேண்டுவதவசியமன்றோ? ஸ்வாமி மகராஜ்! எப்படியாவது,

வெண்பா.

ஒருநிமிட மோர்தினமா யோர்நாளு மோங்கும்
வருடமொன்றா யென்றனக்கு மட்டும்—பெருகி
வளரா ததைமாற்றி வைத்தருளல் வேண்டும்
தளராத சற்குருநா தா.

அர்ச். ஹ! ஹ! ஹ! என்ன சாதுரியம்!! (தன்னுள்) அடே! அடே! எவ்வளவு அடக்கமாய்ப்பேசுகின்றனள்! இருக்கட்டும். இடையில் விச்ராந்தியின்பொருட்டுத் தங்கிடமாகிய இந்த லதா மண்டபத்தின் சார்பிலிருந்தே, இவளை இப்பொழுது வார்த்தைப்போக்கிலேயே வேறுவிதத்திற் றிருப்பவேண்டும். (வெளிப்படை) ஆ! ஆ! சுபத்திராமணீ!! இதோபார்!! கலிபுருடன் வெளிவரும்பொழுது கண்ணுக்குத்தோன்றாமல் ஒளிந்தோடுகின்ற சற்சனங்களைப்போல் இந்தப் பிராதக்கால சமயமானது தோன்றுவதால், ஆகாசத்திலுள்ள நக்ஷத்திரகணங்களெல்லாந் தாந்தாமே மறைந்துகொள்கின்றன. பார்!! இதோ! இதோ!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

அடர்ந்திருந்த விருட்குலங்கள் சற்சனர்த முளத்திலுறு
தகங்கா ராதி
திடந்திகழ்துர் விருத்திகளின் கதியையொத் தனவாகுந்
தெளிந்த ஞானி
யிடந்திகழுஞ் சுத்தாந்தக் கரணமென வாகாய
மிலங்கக் கங்குற்
றொடர்ந்தபிர விர்த்தியிலா ரைச்வரியம் போற்குறைந்து
தொலைந்த தம்மா.

சுபத். ஆம். ஆம். வாஸ்தவந்தான். இந்தப் பிராதக்காலமானது மிகவும்பிரமணீயமாகத்தான் காண்கின்றது. ஆனல், இந்தப் பிரபாதசமயமும், இந்தப்பிரதேசங்களின் வளமைகளும், பார்க்கப்பார்க்க அதிகவாசையை விளைவிக்கின்றன. இங்கிங்கே,

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

சுகந்தமலர் வாடைகவர்ந் திளங்காற் றுலாவவுயர்
சோலை யெங்கும்
மிகுந்தெழிலார் புட்குலங்க ளெழுந்துகல கலசப்த
மென்மே லோங்க
உகந்தலதா மழிஞ்சில்களில் மயிலிணைக ளாடமுய
லோட மான்கள்
தகுந்துணைக ளுடன்றுலவ மிகவுமனோக் கியமாமிச்
சமயந் தானே.

அர்ச். ஆம். ஆம். சுபத்திரா! இஃதென்கொல் காக்ஷி? இதோ சமுத்திர தீரத்தில், யாதொரு ரைவதகிரியானது காண்கின்றதல்லவா; அங்குசென்றுபார்க்கத்தொடங்கினல், இதைவிட எத்தனையோ பங்கதிகமான விசேஷக்காக்ஷிகளாயிருக்கும்.

சுபத். ஆ! ஆ! அப்படியா? அந்தரைவதகிரியில் முன்னமே தேவரீர் தாமதித்திருந்த அக்குகையானது நிரம்ப விசேடமாகக்கேட்கப் படுகின்றது. அதை எனக்குப்பார்க்க விருப்பமுண்டாகின்றது. அதை எனக்குக் காண்பிக்கவேண்டும். அங்ஙனமாயின், அங்கேயே செல்வோமே.

அர்ச். ஓ! ஓ! அதற்கென்னதடை? அஃதுமிதோ சமீபத்திற்றானிருக்கின்றது.

சுபத். சரி. சரி. ஆனல், அப்படியே செல்வோம்.

அர்ச். சரி. சரி. அங்ஙனமாயின், அங்கதிகக் காற்றிருக்குமாதலால், அதுன்னாற் சகிக்கமுடியாது. நீ போர்த்திக்கொள்வதற்கு மட்டும் ஏதாவதொரு வஸ்திரத்தைக் கையிலெடுத்துக்கொள். மற்றவைகளைச்சுருட்டி ஒரு மூட்டைகட்டி இந்த லதாமண்டபத்துள் ஒருபக்கம் மறைவில் வைத்துவிட்டுவா.

சுபத். நன்று. நன்று. எனக்காகத்தாதியாற் கொண்டுவரப்பட்டிருக்கின்ற இந்த வஸ்திரமூட்டையைச்சுமப்பதுங் கஷ்டந்தான். (என்று லதாமண்டபத்துட்சென்று,) (மூட்டையவிழ்த்து, அதில் முதன்மையாயிருந்த அந்தச்சால்வை உத்தரியத்தையே கையிலெடுத்து) (தன்னுள்) சரி. சரி. இஃது இந்தவேளை என் கையில்வந்தது மினிதேயாம். முன் எனது பிராணவல்லவர் தம் பேர்விலாசங்களமைத்து என்னாலவர்க்களிக்கப்பெற்றிருந்து, அப்பாலெப்படியோ யானறியாமலே என்னிடம் வந்திருப்பதான சால்வையே இஃதாதலால், இதையே எடுத்துக்கொள்கின்றேன். ஏனென்றால், இம்மகானாலொருக்கால் எனதிஷ்டவாப்பிராப்திகிடைத்தால், அப்பொழுது எனது மனோவல்லவர் தம் தரிசனக்காக்ஷிக்கு இது ஒரு காரணமாயிருக்கும். நன்று. நன்று. ஆனாலவர் சொரூபம் வெளிப்படுகிறவரை இதுமறைவிலிருக்கவேண்டும்.

[என்று அந்தச்சால்வையைத் தன் கக்கத்தில் மறைத்து வைத்துக்கொண்டு வருகின்றனள்.]

அர்ச். சரி. சரி. நட. நட. இப்படி, இப்படிவா. அப்படி, அப்படிபோ.

[என்றிருவருங் கொஞ்சம் நடந்து, மலையின்மேலேறுகின்றனர்.]

அர்ச். ஆ! ஆ!! சுபத்திராமணீ!! இச்சமயமதிக வெயிலில்லாதிருந்தாலும், கொஞ்சதூரம் நடந்ததினால், உனக்கதிகச் சிரமமுண்டாயிருக்கின்றதென்பது தெரிகின்றது.

(கோச்சகம்.)

முத்துமுத்தாய்ப்பூர்ணேந்து முகத்திலமுதபிந்து
மெத்தவுறுகின்றனபோல் வேர்வைதிகழ்வனவால்
இத்ததியின்மேன்மூச்சுக் கீழ்மூச்செறிவதனால்
எய்த்தனைசுபத்திரைநீ இங்கிருந்திளைப்பாறாய்.

சுபத். ஆம். ஆம். அது மெய்தான். ஆனால், தேவரீர்க்கும் இந்த ஏற்ற மேறுகின்றதிற் சிரமமுண்டாகாமலிருக்குமா ? சொல்வதற்குக் காரணமாயானொருத்தியிருக்கின்றேன்.

அர்ச். ஸரி. ஸரி. அப்படியேயிருக்கட்டுமே. அதி ரமணீயமாயிருக்கின்ற இவ்விடத்திற் சற்றுநேரம் உட்கார்ந்திருந்து, அப்பாலந்தக்குகையின்பக்கல் செல்வோம்.

[என்றிருவருங் கீழேயுட்காருகின்றனர்.]

சுபத். (அங்கிருந்தே கீழ் எட்டிநோக்கி) (வியப்புடன்) ஸ்வாமி மஹாராஜ் !! இதோ இந்த மலையடிவாரப்பிரதேசத்தைப் பார்க்க வேண்டும்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

நன்னவரத் தினமிழைத்த மணிமாட மலிதுவரை
நகர வாசர்
சின்னவரும் பெரியவரும் ஸ்த்ரீபுருட ரனைவர்களுந்
திகழ்பட் டாடை
மின்னவரும் பல்பணியும் புனைந்துகனை கடற்கரையின்
மேவு மிந்த
மன்னவரை யடித்தலங்க ளணியணியா யிருக்கின்ற
வரிசை காணீர்.

(வசனம்) ஸ்வாமி மஹாராஜ் !! இந்த அற்புதக்காக்ஷியானது எனக்கிவ்விதஞ்சொல்லத் தோற்றுகின்றது. எவ்விதமெனின் ?

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

விரிகடற்சென் றெங்கெங்கோ திசாதிசையி லிருந்துகன
விலையு யர்ந்த
தெரிவுறுநல் விக்ரகங்கள் பலவற்றைத் திரைக்கப்பல்
சேர்த்து வந்து
பரிவுடனிப் பருவதமாம் வ்யாபாரி இவணடுத்த
பக்க மான
பெரியகடை வீதிகளிற் பரப்பிவைத்த காக்ஷியெனப்
பேச லாமே.

அர்ச். (புன்னகையுடன்) (தன்னுள்) ஹ ! ஹ ! ஹ ! என்ன ! என்ன இவனுடைய புத்தி சாதுரியம் !! வெகு பொருத்தமாய் மிகவுஞ்

சிறப்பாயிருக்கின்றதிவளது கற்பனை. இப்பொழுது, யானுமிவ ளுடைய உத்ப்ரேக்ஷைக்கிணங்க இப்படிப் பேசுகின்றேன். (வெளிப்படை) ஆ! ஆ! மதிசாலினீ!! அடீ! சுபத்திராமணீ!! உனது உத்ப்ரேக்ஷை மிகவுஞ் சிலாகிக்கத்தக்கதே. நிரம்பவும் யுக்தமாகயிருக்கின்றது நீ சொல்லிய கற்பனை. ஆனாலிப்பொ ழுது, அடீ! மாதுசிரோன்மணீ!!

(அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.)

அத்தகைய விக்ரஹங்கள் பலவற்று ளாய்ந்ததிக
வழக மைந்து
மெத்தவிலை மதிப்படங்கா ததிமேன்மை யாமொருபெண்
விக்ர கத்தைப்
பத்திரமாய்ப் பார்த்தெடுத்துக் கொண்டிங்தப் பருப்பதவ்யா
பாரி யின்பால்
அத்தனிலை கேட்டறியச் செல்கின்றே மெனுமுண்மை
யறியாய் போலும்.

சுபத். (கொஞ்சமிலச்சையுடன்) (தன்னுள்) இதென்னடீ! "தன்கை விரற்றானே, தன் கண்ணைக்குத்தியது" என்ன ஆச்சரியமடீ!! அஃதிருக்கட்டும். இப்பொழுதிவர் சொல்லிய வார்த்தை என்னையல்லவோ குறிக்கின்றது? அதன்பயனென்னே? மற்றை நாட்களைப்போலல்ல. இன்றிவர் தம் வார்த்தை வசனங்களெல் லாமே வெகுஸரஸமாயிருக்கின்றன. இருக்கட்டும். எல்லாமறி வோம். (வெளிப்படை) ஸ்வாமி மஹராஜ்!! ஸாதாரணவிஷய துரந்தரஜனங்களின் வார்த்தைபோன்ற சிருங்காரவார்த்தைகள் தங்களிடத்திலின்றுதான் கேட்கக்கிடைத்தன.

அர்ச். ஆ! சுபத்திராமணீ!! அஃது வாஸ்தவம். வாஸ்தவம்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

உருசிபெறு மாதிரசப் போனகமே உண்பதற்கு
யோக்ய மாகும்
விருசியதா மொருரசமா யமைந்துளதே லுனக்கந்த
விதம்போற் சும்மா

ஸரஸமுற விதம்விதமாய் ஸம்பாஷித் திருப்பதுவே
ஸார மாகும்
பரிசிதனுற் கெடுதலில்லை எமைப்போன்ற வேதாந்தப்
பதமுற் ருர்க்கே.

(வசனம்) யாம் எதை யெதைப்பேசினுலும் அதகிற் பற்றுதலில்லாம லிருக்கின்றே மென்றறியக்கடவாய்.

சுபத். (தன்னுள்) ஹ! ஹ! நன்று. நன்று. இப்பொழுதிவருடைய சொற் சாதுரியத்தையும், புன்னகையாகிய பராகத்துடன் விகசித்திருக்கின்ற முகத்தாமரையின் பூர்ணவிலாசத்தையும் பார்க்க, ஒருவிதத்தில் மஹாவிஷய ஆரக்தாராகவும், மற்றொருவிதத்தில் மஹாவிரக்தராகவுந் தோன்றுகின்றது. இன்றிவர்தம் அதிக ஸம்பாஷணத்தில், இடையிடையே என்மனதைக் கவருகின்ற இவரது சப்தங்களின் தொனிப்பினுல், எனதுமனோதவல்லபரின் ஞாபகமும் ஸ்புரிக்கின்றது. ஆகையாலிப்பொழுதிவருடைய பூர்வவிருத்தாந்தத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். இன்று நல்லசமயம் வாய்த்திருப்பதால், அதைப்பற்றி மெள்ளக் கேட்கின்றேன்.

அர்ச். ஆ! ஆ! நன்று. நன்று. ஆ! சுபத்திரா!! என் ஒன்றும் பேசாமலிருந்துகொண்டிருக்கின்றுய்? இன்னமும் ஏதாவதலங்காரத்தைக் கற்பனைசெய்ய உத்தேசிக்கின்றுய்போலும்.

சுபத். அப்படி ஒன்று மில்லை. தேவரீரிடம் ஒரே ஒருசமாசாரத்தைப் பற்றிக் கொஞ்சங்கேட்க விருப்பமுண்டாகின்றது. ஆனுலதிற் றேவரீர்க்குக் கோபமுண்டாகுமோ வென்றஞ்சிக் கூசுகின்றேன்.

அர்ச். ஓ! ஓ! அதிவினயமதிசாலினீ!! உன்விஷயமாய்க் கோபமென்பதே எமக்குண்டாகாது. நீ எதையெதைக்கேட்டாலும் அதையதைச் சொல்லச் சித்தமாயிருக்கின்றேம். ஆகையால், உனக்கியாதிச்சையோ அதைத் தாராளமாய்க் கேட்டுக்கொள்.

சுபத். ஸ்வாமி மஹாராஜ்!! ஒருவனுக்கு இப்பிரபஞ்ச ஸாம்ஸாரிக வாழ்க்கையானது சரியாய் நன்கமையப்பெறின், அதனுலவன்

பூர்ண சுகப்பிராப்தியை அடைகின்றதாகவல்லவோ சொல்கின்றீர்கள்? ஏன்? அங்ஙனமன்றோ?

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

சீர்த்திமிகு முத்தமக ளத்திரமு நன்மகனுஞ்
சிறந்தபௌத் திரனும்
க்ஷேத்திரநன் னிலவளமுங் கனதனமு மொருவனுக்குச்
சேரப் பெற்றால்
போர்த்திலகு கடலாடைப் புவிவாழ்வி லவனேநற்
புண்ய சாலி
வாய்த்தசொர்க்கத் திலுமதிக சுகமுறுவ னெனமேலோர்
வசன மன்றோ.

இன்னும், விருத்தம்.

கற்புடைய நன்மனைவி காதல்தரு மகனும்
விற்பனபௌத் திரனும் மேவுநிறை தனமும்
அற்பமில றத்தினல மாமிவைபொ ருந்தும்
இற்பெரிய வாழ்வெதிலு மின்பமுறும் வாழ்வே.

(வசனம்.) அங்ஙனமிருக்க, அத்தகைய ஸாம்ஸாரிக சுகத்தைத் தாங்களிந்தத் தருணவயதில் ஒழித்ததற்குக் காரணமியாதோ? அதைத்தெரியவிரும்புகின்றேன்.

அர்ச். ஓ! ஓ! சுபத்திரா!! சுகம்போற்றோன்றித் துக்கமாகவே பரிணமிக்கின்ற பிரபஞ்சஸாம்ஸாரிகத்தைச் சுகமென்று சொல்வது அறியாமையேயாகும். பார்!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

அரியபல பிணிகளுறு மாபத்து நிறைவிடமாம்
அஸார மான
பெரியகட லெனவிரியும் ஸம்ஸார வாழ்க்கைசுகப்
பிராந்தி யல்லால்

உரியசுக மதிலுளதோ உளதென்றாற் றாய்முலைப்பா
லுண்ப தாய்க்காற்
பருவிரலைச் சுவைக்கின்ற சிறுமதலை மதியொக்கும்
பான்மை யன்றோ ?

சுபத். ஸ்வாமி மகராஜ் !! அப்படிச்சொல்வது வாஸ்தவந்தான். ஆயி னும், யார்க்குமே பிறந்தவுடனே இப்படிப்பட்ட விரக்தி உண் டாகிறதில்லை. ஏதாவது ஒரு காரணத்தினுற்றான் விரக்தியுண் டாகவேண்டும். அதனால், தங்களுக்கிந்தத் தருணவயதிலிப் படிப்பட்ட விரக்தியுண்டாக எதுகாரணமாயிருந்ததோ அதைச் சொல்லவேண்டும்.

அர்ச். ஹா ! ஹா ! ஹா ! எந்தக்கேள்வியைக் கேட்டுவிட்டாய் ? இதற் கென்னென்று பதிற்சொல்லட்டும் ?

சுபத். (பயத்துடன்) மகான்களிடத்தில் பூர்வ விருத்தாந்தத்தைப் பற்றிக் கேட்கலாகாதென்பது தெரிந்திருந்தும் ; ஏதோ, "பேதமையென்பது மாதர்க்கணிகலம்" என்பதற்கிணங்கப் பிழைசெய்துவிட்டேன். தேவரீர் அதனை க்ஷமித்தருளல் வேண்டும்.

அர்ச். ஆ ! ஆ ! அதிற் குற்றமொன்றுமில்லை.

வெண்பா.

கேட்கத் தகாததைநீ கேட்டுவிட்டா யென்றில்லை
ஏற்குமது சோகாஸ் பதமெமக்கே—மாக்குயிலுன்
வேண்டுதலுக் காக விளக்குகின்றேம் மாதுறவு
பூண்டதற்குக் காரணமிப் போது.

பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தம்.

மாதர்க் கரசி யாமுயர்வாய் வாழ்ந்த பூர்வாச் சிரமமதில்
மாமா மகளோர் மதனவல்லி மதிநேர் முகத்து வடிவழகி
காதற் பெருகு மிருவர்களின் கருத்து மொன்றாய் லயித்திருப்பக்
கண்டா ரவட்னுறவினருங் களித்து மிகவுங் கீகரித்தார்

கோதிற் குணத்துக் குலக்கொடியைக் குறித்தே எமக்கு மணஞ்செய்
கொடுப்ப உறுதி வாக்களித்த கூறு மவள்ச கோதரர்சொற் து]
பேதப் படுத்தி விட்டதனுற் பீடு மன்றற் பிசகினதாற்
பெரிதாஞ் சோகப் பிணிக்கஞ்சிப் பிறங்குந் தவத்தி லிறங்கினமால்.

சுபத். (தன்னுள்) இஃதென்னடிசமத்காரம்! உலகத்திற்பந்துக்க ளென்பவர் எல்லாருக்கும் ஒன்றுபோலவேதானிருப்பார்களா? அவர்கள் நிர்த்தயவாய்க்கபட சமுத்திரமாகவேயிருந்து கொண்டு, யாதொருகுணசீலசமுமில்லாதவரனையும், பொருளொன்றிருந்தாற்போதுமென்று நினைக்கின்றார்கள். என்ன ஆச்சரியமாயிருக்கின்றது!! ஹா! ஹா! கஷ்டம், கஷ்டம். இருக்கட்டும். இப்பொழுதிவரை என்னென்று நினைக்கின்றது? இவருடைய பூர்வசரித்திரங்களெல்லாம் எனது சரித்திரகதியாகவேயிருக்கின்றன. இருக்கட்டும். மேற்கேட்போம். (வெளிப்படை) ஸ்வாமிமஹாராஜ்!! தேவரீரது அத்தகைய அம்மான் மகள் நிச்சயித்தபடியே ஒருநிலையாயிருந்தாளா, அல்லது பந்துக்களின் அபிப்பிராயம்போலவே மாறிவிட்டாளா?

அர்ச். சீ. சீ. அவளுடைய யோக்கியதையை என்னென்று சொல்லட்டும்? அவளைப்போல் உத்தமமான பெண் மூவுலகத்திலும் ஒருத்தியுங்கிடையாது.

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

சுந்தரி யவளெம் மாசையாற் றுயிலூண்
டுறந்துமா மதச்சுரத் தாலே
தொந்தமா ரிரக்த சோஷிதை யாகித்
துயர்கொடு மெலிந்தன ளவடன்
பந்துவா னவர்தந் தொந்தரை களுக்குட்
பட்டிருந் தாலுமெம் பாலே
சிந்தைநாட் டினளால் எந்தநா ளினுமே
சிறிதுமா றுளெனல் திண்ணம்.

சுபத். (தன்னுள்) ஹா! ஹா! கஷ்டம். கஷ்டம். இவ்வுலகத்திலிப்படிப் பட்ட பெருந்துக்கமானது என்னொருத்திக்கே பிரமதேவனு

லமைக்கப்பட்டிருக்கின்றதென்றெண்ணியிருந்தேன். அப்படிக் கில்லை. என்னைப்போல் துர்ப்பாக்கியத்தையுடையவளாகமற்றொருத்தியுமிருக்கின்றாளா? ஆனாலுமிது மெத்த மெத்த விசேஷந்தான். (வெளிப்படை) அப்பால் என்ன நடந்தது?

அர்ச். மேலென்னநடக்கும்? அவளுடைய நிர்மலமனமாளிகையில், நிலைநாட்டியிருக்கின்ற என்மீதுள்ள ஆசையானது எவ்வளவு விருத்தியடைந்துகொண்டு வருகின்றதோ; அதுபோல், அவளது பந்துக்களினுள்ளத்தில் எம்மீதுள்ள அடமும் விரோதமும் விருத்தியடைந்துகொண்டிருக்கின்றன. ஆகவே எம் மனோரதம் வீணாய்முடிந்தது பற்றி, விரக்தியடைந்திப்படித் தவவிரதம் பூண்டு யாத்திரையிற் செல்லலாயினோம்.

சுபத். (தன்னுள்) சரி. சரி. இவரது பூர்வ சரித்திரங்களெல்லாமே, எனது சரித்திரங்களாகவே ஒத்திருக்கின்றன. இதனால், அவரோ இவராக இருக்குமோ, என்ற சந்தேகமுண்டாகின்றது. ஆகிலுமிவரை அவர்தானென்றெப்படி நினைக்கின்றது? இன்னமும் அறிவோம். (வெளிப்படை)

வெண்பா.

என்னுடைச்ச ரித்திரங்க ளெப்படியோ அப்படியே
முன்னுளநம் வ்ருத்தாந்த முற்றினுமே—மன்னுவதாற்
பெற்றியுறு மிவ்வுலகில் நாமிரண்டு பேர்களுமே
உற்றஸம துக்கிகளா னோம்.

(வசனம்) ஆனால், தங்களுக்கும் எனக்கும் இப்போது சற்று பேதமுண்டு. அதாவது:—தாங்கள் பூர்வபுண்ணியத்தால், வைராக்கியமுற்றுத்துறவாச்சிரமத்தையடைந்து, துக்கசாந்திசெய்து கொண்டீர்கள். யானோ! அத்தகைய சகிக்க ஒண்ணாத அந்தச் சோகாக்கினியினாலே அப்படியே தபித்துக்கொண்டிருக்கின்றேன். இதுதான் பேதம்.

அர்ச். அஃதென்கொல்? சுபத்திரா!! உன் சரித்திரமும் என் சரித்திரமும், ஒன்றுபோலென்றனையே. அஃதெப்படி? அதையக் கடவாய்.

சுபத். ஸ்வாமிமகராஜ்!! அதைப்பற்றியதிகமாய்ச்சொல்வானேன்? தேவரீரது பூர்வாச்சிரமத்தின் மாதுலகன்னிகை யானெனவே வைத்துக்கொள்ளுங்கள். அங்ஙனமாயின், என் துக்கத்தைப் பற்றி மேற்சொல்லவேண்டாமே.

அர்ச். ஹ! ஹ! ஹ! நீயும் அத்தகைத்துற்தெசையிலானவள்கொல்? கஷ்டம். கஷ்டம். சரி. சரி. ஆனால், சுபத்திரா!!

வெண்பா.

என்னிமித்தஞ் சோகமுற்றி ருக்கின்ற மாதுலர்தங்
கன்னியைப்போ லுன்றன் கனதுக்கத்—தின்னலுக்குக்
காரணஸ்த னனவொரு காளையவன் யாவனதைத்
தீரமுட னெம்முனநீ செப்பு.

சுபத். (தன்னுள்) எந்த இஷ்ட வரத்தை இவரிடந்தெரிவித்துக் கொள்ள எண்ணியிருந்தேனோ; அதைப்பற்றி இவராலேயே தூண்டப்பெற்ற நற்சமயங்கிடைத்ததனால், இப்பொழுததைப் பற்றி நன்றாய்த்தெரிவித்துக்கொள்கின்றேன். (வெளிப்படை) கேட்டருளல்வேண்டும் முனிச்சிரேஷ்டரே!!

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

ஓங்குபுக ழுருக்கொண்ட தெனவெண் மேனி
ஒளிர்பாண்டு மகாராஜ ரோர்பி தாவாய்த்
தாங்கெழிற்கற் பணிதிகழுங் குந்தி தாயாய்ச்
சத்தியப ராக்ரமஞ்சேர் தன்ம பீமர்
பாங்குளமுற் சோதரரா யுரைக்கப் பெற்ற
பாக்கியவான் சிலாக்கியவான் பகர்காண் டீபர்
பூங்குழலார்க் கதிமோகர் விஜய நாமம்
பொருந்துமவ ரெவரந்தப் புண்ய வானே.

(வசனம்) அத்தகைய புண்யபுருடராகிய அவரே என் மனோரதவல்லவர். அவற்கேயிந்தச்சரீரத்தை அற்பணஞ்செய்திருக்கின்றேன். என் கழுத்தறுபட்டாலும், என் மனம் அவரைவிட்டுமாறாது.

ஆகையால், எனது மனோபீஷ்டம் சித்தியடையும்படி, தேவரீர் பரிபூர்ணகிருபைபாலித்தருளல்வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன்.

அர்ச். அதற்குயாதுதடை? சுபத்திரா! இத்தகைய நிச்சயபுத்தியுள்ளவர்க்கு ஈச்வரன் பூர்ணபலத்தைக்கொடுக்காமலிருக்க மாட்டாரென்பதை நிச்சயமாயறியக்கடவாய். (தன்னுள்) ஹா! ஹா! ஹா! இதில் என்னசந்தேகமிருக்கின்றது? இவளது மனோநிச்சயத்தையென்னென்று சொல்வேன்! ஆனாலிப்பொழுதே யானின்னானென்பதைத் தெரிவித்து, இவளை இங்கிருந்தே கிரகித்துக்கொள்ளட்டுமா? மேலென்ன உண்டாகின்றதோ? எல்லாம் பார்த்துக்கொள்வோம்.

சுபத். (தன்னுள்) இஃதென்னடீ! இவரையென்னென்று நினைக்கின்றது? இப்பொழுதென்மனோரதவல்லவர் தம் பூர்ணவடையாளத்தையுஞ் சொல்லிக்கேட்டுக்கொண்டதற்கு, ஈச்வரன் பலனளிப்பாரென்றுமட்டிலும், விடையளித்திருக்கின்றனர். ஆனால் இவரது மனோநிடத்தினையும், வரவரச்சரசமாய்ப் பேசுகின்ற வார்த்தைகளின் சாதுரியத்தையும், உதாரமான கண்டத்தொனியையும், திவ்ய சுந்தரமான இவரதுச்ருங்காரகாத்திரத்தையும், கமலம் போன்ற கண்களினாலென்னையே பார்க்கின்ற இவரது கோமளப்பார்வையையும், இவரது பூர்வ சரித்திரவிலாசத்தையும், எண்ணியெண்ணிப்பார்க்கும்பொழுது, அவரேஇவரென்று தோன்றுகின்றதானாலும், அப்படித்தானென்றெப்படி நிச்சயிக்கின்றது? மகான்களின் மகத்துவம் பலவிதமாய் விளங்கிக் கொண்டிருக்கும். அதை எளிதிலறியப்படுமா? ஆத்திரத்தினால், அவரே இவர், என்றேமாந்துவிடலாகாதே. ஆகிலும் இன்னமும் மேற்பார்த்தறியவேண்டும். (வெளிப்படை) ஸ்வாமி மகராஜ்!! வெகுநேரமாய் இவ்விடத்திற்றானே தாமதித்துக்கொண்டிருந்தால், எப்பொழுதந்தக்குகையை எனக்குக் காண்பிக்கப்போகின்றீர்கள்?

அர்ச். சரி. சரி. செல்வோம். செல்வோம்.

[என்றிருவரும் நடக்கின்றூர்கள்.]

அர்ச். ஓ! ஓ! மாதுசிரோன்மணி!! இதோ! இதுதான் அது. இந்தக்குகையிற்றான் யாம் கொஞ்சநாள்வரையானந்தமாய் வாசஞ்செய்திருந்தது.

சுபத். ஓ! ஓ! இதுதானு? நன்று. நன்று.

வெண்பா.

முக்கியப தார்த்தங்கள் வேண்டுவன முற்றுமுள
மிக்கமகிழ் மேவுறுநம் வீடென்னத்—தக்கதுவாய்த்
தொற்றுகின்ற விந்தத் துறவாசர் வீற்றிருந்த
சாற்றுமக்கு கையிதுவோ தான்.

அர்ச். ஆம். ஆம். இதுவேதான். ஆனல், இதில் முன்னம், பண்டபதார்த்தங்களொன்றுமில்லாமற்றானிருந்தது. யாம் வந்திருந்த பிறகுதான் பக்தஜனங்களாற் சகல சௌகரியங்களுமேற்பட்டிருக்கின்றன.

சுபத். ஸரி. ஸரி. நன்று நன்று. ஸ்வாமிமகராஜ்!! இதோ, என்ன! என்ன கண்காக்ஷியாயிருக்கின்றது!!

வெண்பா.

இலங்குமணி மண்டபமொன் றிக்குகைமுன் மிக்கத்
துலங்குகின்ற சோபையென்ன சொல்ல—நலந்திகழும்
நன்மணமே தேனும் நடந்ததுண்டோ இங்ஙனமத்
தன்மையமைந் துள்ளதிது தான்.

அர்ச். ஆம். ஆம். அஃது கல்யாணமண்டபம்போற்றான் தோன்றுகின்றது. ஆனல், கல்யாணம் நடந்திருக்குமோ, அல்லது, இனிமேல் நடக்கப்போகின்றதென்றுதான் அமைக்கப்பட்டிருக்குமோ; என்றுந்தோன்றுகின்றது.

சுபத். ஸ்வாமி மகராஜ்! இந்தக்குகைக்குட்சென்று சுற்றிப்பார்க்க வேண்டுமென்றாசையுண்டாகின்றது. உள்ளே போய்ப்பார்க்கலாமா? அங்கேதாவதுமிருகபிதிகளுண்டோ?

அர்ச். மிருகபயங்களிங்கேது ? தாராளமாய்ச்சென்று பார்த்துவரலாம். அப்படியே உள்ளேபோய்ப் பார்த்துவா !!

சுபத். யானுள்ளேசென்று பார்த்துவருமட்டும், தாங்களிம்மண்டபத்திலேயே இருந்துகொண்டிருக்கவேண்டும்.

அர்ச். சரி, சரி. அங்ஙனமேயாகட்டும். (என்றுட்கார்கின்றனன்)

[சுபத்திரை குகைக்குட் செல்கின்றனள்.]

அர்ச். (தன்னுள்) இவளைக்கிரகித்துக்கொள்வதற் கிவ்விடமே யோக்கியமானது. அதனுலிப்பொழுதே, யானின்றுனென்பதைநன்கு வெளிப்படுத்தி, இவளைக்கிரகித்துக்கொண் டிந்திரப்பிரஸ்தநகரத்திற்குச் செலகின்றதா ? அங்ஙனமாயின், ஒருக்கால் யாதவ விரர்கள் என்மேற் படையெடுத்துவந்தால், அதை நிவிர்த்தித்துகொள்ள யாதுபாயஞ்செய்கின்றது ? கைவசத்திற் காண்டீபமுமில்லையே.

(கோச்சகம்.)

என்னையவட் கின்றுனென் றின்னுருவெ ளிப்படுத்தி
மின்னவளைக் கொண்டுசென்று போவுதற்கிவ் வேளைநன்றே
துன்னிவரும் யாதவர்கள் சூழ்ந்திடினி ராயுதன்யான்
என்னசெய்வேன் வில்லொன் றிருந்தா லதற்கஞ்சேன்.

(சுபத்திரை குகைக்குள்ளிருந்து, ஒரு வஸ்திரமூட்டையும்,
வில்லும், பாணங்களும், கையிலேந்திக்கொண்டு
வெளியில் வருகின்றனள்.)

சுபத். ஸ்வாமி மகராஜ்!! இந்தக்குகைக்குள் ஒருபக்கத்தில், இம்மூட்டையும், இந்தவில்லுஞ்சரங்களுங்கிடைத்தன. இம்மூட்டையில், என்னயிருக்கின்றனவென் றவிழ்த்துப்பார்க்கவேண்டும்.

[என்றுசொல்லி, மூட்டையையும் தனுர்பாணங்களையும்,
அவர்முன்னே வைக்கின்றனள்.]

அர்ச். (தன்னுள்) பேஷ், பேஷ்.

வெண்பா.

இச்சமயந் தெய்வத்தி னேற்றவனு கூலமுறும்
நற்சமய மெற்குமிக நன்றுநன்று—மெச்சுபுகழ்
வில்லுஞ் சரங்களுமென் மெய்யிற் றரிக்கின்ற
நல்லுடையுங் கொண்டுவந்த னள்.

(வசனம்) முன்னமே யான் ஸன்யாஸிவேடந் தரிக்கின்றபொழுது, இவைகளையெல்லாம் இங்கொருபக்கத்திற் போட்டிருந்ததென் ஞாபகத்திலில்லாமலிருந்தது. தக்கசமயத்திலென் நாயகியின் கையிலேயே கிடைத்ததனால், அதுவே ஓர் நன்னிமித்தமாக விருக்கின்றது. இனி யென்ன கவலை? பயமினியுதுயேது? யார்க்குமினி அஞ்சேன். (வெளிப்படை) சுபத்திரா !! இந்த வஸ்துக்கள் யாராவதிராஜகுமாரர்களின் ஸாமான்களாக இருக்கலாம்.

சுபத். (மூட்டையவிழ்த்து, அதிலுள்ள வஸ்திராபரணங்களை யெல்லாம் நோக்கி) ஸ்வாமி மகராஜ்! இந்த வஸ்திரபூடணங்களெல்லாம் என் பார்வைக்கு, முன்பார்த்துப் பரிசயமிருப்பனபோல் தோன்றுகின்றன. ஆனால், எச்சமயம் பார்த்திருப்பேனென்பது நிச்சயமாய்ச்சொல்ல வேலாது.

அர்ச் (புன்சிரிப்புடன்) அப்படியானால், இவைகள் அவ் வர்ச்சுனராஜனுடையதாகவே யிருந்தாலுமிருக்குமோ? ஏனெனில்? அவன் வேடத்தைமாற்றித் தீர்த்தயாத்திரையிற் சென்றிருப்பதாய்க் கேள்வியுண்டு. அதனாற்றான்.

சுபத். (தன்னுள்) என்னடி! எல்லாம் வெகு விநோதங்களாகவே யிருக்கின்றன. இப்பொழுது அவரே இவரொன்பதற்கையமின்று. ஏதேது? இவருடைய வார்த்தைகளெல்லாம் மிகச் சாதுர்யமாகவேயிருக்கின்றன. வெகு சம்பிரதாயமாய் என் மனோரதவல்லவர் தம் பேரைக்குறித்துச்சொல்லி, இவைகள் அவருடையனவாகவே யிருக்குமோ, என்று வெகு லாளனையாகச் சொல்லியவார்த்தையைக் கேட்கின்றபொழுதும், இடையிடையே மத்தகயத்தை வயப்படுத்த ஈட்டிகளாற் குத்துவன

போன்று இவரது கண்களிரண்டும் என்றனங்களின்மேற் பளிச்சுப்பளிச்சென்று, வந்துபாய்ந்து பதிந்தனபோலும். அன்றியும், கம்பீரமான இவரது உல்லாஸகமனத்தையும், மனோகரஸௌந்தராக்ருதியையும், எண்ணிப்பார்த்தால், "இவரே அவர்," என்பதற்கியாது சந்தேகம்? இவரது பூர்வசரித்திர விலாசங்களைக் கேட்டதுமுதலே, இவரிடமெனக்கடங்காத ஆசையுண்டாகின்றது. அதனால், அந்த மர்மத்தை மறைத்திருப்பது இவ்யதிவேடமொன்றுதானே, அதனைச்சோதித்துத்தீரவேண்டுவதவசியம். அதற்குபாயமிவ்விதஞ்செய்கின்றேன். (வெளிப்படை)

வெண்பா.

சித்திதமெ லாமுதவுந் தெய்வப் பெருந்தகையீர்!
எந்தன்மனத் திப்பொழுதோ ரிச்சையுண்டு—பந்தவினை
தீர்த்தவரே இந்தச் சிறியாள் பிரார்த்தனையைப்
பூர்த்திசெய்வ துந்தம் பொறுப்பு.

அர்ச். ஆ! ஆ! அதற்கியாது தடை?

வெண்பா.

நின்மனதிற் கொண்ட நினைப்பெல்லாம் பூர்த்திசெய்து
நன்மை யளிப்பதற்கே நாம்வந்தோம்—தன்மமிகும்
ஆசார மேவுமுனக் காம்வரங்க ளத்தனையுங்
கூசாம னீகேட்டுக் கொள்.

சுபத். (கையஞ்சலி செய்துகொண்டு)

ஆசிரிய விருத்தம்.

இப்பிறவி யிற்பெறும் இஷ்டகா மியமெலாம்
எற்களிக் கின்ற வீசன்
என்றுமை நினைத்தடிமை பூண்டிருக் கின்றனன்
யானேழை இவ்வு லகினிற்
டம்பலவி தங்களாய் விக்ரகா ராதனம்
பண்ணிடும் பக்த ரெல்லாம்
பண்புறும் வஸ்திரா பரணகந் தாதியாற்
பரிவுட னலங்க ரித்துப்

பொற்புறுமு பாசனு மூர்த்திவடி வந்தனைப்
போற்றிடுந் தன்மை போலப்
புகழ்மேவு மிவ்வுடைப் பூடணு திகளினாற்
புண்யநுந் திரு மேனியை
நட்புட னலங்கரித் தற்புதக் காக்ஷியை
நான்காண வாவல் கொண்டேன்
நன்குள மதித்திதனை யென்பொருட் டன்புநீ
நாட்டுவீர் கூட்டு வீரே.

அர்ச். (தன்னுள்) (அத்தியானந்தபரிதனுகி) அடடா! ஹோ! ஹோ!! எனது பிராரப்தமே!! உனது பெருமைதானென்ன? எவ்வளவுக்கெவ்வளவு துக்கத்தை எனக்குக்கொடுத்தனையோ, அவ்வளவுக்கும் மேலான பேரானந்தத்தை இப்பொழுதெனக்குக் கொடுத்தனை. ஹா! ஹா! ஹா! சந்தோஷம். சந்தோஷம். நிரம்ப சந்தோஷம். (வெளிப்படை) ஸரி. ஸரி. பக்திபாசத்திற்கட்டுண்டயாம்மாற்றஞ் சொல்வதெங்ஙனம்? எப்படியாவதுனதபீஷ்டத்திற்கிணங்கவேண்டுவதவசியந்தானே. ஆகையால், உனதிச்சைபோலாகட்டும். ஆனால், அதிகநேரங்கூடாது. ஒரு நாழிகைமட்டிலும், உனக்காக இவைகளைத்தரித்துக்கொள்கின்றேம்.

சுபத். (அரைவேஷ்டியைக் கையிலெடுத்து) இதைத்தரித்துக்கொள்வீர்களாக.

அர்ச். (அதைவாங்கி, அரைக்கச்சையிறுக்கிக்கொண்டு, வஸ்திரதாரணஞ் செய்கின்றனன்.)

சுபத். மற்றவையாவையும் யானே அலங்கரிக்கின்றேன்.

(என்று சொல்லி, ஸகல வஸ்திராபரணங்களாலும் தானே அலங்கரித்து, அர்ச்சுனனுகவேவிளங்குகின்ற பூர்ணவடிவத்தையும் பார்த்து, ஆச்சரியமும் இலச்சையும் அடைந்தவளாய், ஒருபக்கந்தன்முகத்தைத்திருப்பிக்கொண்டு,)

(தன்னுள்) இதேதடா! சற்றுமுன் சாமியாராகயிருந்தவர் இப்பொழுதென் பிராணநாதராகவே விளங்குகின்றனர். ஆனால், அவர்தானே இவர்? ஆ! ஆ!! ஆச்சரியம்! ஆச்சரியம்!!

கோச்சகம்.

எந்தனித யாலயத்தி லங்குகின்ற திவ்வியநற்
சுந்தரசொ ரூபமிதே தோற்றுகின்ற தல்லாமல்
வந்தவெளித் தோற்றமன்று மன்பிராண வல்லவர்தம்
இந்தவடி வத்திலென்கண் ணிரண்டும் பதிந்தனவே.

அன்றியும், கோச்சகம்.

சந்ததமென் னுளைசத் தருநிழலிற் சார்ந்தெனது
சிந்தைகுடி கொண்டிருந்த திவ்வியசொ ரூபரெனும்
அந்தர ரேயிவரென் றந்தரங்க மாய்த்திகழுன்
சொந்தமன மேசாட்சி சொல்லுகின்ற திப்பொழுதே.

(வசனம்.) (தன்னைக்குறித்து) அடீ! பிரமைபிடித்தவளே!! சுபத்திரா!! ஒருவரைப்போல் ஒருவரிருப்பதை உலகத்தில் பார்த்த தில்லையா? கேவலம் ரூபசாதிரிசியத்தினு லேமாந்துபோகாதே.

அர்ச். ஆ! ஆ!! சுபத்திரா!! இதுவென்கொல்! நீ ஒருபக்கமாய் முகத்தைத் திருப்பிக்கொண்டு ஏன் சும்மா நின்றுகொண் டிருக்கின்றாய்?

வெண்பா.

ஆடைகளெ லாந்தரிப்பித் தாச்சுதுகொல் நின்மனம்போற்
பூடணங்கள் யாவும் பொருந்தினையா?—வேடம்
ஒளித்தெதென வெந்தம் உருவையலங் கரித்துக்
களித்தனைகொல் கண்ணாரக் கண்டு.

சுபத். (முகத்தை நேராகத்திருப்பிக்கொண்டு) ஆம். ஆம். எல்லா மாச்சுது. ஆனால், மேல்தரிக்கவேண்டிய உத்தரீயமட்டும் இதிலில்லை. அது ஒன்று குறையிருக்கின்றது.

அர்ச். ஓ! ஓ! அஃதில்லாதிருந்தால், முந்திய காஷாய உத்தரீயத் தையே தரித்துக்கொள்கின்றது.

சுபத். (சற்று யோசித்து) (தன்னுள்) சரி. சரி. இப்பொழுது ஞாப கம்வந்தது. அந்தச் சால்வை உத்தரீயம் கைவசத்திலிருக்

கின்றதல்லவா? அதையே இப்பொழுதிவருக்குத் தரிப்பித்தால், இவரேயவராகவிருந்தால், அதனடையாளத்தை இவராலிப்பொழுது சொல்லநேரிடும். அதனால், அப்படிச் செய்து பார்ப்போம். (வெளிப்படை) வேண்டாம். வேண்டாம். நாம் வரும்பொழுது கொண்டுவந்த சால்வையொன்றிருக்கின்றதே. அதையே தருகின்றேன்.

[என்றுசொல்லி, அந்தச்சால்வையை எடுத்துக் கையிற் கொடுத்தனள்]

அர்ச். (அதை வாங்கிவிரித் தானந்தத்துடன்) அடே! அடே! இஃதென்கொல்! ஆச்சரியம்!!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

முந்தியவெம் ஆச்ரமத்தின் மாதுலகன் னிகையவளால்
மொய்ம்பி னோடு
சந்தமுற வெம்முடைப்பேர் விலாசமெலா நன்கமைத்துச்
சரிகை யாலே
விந்தையதாய்ச் சித்திரங்கள் பலவியற்றி யெமக்குமிக
விருப்பத் தோடு
தந்திடப்பெற் றெம்மிடத்தே தழைத்திருந்த சால்வையிது
தானே யன்றோ?

(வசனம்) (புன்சிரிப்புடன்) அத்தகைய இந்தச் சால்வையானது இப்பெண்மணியினிடத்திலெப்படிவந்தது? அதுதான் தெரியவில்லை.

சுபத். (இலச்சையுடன், தலைவணங்கிக்கொண்டு) (அடங்காதவானந்தத்துடன்) (தன்னுள்) "அவர்தானிவர்" "அவர்தானிவர்" என்றனேகந்தடவையறிந்து கொண்டிருந்தாலும், இந்தச்சஞ்சலபுத்திக்குச் சந்தேகம்பிறந்துகொண்டேயிருந்தது. இனி எள்ளத்தனை சந்தேகங்கொள்ளத் தேவையில்லை. அது நிச்சயந்தான். (வெளிப்படை) "அவளே இவளாதலினால், அதுவுமிங்குவந்திருக்கும்."

அர்ச். (அத்தியானந்தபரிதனாய், சுபத்திரையினருகிற்போய், அவள் தோள்மேற் கைபோட்டுக்கொண்டு) ஆ! ஆ! சுந்தரீ!! நீயென்ன சொல்கின்றனை? நீ சொல்வதொன்றுந்தோன்றவில்லை.

சுபத். (அர்ச்சுனன் கையைத் தன் கரத்தாற்றள்ளி) இஃதென்னடா சமத்காரம்? இத்தனைநாள் சம்சயமே வைத்திருந்ததென்னவோ? எல்லாமிருக்கட்டும்.

அர்ச். அதுசரிதான். நீ எமக்கு அத்தியந்தப்பிரியமான ஸால்வையை இப்பொழுதருமையாய்க் கொடுத்ததற்காக, உனக்கு மேதாவது சம்மானமளிக்கின்றேம். இந்தா இரத்தினுபரணம். இதை வாங்கித்தரித்துக்கொள்.

[என்று தன்னிடமிருந்த இரத்தினமாலிகையை யெடுத்து அவள் கண்டத்திற் போடுகின்றனன்.]

சுபத். (மாலையை உற்றுநோக்கி) இதென்னடா!

வெண்பா.

என்ப்ராண வல்லபரா லென்பாற் கருணைமிகுந்
தன்பா லளித்திருந்த தாமிதன்றோ?—முன்பேதான்
அப்படிக நற்பதக்க மார்ந்த மணிமாலை
எப்படிவந் துற்றதிவர் பால்?

[என்று சொல்லி முகத்தைக் கவிழ்த்திக்கொண்டு சிரிக்கின்றனள்.]

அர்ச். (ஆனந்த பரிதனாய்) "அவரே இவரானதினால் அதுவும் அப்படி வந்திருக்கும்.

[என்றுசொல்லிச் சுபத்திரையின் கரத்தைப் பிடித்துக்கொண்டு]

அடீ! என் பிராணஸஞ்சீவீ!! அடீ! சுபத்திராமணீ!!

எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஐந்துபூ தங்க ளானதெய் வீக
ஆதிதத் துவங்களே சாக்ஷி
இந்தவே ளையினிற் சுபத்திரை யுன்னை
என்பெருந் தன்மகா மத்திற்
சந்தமார்ந் தொளிர்மெய்த் தாரமாய் வரித்துன்
தளிர்க்கரம் பற்றினேன் விஜயன்
சொந்தநீ எனக்கு யானுனக் குற்ற
துணையிது சத்தியஞ் சொன்னேன்.

(வசனம்.) ஆ! என் பிராணகாந்தாமணி!! இனிச் சந்தேகங்களை யெல்லாம் விட்டுவிடு. இதுவே சமயம். இதுவே சமயம். இப்பொழுதுனது காடாலிங்கன சுகத்தை எனக்குக் கொடு.

[என்றுசொல்லி, ஆலிங்கனஞ் செய்துகொள்கின்றனன்.]

சுபத். (அத்தியானந்தபரிதையாய், அர்ச்சுனனுக்காலிங்கனசுகத்தைக்கொடுத்து, அவனது மார்பிற் சாய்ந்துகொண்டு) ஹா! பிராணகாந்தா!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

எத்தனையோ பலநாளா யெனக்கதிக துக்கமுறு
மின்னல் தந்தீர்
மெத்தநைந்த வேளைதனி னிந்தையுறும் மதிவேட
மேவிட் டேனுஞ்
சித்தமதி லிரக்கமுட னென்மீது கருணையுடன்
றேறி வந்தே
அத்தனைக்கு மேலாய ஆனந்தப் பரமசுக
மளித்தாட் கொண்டீர்.

அர்ச். (சுபத்திரையின் நாடியைத் தொட்டுக்கொண்டு) ஆ! ஆ!! என் காதற்குரிய மாதுசிரோன்மணி! எல்லாம் வல்ல ஈசன் செயலேயல்லாமல், எதுவு மாவதுண்டோ? எது எது எப்படியாகவேண்டுமோ, அது அது அப்படியே ஆய்விட்டது. மத்தியகாலத்தில் விபரீதத்தால் வேறுபட்டுச் சின்னபின்னப் பட்டிருந்ததெல்லாம், தக்கசமயத்தில் இரதியும் மதனும்போ லிணக்கமாய்ச் சேர்த்துப் பொருத்திவைத்த நம் ஊழின் பெருமை உரைக்கற்பாலதோ? ஆச்சரியம்! ஆச்சரியம்!!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

நாட்டுறுநம் மூழ்வினையே பலநாளாய் நமைப்பிரித்து
நலிவே நல்கி
எட்டிலடங் காததுய ரெத்தனையோ எய்துவித்தெப்
படியோ இங்கே

கூட்டிவைத்த ததன்பெருமை யார்சொல்ல வல்லவர்காண்
கொழுந்தி தன்னிற்
காட்டமுடன் காய்ச்சிரும்பி னீர்விட்ட தன்மையெனக்
கலந்தொன் றானோம்.

(வசனம்.) அடீ ! என் ஆருயிர்க்காதலீ ! அத்யாச்சரியகரமான நம்மிருவர்களினிந்தச் சரித்திரமானது, பின்னும் கவிவாணர்களால் நாடககற்பனைசெய்து நடிக்க வெகு யோக்யமாயிருக்குமல்லவா ?

சுபத். ஆம். ஆம். அஃதிருக்கட்டும். என்பிராணவல்லபா! இந்தவர்த்தமானங்களைப்பற்றி எண்ணியெண்ணிப் பார்த்தாலும், இவ்வித ஒற்றுமையாய் நடந்தேறிய தெய்விதமென்றென் புத்திக்கொன்றுந்தென்படவில்லை. இதோ இச்சால்வை தங்களிடமல்லவாயிருந்தது ? அஃதென்னிடம் எப்படி வந்திருந்தது ? என் கண்டத்திலணிந்திருக்கின்ற இவ்விரத்தினமாலிகை தங்களிடம் எப்படி வந்திருந்தது ? இந்தமர்மங்களொன்றுந் தெரியவில்லை.

அர்ச். அடீ ! மனோகரீ ! இதைப்பற்றி எனக்குத் தெரிந்ததை உனக்குச் சொல்லுகிறேன்.

(என்று சொல்லி, அவள் காதிலேதேதோவோதுகின்றனன்.)

சுபத். ஆ ! சரி. சரி. என் நினைவிற் றோன்றுகின்றது.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

நீருரைத்த வடையாளத் துடனுமையான் கண்டதுண்டக்
கீள்வ னத்தே
தாருருத்துந் திருவுருவச் சாடைதெரிந் தாலுமந்தச்
சமயந் தன்னிற்
கூரிரக்த முகத்தினராய்த் திகழ்ந்திட்டீர் யானுமிகக்
கொடிய சோகப்
பேரிருட்பட் டிருந்ததனு லந்நாளே அடைந்துகொள்ளாப்
பேதை யானேன்.

(வசனம்.) அஃதெல்லாஞ் சரிதான். பிராணேச்வரா!! என்னையவ்வனத்திற்குக் கொண்டுவந்ததோ ராக்கனென்றீர்களே. அவன்

யாராயிருக்கலாம்? திரும்பவுமியான் கன்னியாமாடத்தில் வந்திருந்த தெவ்வாறோ? இதனைத் தெரிந்துகொள்ளும் வழியெப்படி?

(அப்பால், இராக்கதன் பிரவேசிக்கின்றனன்.)

இராக். (கையஞ்சலிசெய்துகொண்டு)

மகராஜ்!! உள்ளபடி நடந்ததுரைக்கின்றேன். கேட்டருளல்வேண்டும்.

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

அண்ணல்பல ராமர்சு பத்திரையை முன்னம்
அராவுயர்த்த பதாகையற்கே யளிப்ப தாகப்
பண்ணியதோ ரெத்தனத்தி லவளை யந்தப்
பதகனுக்காட் படுத்திடப்ப டாதென் றேஉள்
ளெண்ணமுற்றம் பூர்த்தசம யத்திற் பேத
மியற்றியவ டனைப்பிரிக்க யிதுசெய் யென்னக்
கண்ணபிரான் ரகசியத்தி லுரைத்த வண்ணங்
கானகத்தில் யானவளைக் கடத்தி னேனே.

அதற்குமேலுங் கேட்கவேண்டும். மகராஜ்!!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

காட்டினடு வேமிகவுங் களைப்புற்றி ருந்தவவள்
கண்டத் தாரம்
பூட்டியிருந் ததைக்கழற்றிக் கடிதமுறும் பைக்குளதைப்
போட்டுக் கட்டி
கோட்டமுறுங் கிருஷ்ணபிரா னுரைப்படியங் கெறிந்துவிட்டோர்
கொடிக்கு ளேனே
சேட்டையிலா திருந்தவளைத் திரும்பவுமம் மாடமதிற்
சேர்த்திட் டேனல்.

மகராஜ்! என்னைப்பற்றி யாரோ, எவரோ வெனத் திகைக்க வேண்டாம். யான்,

### வெண்பா.

வெற்றிமிகு மற்புயத்தர் விக்ரமசிங் கத்தைநிகர்
பெற்றியுள ராஜபல பீமருக்கே—உற்றமகன்
யாரோ எனத்திகைத்தி டாதீரென் பேரதனைப்
பாரோர் கடோற்கசனென் பார்.

(வசனம்.) ஆகவே எனது சிறியபிதாவாகிய தங்கள் திவ்யசரணாரவிந்தங்களில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கின்றேன். எனது சிற்றன்னாய்! உனதடிபணிகின்றேன். இனிமனத்தையந் தனையொழித்திடுவீர்.

(என்று சொல்லி, இருவரையும் நமஸ்கரிக்கின்றனன்.)

அர்ச். அடே! அடே! எனதுபீம அண்ணாவினுடைய புத்திரனா கடோற்கசன்? அடா பாலகா! என்னை இறுகத்தழுவிக்கொள்ளடா. (என்று அவனைத் தழுவிக்கொண்டு) யான் அந்தக்காலத்தில், உன்னை இன்னானென்றறியாமல் உன் சரீரத்தைப் புண்படுத்தி இரக்தஞ்சிந்த அடித்துவிட்டேனல்லவா? அது இப்பொழு தென்மனத்தை வருத்துகின்றது.

கடோ. ஆ! ஆ! சிற்றப்பா!! அதனாலெனக்கொரு வருத்தமுமில்லை. அதுவே யெனக்கானந்தமாக ஆய்விட்டது. ஆனால், அந்நடபடிக்கைகளெல்லாம் அதிரகசியம், யாரும் அறியப்படாது, என்று கிருஷ்ணபிரான் ஆக்ஞை செய்திருந்ததால், அப்பொழுது தங்களுக்கு நானின்னானென்பதைத் தெரிவிக்கயிடமில்லாமற்போய்விட்டது.

அர்ச். நன்று. நன்று. பாலகா!! நீ எனது காரியத்தில் இவ்வளவு சகாயஞ்செய்ததைப்பற்றி, உன் பிதா பீமராஜருக்கு அதிகத் திருப்தியுண்டாகும்.

சுபத். ஓ! ஓ! என் விஷயத்திலிவ்வளவு பிரீதியுடன் எனது கண்ணபிரான் வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்ததைச் சற்று மறியாமற் போனேனே. அடடா!!

### வெண்பா.

அந்தரங்கத் தெவ்வளவோ அன்புளரா யென்விஷயத்
திந்தவித மெல்லா மிசைத்திருக்க—அந்திவணத்
தண்ணறனை யானே யறியா துரைத்தவன்சொற்
புண்ணியற்று இன்றதென் னுட் போய்.

[மறுபடி அர்ச்சுனனைத் தழுவிக்கொண்டு]

ஆ!! என் பிராணகாந்தா!! இஃதெல்லாம் நிற்க.

### வெண்பா.

எத்தனையோ யுக்தியுள தென்னைநீ ரெய்துதற்கே
அத்தனையுந் தூரத் தகற்றிவிட்டு—மெத்தவுநீர்
பதியா ருலகர் பரிகசிப்ப இந்த
யதிவேடம் பூண்டுவந்த தேன்?

(வசனம்) ஏன் அப்படிச்செய்தீர்கள்? அதையெனக்குச் சொல்ல வேண்டும்.

அர்ச். அப்படிச்செய்தது நானாகச் செய்யவில்லை. எல்லாம் உன் சூசனைப்படியேதான்.

சுபத். இதுவென்கொல் என் சூசனைப்படியென்று சொல்கின்றீர்கள்? இந்தச்சன்யாசிவேடத்தைத் தரிக்கும்படி நான் சொன்னேனா?

அர்ச். ஆம். ஆம். அதற்கும் ஸந்தேகமா? அதுவும் வாசாமாத்திரமன்று. இதோ, நீ உன் கைப்பட எழுதியிருக்கிற பத்திரிகையைக் காண்பிக்கிறேன். இந்தக்கடோற்கசன் உன் கழுத்திலிருந்த மாலையைக் கழற்றி, எந்தப்பைக்குள்வைத்துக் கட்டி, எவ்விடத்தில் வைத்திருந்ததாகச் சொன்னானோ; அந்தப்பைக்குட்டான் அப்பத்திரிகையுமிருந்தது. பார்!!

[என்று சொல்லிப் பத்திரிகையை யெடுத்து, அவள்கையிற் கொடுக்கின்றனன்.]

சுபத். (பத்திரிகையை வாங்கிப்படித்துப் பார்த்து, வியப்புடன்) என்ன ஆச்சரியமாயிருக்கின்றது? இந்த விசித்திரமானது என்

ஸ்வஹஸ்தலிகிதம் போலவே இருக்கின்றது. ஆனால், இதிலடங்கிய சமாசாரங்களோ, என் மனக்கொள்கைகளைப்படியோ, அப்படியே யமைந்துள்ளன. ஆகவே இப்படி யார் எழுதிவிட்டது? யான் எழுதியதல்ல.

[திடீரென்று ஸ்ரீ கிருஷ்ணன் பிரவேசிக்கின்றனர்.]

கிருஷ். அடி நங்கைக்கரசியென் றங்காய்!!

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

விசயனுக்கே யுனைமணஞ்செய் விப்பதற்கென் னுளம்விரும்ப
மிகுதி யாலவ்
விஷயமது நன்கமைய யான்முயற்சி செய்வதிலவ்
வேளைக் கேற்ப
நகையொடுநின் கரலிகிதம் போலுனது பேரதனை
நாட்டி நானே
இசைபெறுமந் நிருபமதை எழுதிவிட்டேன் நின்மனம்போ
லிசைப்ப தற்கே.

(வசனம்) என்ன? யான் சொன்னது தெரிந்ததா?

(சுபத்திரை இலச்சையுடன், அர்ச்சுனனுக்குப் பின்புறத்தில் மறைந்து நிற்கின்றனள்.)

கிருஷ். (அர்ச்சுனனைப்பார்த்து.)

வெண்பா.

மங்கை சுபத்திரைக்கு வாய்த்த மணவாளா!!
எங்களத்தை யின்குமரா! ஏசூரா!—மங்களமே
மெத்தவுனக் குண்டாகும் வில்விஜய வென்னருமை
மித்திரசி ரோரத்ன மே!

(இதுவுமது) வெண்பா.

அரும்பிரயா சத்தி லடைந்த பொருண்மேற்
பெரும்பிரியம் வைத்துமிகப் பேணல்—உரிமையதே

இத்தனைவல் லெத்தனத்தி லெங்க ளுயிர்ப்பிறப்பை
பத்தினியாய்க் கொண்டனையன் பால்.

அர்ச். (ஆனந்தபரிதனுய்க் கையஞ்சலித்துக்கொண்டு.)

வெண்பா.

என்பிழைபொ றுத்தருணீ இவ்வளவென் மீதுள்ளத்
தன்புற் றிருப்ப தறியாமல்—வம்பாக
நிந்தித்தே னுன்னைமிக நீலமுகி லேயெனையாள்
வந்தித்தே னிப்பொழுது வந்து.

(என்றுசொல்லி, கிருஷ்ணார்ச்சுனர் இருவரும் கைகோர்த்துப் பரஸ்பரம் ஆலிங்கனஞ் செய்துகொள்கின்றனர்.)

சுபத். (கிருஷ்ணனை நமஸ்கரித்து, ஆனந்தபாஷ்பம் அருவிபோற் சொரிய தொண்டை தத்தலிட்டு)

கோச்சகம்.

பெண்ணானவர்க்குரிய பேதமையா லெத்தனையோ
எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணித் துயரடைந்தேன்
தண்ணாரும் பைந்துளபத் தாராரும் பொற்புயத்தென்
அண்ணா வுமதருளா லானந்தம் பெற்றேனே.

(வசனம்) அண்ணா! தங்கள் இப்பேருதவிக் கெதுதான் நிகராகும்?

கிருஷ். (சுபத்திரையை யருகிலழைத்துக் கண்ணைத்துடைத்து, முது கைத்தடவி) அடி! என் அருமைத்தங்காய்! இதற்கென்ன உப சாரஞ் சொல்கின்றனை?

வெண்பா.

அன்னியர்க்குச் செய்தக்கா லஃதோ ருதவியதாம்
இந்நிலத்தில் யான்முனவன் நீ இளையள்—மின்னரசே!
உன்னுடைய காரியமென் றொன்றுளதோ? எல்லாமே
என்னுடைய காரியந்தா னே.

என்ன தெரிந்ததா?

சுபத். அண்ணா! எல்லாம் சரிதான்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

இன்னுமொரு பெருங்கவலை யென்னுளத்தே மாமலைபோ
லெழுப்பு கின்ற
தன்னபெரு விக்கினமெவ் வாறகற்று வீர்கொலதை
யறியே னண்ணு !!
என்னெனினம் முன்னவர்தம் மனக்கோண றனைத்திருத்தி
இந்தக் கார்யந்
தன்னிலவர் கோபமுறா தெப்படிச்ச மாதானஞ்
சாற்று வீரோ ?

கிருஷ். அடி தங்காய் ! அதுவிஷயமாய்க் கவலைப்படவேண்டாம். யான் சொல்கின்றபடி நீங்கள் நடக்கவேண்டும்.

(கடோற்கசனைக்குறித்து) அடா ! கடோற்கசா !! நீ இவ்வர்ச்சுனருடைய யதிவேட உடைகளை யெல்லாம் வாரிச்சுற்றி, ஓர்மூட்டையாய்க்கட்டி, இம்மலையின்கீ ழடிவாரத்திலெடுத்தெறிந்து விட்டு, இப்பொழுதே உனது மாயாதிரஸ்கரிணீமகத்துவத்தா லுன்னை மறைத்துக்கொண்டு, இவர்களுடைய பின்பக்கச்சார்பாயிருந்து வரவேண்டும். எதாவது அசந்தர்ப்பங்கள் ஸம்பவிக்கிறதாயிருந்தால், அப்பொழுது யான் சொல்கிறபடி செய்யக்கடவாய். ஜாக்கிரதை!

கடோ. பகவன் ! கட்டளையிட்டருளியபடியே காத்திருக்கின்றேன்.

(என்று தண்டகாஷாய முதலிய யதிவேஷஸாமான்களையெல்லாம், வாரியெடுத்துக்கட்டிக் கீழே எறிகின்றனன்.)

கிருஷ். அர்ச்சுனா ! நீ முன்வந்து தாமசித்திருந்த இடத்திற்கே, சுபத்திராஸமேதனாகவே மெள்ளமெள்ள வந்துசேரு. யான் முன்னதாகவே அங்குசென்றிருக்கின்றேன். (என்றுசொல்லிச்சென்றனர்)

அர்ச். ஆ ! என் ஆசைமனோகரீ ! நிரம்பசந்தோஷம். நிரம்பசந்தோஷம். இனி இங்கென்னதாமதம் ? செல்வோமா ?

வெண்பா.

புன்மார்க்க மென்னும்பேர் பூண்டாலும் வந்தவழி
நன்மார்க்க மாகுமவண் நாம்செல்வோம்—கொன்மார்க்கப்

பொங்குசினக் கோளரிமுன் போய்க்காண்போ மென்னென்ன
அங்குநடக் கின்றதறி வாம்.

சுபத். சரி. சரி. அப்படியே செல்வோம்.

(என்று இருவரும் எழுந்து நடக்கின்றார்கள்.)

சுபத். ஆ! பிராணேச்வரா!! எல்லாம் சரிதான்.

வெண்பா.

நஞ்சரிதந் தஞ்செவியில் நாடும்போ தேயவர்தம்
வெஞ்சினத்தீப் பற்றிமிக மேவிடில்யாம்—என்செய்வோம்?
ஆர்த்தெழுமக் காலருத்ர ராமெனவே தோற்றுமெங்கள்
மூத்தபல ராமசமு கம்.

(வசனம்.) அதிலென்ன தீங்கு விளைகின்றதோ, என்றஞ்சுகின்ற தென் னெஞ்சம்.

அர்ச். (அலக்ஷியத்துடன்) அடீ! எதற்காகப் பயப்படவேண்டும்? இனி எனக்கவரோர் திரணமென்றறியக் கடவாய். அவன் காலருத்திரன்போற் றோன்றுவானென்றல்லவா சொல்கின்றாய்? எனது கையிற்றனுர் பாணம் இருக்கின்றதனால், பிரத்தியக்ஷ காலகாலனுக்கும் யான் அஞ்சுகின்றவனல்லன். அதனால், அத்தகைய பயத்தை முற்றிலும் விட்டுவிடு.

(என்றிருவரும் நடக்கின்றனர்.)

(——) (திரைக்குள்) அடே! அடே! ஓடு! ஓடு! பிடி! பிடி! அடி. அடி.

(எனக் களகளசப்தம் பிறந்தது.)

(அப்பால், கையிற்கதையுடன் உக்கிர பலராமர் பிரவேசிக்கின்றனர்.)

பலரா. (தன்னுள்) இது வென்கொல் காரணமின்றிக் களகளசப்தங் காதைத்துளைத்து விட்டது? (வெளிப்படை) யார் அங்கே?

(கும்பிட்டகையுடன் லம்பகூர்ச்சனென்ற சேவகன் விரைவிற் பிரவேசித்து.)

லம்பகூர்ச்சன். ஓ! ஓ! இராஜ ராஜ மஹாராஜரே!!

வெண்பா.

*துக்கசமா சாரமொன்று சொல்லாமற் றீராது

பலரா. (பரபரப்புடன்) அடா! அஃதென்னடா? அது என்ன துக்க சமாசாரம்?

லம். மகராஜ்! (முன்வெண்பாத்தொடர்.)

*பக்கமுற்றி ருந்தநஞ்சு பத்திரையை—மிக்கமிக்க
மந்திரஞ்செய் தாரோ மயக்கி யபகரித்தான்
தந்திரவச் சன்யாசி தான்.

பலரா. (ஹுங்காரத்துடன்) எப்படி? அந்தச் சன்யாசியா சுபத்திரையை அபகரித்தனன்?

லம். மஹராஜ்!!

விருத்தம்.

இந்தப்பெரியநிந்தைதனை என்னென்றுரைப்பேனெழிலாருஞ்
சந்தத்துவரை நாயகர்தந் தங்கைசுபத்திராமணியைச்
சொந்தத்திறத்துடாய்ப்பீகச்சோரத்தனமாயபகரித்தான்
அந்தத்துறவியானவனே அகலக்கொண்டுபோனவனே.

பலரா. [கோபாவேசத்துடன், ஹுங்கார ஆரவாரத்துடன், திடமொன்று குதித்து, பூமியதிரநடந்து அவனருகேயோடி] அடே! அடே! மஹா பாபீ!!

அகவல்.

மானமு மில்லையோ மரம்போல் வளர்ந்தாய்
ஆனவே வகளு? அவியனே யானாய்
அடடா பாபீ! அடடா துரோகீ!
கடியா வுன்னைத் தான்வதைத் தாலென்?
உடைவாள் கொண்ட வோரா யிரம்பேர்
படைவீ ரரொடு படுத்துறங் கினைகொல்?
செத்துக் கிடந்தையோ தீப்பிடித் தவிந்திடு
மித்தனை பொழுதுநீ என்னடா செய்தனை?

புன்சொற் பிறக்கும் பொழுதே நீயும்
உன்சொற் குட்படு வோரா யிரவருஞ்
சுற்றி வளைந்து சூக்ஷித் திடாம
லெற்றிற் கிருந்தீர் இருயிரு வொருங்கே
கோரபீ ரங்கியாற் கொளுத்திடு கின்றனன்
காரிருட் கமழுடற் கண்ணனெங் கேகினன்?
ஆரடா அங்ஙனம் ஆக்ரம சிங்கநேர்
போர்புரி வீரர் போற்றத் திகழ்ந்ததும்
மண்டலங் கிழிக்கும் வான்றுர கம்பல
கொண்டதுந் தாளக் கொடித்தே ரதனைக்
கொடுவா விரைவிற் குவலய மிதனைக்
கடிகையிற் றூக்கிக் கவிழ்த்திடு கின்றனன்
எட்டுத் திசையு மிங்ஙன மிழுத்துக்
கட்டி யடித்துக் கலக்கிடு கின்றனன்
ஓங்கிடுஞ் சொர்க்க வுலகையு மிறக்கித்
தூங்கவைக் கின்றனன் சோரனைத் துறவித்
துட்டனெங் குற்றிடுந் துணுக்குத் துணுக்கதாய்
வெட்டிடு கின்றனன் விக்ரம ராமனே!

[அப்பால், ஸ்ரீ கிருஷ்ணன் பிரவேசிக்கின்றனர்.]

கிருஷ். இதுவென்கொல்? இதுவென்கொல்? இத்தனை கோப மேன்? அண்ணா! என்ன? என்ன? சொல்லுங்கள்.

பலரா. அடே! அடே! உனக்கிது தெரியாதோ? ஒன்றுமறியா துறங்கினைகொல்? நன்று. நன்று. அடே!!

வெண்பா.

மட்டித் தனமாய்நம் மங்கை சுபத்திரையைக்
கட்டி யபகரித்துக் கைக்கொண்டு—பொட்டெனவே
தாவிடடந் தெங்கேயோ சார்ந்தனனு மத்திருட்டுப்
பாவிச்சன் யாசிப் பயல்.

**கிருஷ்.** ஸரி. ஸரி. வெண்பா.

இச்செய்கை யானவெல்லா மிப்படியே யான்முனமே
நிச்சயித்தி ருந்ததுதான் நேராச்சு—பக்ஷமுடன்
நானன் றுரைத்தமொழி நம்பாத வர்க்கின்லறக்
கேன்வந்த திக்கோப மே.

**பலரா.** (கோபவிசனத்துடன்) அடே! அடே! உன்னுடைய இறுமாப்பையும், இப்பொழுது நீயுரைத்தவார்த்தையின் ஸாரத்தையுங்கவனிக்கின்றபொழுது, இஃதெல்லாமே உன்னுடைய கபடகிருத்தியமாகவே இருக்குமென்று நினைக்கவேண்டியிருக்கின்றது. ஆனல், அடே!

விருத்தம்.

எத்தனித்தெதெதுகார்யம்யான்செயமுயன்றிட்டாலும்
மெத்தவுமதில்விரோதம்விளைத்திடாதிருப்பதில்லை
நித்தமும்நின்சுபாவம்நிரந்தரந்தெரிவேனப்பா
அத்தனைக்கென்னைஎல்லாம்நின்மனம்போலாகட்டும்.

(வசனம்) அடே! அடே! எல்லாம் நின்சம்மதம்போ லாகட்டும். எனக்குமே மிகமிகக் கஷ்டமாய்விட்டது. இனிமேல் இவ்விராஜ்யமும் வேண்டாம். இவ்வுலகமுமே எனக்குவேண்டாம். இப்பொழுதே சன்யாசத்தைக்கொடுத் தெங்கேயாவது என்னையனுப்பிவிடு. இங்கொருவர்முகத்திலும் இனி விழிக்கத்தேவையில்லை. எல்லாம் நீயே கட்டியாண்டுகொள். ஒரு கணப்பொழுதுகூட எனக்கிங்கிருக்கப் பிரியமில்லை. யாரங்கே? எனக்குச்சன்யாசத்திற்கு வேண்டுவனவற்றைச் சீக்கிரந்தயார் செய்துகொண்டு வாருங்கள்.

[இதற்குள் யதிவேஷசாமான் மூட்டையுடன், ஒரு சேவகன் பிரவேசிக்கின்றனன்.]

**சேவகன்.** மஹாராஜ்!! இதோ யதிவேடசாமான்கள்.

[என்றெதிரே வைக்கின்றனன்.]

**பலரா.** அடே! அடே! கோபாலகிருஷ்ணா!! பேஷ்! பேஷ்! யான் ஸன்யாசத்தைக்கொண்டெங்கேயாவது போய்விட வேண்டு

மென்று முன்னமேயே யோசனைசெய்து, அதற்குரிய சாமான்களும் எத்தனித்து வைத்திருந்தாய்போலும். ஹ! ஹ! ஹ! பேஷ். பேஷ். நீயே ஆப்த சகோதரன்.

விருத்தம்.

பத்தியுற்றவன்போல்நாளும்பாவித்துச்சன்மமெல்லாம்
சுத்தநற்கபடியாகத்தோன்றினையடடாக்ருஷ்ணா!
இத்தனைகாட்டாவாதமேனடாவுனக்கென்மீதி
லெத்தனைநாட்களாகவெண்ணியோசித்தாயப்பா.

கிருஷ். அண்ணா! அவன் ஏதோ சமாசாரஞ்சொல்கின்றான். அதையென்னவென்று கேளாமல் இப்படிச்சொன்னால் என்னதான் செய்கின்றது?

பலரா. (அலக்ஷியத்துடன்) எல்லாம் நீதானே கேட்டுக்கொள். இனி எனக்கென்ன தொந்தம்?

கிருஷ். (சேவகனைக்குறித்து) என்னடா? என்னசொல்கின்றாய்? அதைச் சரியாய்ச்சொல்.

சேவ. மகராஜ்!! கேட்டருளல் வேண்டும்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஆத்திரமாய்ச் சுபத்திரையோ டகல்கள்வன் றனைத்தேடி
யலைந்த லைந்தக்
கோத்திரத்தி னடிவாரத் தங்கொருபாற் கிடந்தசுமை
குறித்தெ டுத்துப்
பார்த்திதனை மன்னவைக்கே கொடுபோவென் றெனைவிடுத்தார்
படைகாப் பாளர்
சாத்தகியா ரவண்விருத்தாந் தந்தெரிந்திங் கொருநொடிக்குட்
சார்வ தாகும்.

[இதற்குள் சாத்தகி பிரவேசிக்கின்றனன்.]

(சாத்தகி) அடுக்குமொழி.

மன்னவர் இருவர்க்கும் மங்களம் பெருகவே
மகராஜ்! இங்ஙனம் நம்மவர்க் கின்பமே நல்கும்
ஸங்கதி யுரைப்பேன் ஸாரமாய்க் கேண்மின்!

பலரா. (சற்று சாந்தத்தையடைந்து) வாய்த்த சந்தோஷ வார்த்தைய தென்கொல்? சாத்தகி! அதனைச் சாற்றக் கடவாய்.

சாத். எழுசீர்க்கழிநெடில் விருத்தம்.

காவியங் கணிநஞ் சுபத்திரா மணியைக்
கவர்ந்தவத் துறவியாங் கள்வன்
தாவியங் கோடுஞ் சமயத்தி லவனைத்
தடுத்தெதிர் தண்டனை புரிந்து
மேவுமோ ரரசன் வீரவெவ் வண்ணன்
வேணிகர் சுந்தர மெய்யன்
பூவையங் குயிலோ டிறங்கினன் அந்தப்
பொருப்பைவிட் டிங்ஙனம் போந்தான்.

(இதுவுமது) விருத்தம்.

அவ்வி டம்பசன் யாசி யைப்பிடித்
தந்த ராஜகு மாரனை
வெவ்வி டம்பெறுஞ் சிட்சை செய்தவன்
வேட மாருடை யாவையும்
வவ்வி யேபறித் தெறிந்த னன்மலை
மாட்டு வீழ்ந்து கிடந்ததைச்
செவ்வை நுந்திருச் சமுக முற்றிடத்
தெரித்து முன்வர விடுத்தனன்.

பலரா. பேஷ். பேஷ். நன்று. நன்று. சாத்தகி!! அந்தச் சுந்தரத் தருண இராஜகுமாரன் யாராகயிருக்கலாமென் றுனக்குத்தோன்றுகின்றது?

சாத். மஹாராஜ்! யானவனைத் தூரத்திலிருந்து பார்த்ததனால், அவனிவனென்று சொல்லமுடியாது. ஆனால், அந்தத்துரியோதன ராஜனுடைய முகச்சாடைபோல கொஞ்சமிருக்கலாமென்று நினைக்கின்றேன். ஒருக்கால் அவனாயிருந்தாலு மிருக்கலாம். அல்ல தவன்வம்சத்தில் யாராவதாகயிருந்தாலு மிருக்கலாம். அல்லது வேறு அன்னியனாகவிருந்தாலு மிருக்கலாம்.

பலரா. ஸரி. ஸரி. போதும். போதும். மற்றுரிருக்கவல்லர்? அவ் வணங்காமுடி மன்னனுகவே யிருக்கவேண்டும். அவன் வேறு யாராகவாவது இருக்கட்டும். இத்தகைய மகத்தான அவமா னஞ்சம்பவிக்கின்ற இந்தச்சமயத்தில், நம்முடைய மானங்காத்த மஹாநுபாவனியாவனே; அவனே நம் சுபத்திரைக்கு முரி யோன்.

வெண்பா.

போனவுயிர் மீட்டளித்தாற் போன்றுதவி செய்தனனம்
மானபரி பாலனஞ்செய் வள்ளலுக்கே—தேனின்சொற்
கற்பணிசு பத்திரையாங் கன்னிகையை என்மனத்தா
லற்பணஞ்செய் திட்டேனரோ.

கலிவிருத்தம்.

எவனேஇப்பேருதவிசெய்தோன் அவனேஎனக்கன்பானுனே
எவனேயவனுயிருந்தாலும் அவனேயவட்குநாயகனே.

கிருஷ். ஆ! ஆ! அண்ணு! அண்ணு!! எதையானுலும் நன்று யோ சித்துச் சொல்லவேண்டும். முன் பின் யோசியாமலே, எதை யுமே திடீரென்று சொல்லிவிடுகின்றீர்கள். ஆனுல், முன்ன மேயே துரியோதனனுக்கு வாக்குக் கொடுத்ததுண்டு.

பலரா. அடே! அடே! இப்பொழுதென்ன யோசியாமற் சொன்னே னென் றெண்ணுகின்றுய்? அவனே அத் துரியோதனனுகவே யிருக்கவேண்டும். அப்படிக்கிருந்தாலோ நிரம்ப நல்லதாய் விட்டது. ஒருக்கால், அப்படிக்கில்லாமல் மற்றொருவனுக யிருந் தாலும், இருக்கட்டும். இந்தச்சமயத்தில் உதவிசெய்தவனுக் குத்தான் அவளைக்கொடுக்கவேண்டுவது ஞாயமாயிருக்கின்றது. அவளும் அவனுக்கே பாத்தியப்பட்டவளாகவே ஆகின்றுள். ஆனுல், அந்தத்துரியோதனன் கதாயுதவித்தையில் எனது சிடன்றுனே, அவனை எவ்விதத்திலாவது ஸமாதானஞ்செய்து கொள்கின்றேன். இதற்கென்னயோசனை? (சாத்தகியைக் குறித்து) அடா! சாத்தகீ! நீ சீக்கிரஞ்சென்று அவ்விராஜ குமாரனைச் சுபத்திரைரக்ஷிதம் அழைத்துக்கொண்டுவா!!

சாத். ஆக்ஞை.

[என்று சென்று, சுபத்திராஸகித அர்சுனனுடன் பிரவேசிக்கின்றனன்.]

சாத். இங்கே. இப்படி, இப்படிவரவேண்டும். மகாராஜரவர்கள் தங்களைப்பார்ப்பதற்கதிகவாவலுடன் எதிர்கொண்டிருக்கின்றார்கள்.

பலரா. (அத்தியானந்தபரிதராய், இரண்டுகண்களிலு மானந்தக்கண்ணீர் அருவிபோற்பெருக, திடீரென்றெழுந்து, இரண்டடி எதிர் நடந்து) ஸபாஸ்! ஸபாஸ்!

அடேக்குமொழி.

மிகானந்தம் மிகானந்தம் மகாவீர சிகாமணே!
அகாரணோப காரியின் ஸகாயமே ஸகாயமே.

[என்று சொல்லி எதிட்டுப்பாராமலே, அர்ச்சுனனை இறுகத்தழுவிக்கொண்டு.]

விருத்தம்.

நன்றுநன்றாசரேறேநலமுற்றெந்நாளும்வாழ்க
ஒன்றுகேணீசெய்யிந்தஉதவிக்கோருதவிகாணேன்
என்றனுருயிர்ப்பிறப்பாளெழிற்சுபத்திரையைநானே
இன்றுனக்களித்தேனன்பாயின்கரம்பிடித்துக்கொள்வாய்.

(என மொழிந்து, அருகினின்ற சுபத்திரையின் கரத்தையும், அர்ச்சுனன் கையையும் பிடித்துக்கொண்டு, அவ் வர்ச்சுனன் முகத்தை நோக்கவும், அர்ச்சுனனென்றறிந்துகொண்டு வெடுக்கென்று கரங்களை உதறிவிட்டு)

அடே! அடே! மோசம்போய்விட்டது. மோசம்போய்விட்டது. யானுற்றுப்பார்த்தறியாமற் சொன்ன இந்த வாக்கு உறுதியல்ல. உறுதியல்ல (உக்கிர கோபத்துடன்) அடடா! பாவீ! அடடா! துரோகீ! திருட்டுத்தனத்திற்றேர்ந்த பார்த்தா!!

விருத்தம்.

அதமா! அதமா! இத்தகையவனியாயஞ்செய்தாயி துசம்
மதமா? மதமா? வஞ்சனையால்மங்கைசுபத்திராமணியை

இதமாயிதமா யெய்துதற்கேளண்ணிறுய்கொலிதற்கெதிராய்க்
கதமா யுதமா பூசையுனக்களிப்பேன்கண்டுகளிப்பேனே.

(என்றுசொல்லி, கையிற் கதாயுதத்தைச் சுழற்றிக்கொண்டு அர்ச்சுனன்மீது நடக்க,)

(திரையைத்தள்ளி அவசரத்திற் கற்கமுனிவர் பிரவேசித்துப் பலராமர் கரங்களை எட்டிப்பிடித்துக்கொண்டு,)

கற்கமுனிவர் ஆ! ஆ! பலராமா !! வசனபங்கஞ் செய்யாதே. வசன பங்கஞ் செய்யாதே. அடே! அடே!! என்ன? என்ன புன்மதி படைத்தாய்? இதுவோ உனது மனுநீதி?

கலி விருத்தம்.

என்னை இப் பேய்மதி எதெதுவந் தெய்தினும்
மன்னவர்க் கழகுதம் வாய்மை வழாததே
சொன்னசொற் பொய்த்திடிற் சொர்க்கமும் பொய்த்திடும்
நன்னலம் யாவுமந் நாளிற் பொன்றுமால்.

பலரா. (கோபாவேசத்தாற் காலூன்றி நிற்கொணு துடல்நடுக்கத்துடன்) நிற்க. நிற்க. கற்க முனிவரே.

சிங்காரக் கலி.

வேற்றுருப் புனைந்தே மாற்றிட நினைந்த
தூர்த்தனை எமனுல கேற்றி மீள்வனுல்.

(என்று கற்கமுனிவர்தம் கரத்தைத் திமிறுகின்றனர்).

கற்க. (பிடித்தபிடி விடாது பலராமனைத் தடுத்து நிறுத்திக்கொண்டு) அடே! அடே! இதுவென்கொல்? உக்கிரகோபமிஃ தொழியக் கடவாய். கொடிது, கொடிது, கோபங்கொடிது. ஹு! ஹு! ஹு!! குடிகெடுக்கும் இக்கோபம். ஒருக்காலும் ஆகாது. ஆகாது.

எழுசீர்கழிநெடில் விருத்தம்.

கோப மென்பது நானெனு மகந்தையின்
கூட்டுற வாய்வெளிக் கொள்ளுநங்
கோப மென்பது வெறியுருக் கொண்டுவன்
கொலைமுதற் பழியெலாங் கூட்டும்

கோப மென்பது ஞானபா னுலைவிழுங்
குங்கொடுங் கோளரா வாகுங்
கோப மென்பது புன்னர குய்த்திடுங்
குணமொன் றுந் தாரா தே.

(வசனம்) ஆகையா லித்தகைய கொடிய கோபத்தை விட்டு விட்டுச் சாந்த குணத்தைக் கொள்ளக்கடவாய். அடே! அடே!! இன்னும் உனக்கோர் வார்த்தை சொல்கின்றேன். நீ இந்தக்கோபத்தின் வன்மையால், அர்ச்சுனனைக்கொன்று, உன்றங்கை சுபத்திரைக்கு மாறாத வைதவ்யத்தைக்கொடுக்கவா நினைந்தாய்? அடே! அடே! மஹாபாபி! இதைக்காட்டிலும், கொடுங்கோபாக்கினி கொழுந்துவிட்டெரிகின்ற உங்கள் குரூரகுலத்திற்குக் குலகுருவாய்த் தோன்றிய கொடுமைதீர, என்னையேயானுலு மிப்பொழுது கொன்றுவிடடா.

பலரா. (கைக்கதையைக் கீழேயெறிந்து) ஹா! ஹா! ஹா!! கஷ்டம். கஷ்டம். குருநாதா!! ஏன் இத்தனை? இந்தக் கதையினுல் என் மண்டையையுடைத்து என் கதையை முடித்துவிடுங்கள்.

கற்க. ஹா! ஹா! ஹா!! ஒன்றும் வேண்டாம். அட! என்னையே ஒழித்துவிடு. ஒழித்துவிடு. எனது வார்த்தையிலோ உனக்கு விச்வாஸமென்பதில்லை. யானே உங்களுக்கெல்லாங் கெடுதலான காரியத்தையே புரிகின்றவன். யானிருந்தென்பயன்?

பலரா. (பயவினயத்துடன்) ஆ! ஆ! குருநாதரே!! தங்களாணையை மீறிக்கோபமடைந்தது குற்றம். குற்றம். அந்தக்கோபத்தை இப்பொழுது கொலைசெய்துவிட்டேன். இப்பொழுதென்பிழையை மன்னித்துக் கிருபை பாலித்தருளல் வேண்டும்.

(எனப்பணிந்தெழுந்து நின்றுகொண்டு)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

உத்தமசற் குருவேறும் முபதேசா முதம்பருகி
யுள்ள வெப்ப
மத்தனையுங் குளிர்ந்தனனும் இன்னருளா னுபசாந்த
ந்தேனையா!

நித்தலுநங் கற்பனைக்கீழ் நனிநடப்பே னினிப்பேத
நினைக்கி லேன்காண்
சத்தியவா சகமிதுவே யான்செயவேண் டுவதெதுவோ
சாற்று வீரே.

கற்க. அங்ஙனமாயின், பலராமா! கேட்கக் கடவாய்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

என்னுரைகேள் பலராமா சுபத்திரைக்கவ் வர்ச்சுனனை
இன்ம ணாளன்
சொன்னானுக் கவளைநன் மனையாகுந் தொல்லுலகிற்
றொன்று தொட்டு
மன்னுகின்ற யாதவபாண் டவர்க்குரிய சம்பந்தம்
வளர்ந்த தன்றோ?
பின்னமுறா தின்னமுமப் படிச்செய்ய ஈசனைநான்
பிரார்த்திக் கின்றேன்.

பலரா. சிங்காரக்கவி.

ஒருமொழி யேனுங் குருமொழி கடவேன்
திருவுள மெதுவோ புரிகுவ னதுவே.

கற்க. ஸரி. ஸரி. ரொம்ப சந்தோஷம். ரொம்ப சந்தோஷம். மேன்மே
லும் இனி க்ஷேமந்தான். பேஷ். பேஷ்.

எண்சீர்க்கழிநெடில் விருத்தம்.

சொல்லியநின் வார்த்தையிது மெய்யே யானாற்
சுமுகமுடன் முற்பகையைத் தூர விட்டுப்
புல்லியநற் சமயமிது நன்மு கூர்த்தம்
பொருந்திடுவ திப்பொழுதே என்முன் பாய்நீ
மெல்லியற்சு பத்திரையின் கரம்பி டித்து
விழைவினொடவ் விசயன்கைக் கீதல் வேண்டும்
செல்லுலவும் பொழின்மருங்கே மயிலின் றுடுஞ்
செழுந்துவரைக் கதிபஇனி க்ஷேமந் தானே.

அபிக்குமொழி.

எற்ற சமயமு மிருந்தா லிருந்தான்
மூர்க்கமும் வந்து வாய்த்தது நன்றே.

பலரா. நன்று. நன்று. குருவின் மொழிக்கு மறுமொழி யுரையேன். அவ்விதமே செய்கின்றேன். அவ்விதமே செய்கின்றேன்.

கிருஷ். (அர்ச்சுனனைக் குறித்து) அர்ச்சுனா! உன்மைத்துனர் பலராமருக்கு வந்தனஞ் செய்யக்கடவாய்.

அர்ச். ஆரியரே! தும தடியிணை போற்றி.

(என வணங்குகின்றனன்.)

பலரா. வெண்பா.

மார்க்கண்ட மாமுனிபோல் மால்விஜய னன்றுநீ
நீட்காயுள் பெற்றுச் சிறந்தனையால்—ஏற்குமெழின்
மின்றான் சுபத்திரையாம் மெல்லியற்கு நாயகனாய்
எந்நாளும் வாழ்கவாழ்க வே

(என்று சொல்லி, சுபத்திரையின் கையைப் பிடித்துக்கொண்டு, அர்ச்சுனனைக் குறித்தானந்தத்துடன்.)

வெண்பா.

பொன்னவளை யேநிகர்த்த பூவை சுபத்திரையா
மின்னவளை யானுனக்கே ஈகின்றேன்—சொன்னவளைக்
கைப்பிடித்துக் கொண்டினிது கண்ணே நினைத்தியலோ
டெப்பொழுது மின்புற் றிரு.

[என்று சொல்லிக் கையிற் பிடித்துக்கொடுத்தனர்.]

அர்ச். (வினயத்துடன்) நன்று, நன்று. இதோ ஆதரவுடன் கிரகித்துக்கொண்டேன். தங்களன்பிற் குகந்தபடியே நடந்துகொள்கின்றேன்.

கிருஷ். வெண்பா.

செய்யவருட் டெய்வநலஞ் சேரர்ச்சு னையிந்தத்
தையலிட மாய்ச்சந் ததிகளடைந்—தைவர்களால்

நேர்த்தியுறப் பேர்பெற்ற நின்குலமென் மேலுமொளிர்
சீர்த்தியுற வாழ்வாய் சிறந்து.

[இதற்குள் உருக்மிணி பிரவேசிக்கின்றனள்.]

உருக். வெண்பா.

அருமைக் குரியாளே அன்புடையா ளோநற்
பெருமைச் சுபத்திரையாம் பெண்ணே !—திருவேஎன்
தோழி சுமங்கலிமார் சோபையுட னென்றுநான் றும்
வாழிமிக வாழி மகிழ்ந்து.

(வசனம்.) ஆ! ஆ! எனதருமைத்தோழி! என்னுடன் பேசுதற்குப் பிரியமில்லாதவளாயிருந்தாயே. இனியாவது வார்த்தைசொல்ல மனதுண்டாகுமா? ஸாமியாரைக் காத்திருந்ததற்குப் பலன் கைமேற்கிடைத்ததுனக்கு. ஆனால், கடைசியில் அந்தச்ஸாமியாரைத்தானே கணவனாக அடைந்தாய். அடீ! அடீ! தோழி ரத்தினமே!! நன்று, நன்று. ஸோதரனாதுவென்ற சன்னியாசியே மாதர்க்கரசிக்கு மாப்பிள்ளையாயினன். மிக்கவு நன்று, நன்று. இந்தச்சமயத்தை எப்பொழுது காண்போமென்றிருந்தேன். அஃதின்றுதான் லபித்தது. உனது பரிதாபத்தைக் கண்கொண்டு பார்க்கப்படாதிருந்ததே. இப்பொழுது அந்தச் சந்தாபம் நீங்கிச் சந்தோஷம் கொண்டனையா? கிரம்ப சந்தோஷம். கிரம்ப சந்தோஷம்.

சுபத். (இலச்சையுடன், முகத்தைக் கவிழ்த்திக்கொண்டு) மதினீ! எல்லாமுனது ஆசீர்வாதமகிமைதான். நீ இப்பொழுதெவ்வளவு சொன்னாலும், யான் ஒன்றும் பதிற்சொல்ல இடமில்லாதவளாயிருக்கின்றேன்.

கற்க. நன்று, நன்று. கிரம்ப சந்தோஷம், கிரம்ப சந்தோஷம்.

[அர்ச்சுனனைக்குறித்து]

வெண்பா.

வீர நரபார்த்தா வில்விஜயா மேவுமெழிற்
சீரியனுன் கார்யமெலாஞ் சித்திபெற்றாய்—பாரிலுனக்
கேதுமிக ரேதுபய மின்புற்று வாழ்கஇனம்
யாதுனக் கிச்சை யியம்பு.

அர்ச். (குரு சரணாரவிந்தங்களிற் பரிவுடன் நமஸ்கரித்து எழுந்து நின்று அஞ்சலிசெய்துகொண்டு)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஆரியநீ ராமகருளா லெல்லாச்சௌ பாக்கியமு
மடைந்து கொண்டேன்
ஓரியல்பின் நிறைவின்றிச் சம்பூர்ண மாய்ச்சிறப்புற்
றோங்கப் பெற்ற
சீரியபுங் கவகுமாரு சுபத்திரா பரிணயமுஞ்
செய்யப் பெற்றேன்
காரியங்கள் சித்திபெற்றேன் கனம்பெற்றேன் குணம்பெற்றேன்
களிப்புற் றேனே.

வசனம்) பகவன்! குருநாததேவ!! தங்கள் கிருபையினால் சகல பாக்கியங்களும் சம்பூர்ணமாய் நிறைந்திருக்கின்றன. தங்கள் கிருபையால் மங்களகரமான சுபத்திராபரிணயமும் சம்பூர் ணஞ்செய்து மணம்பெற்றேன். குணம்பெற்றேன். நல் வாழ் வும் பெற்றுவாழ்கின்றேன். ஒன்றுங் குறைவில்லை. இன்னு மியாதொன்றைக் கேட்கட்டும்? ஆயினும், பரம கருணையுருத்தியா கிய பரமேசுவரர் தங் கிருபையினால், அடியனும் பாதவாக்கி யத்தையருளும்படி பிரார்த்திக்கின்றனன்.

பாதவாக்கியம்.

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மன்னுயிர்க டம்முயிராய்ச் சீவகா ருண்யமிக
வாய்ந்து வாய்மை
தன்னைமறு தொளிர்மனுவின் நெறிதவறு நடுநிலைமை
சாய்வுறாது
பின்னமுறா துரிமையென்ப தாறிலொரு பாகமதாய்ப்
பெற்று நாளும்
இன்னலுறா தருள்பரப்பி எவ்வுயிருங் காத்திறைவ
னென்றும் வாழ்க.

ஷெ விருத்தம்.

வான்பொழியப் பயிர்களெலாம் வளர்ந்தோங்கத் தனதான்ய
வளமை தாங்கித்
தேன்பொழியும் பூம்பொழிலார் பூதலமெலாஞ் செழித்துத்
தீங்கொன் றின்றி
ஊன்பொதிந்த உயிரனைத்தும் வாழ்கத்தே வாலயங்க
ளொளிர்பெற் றோங்க
நோன்புதவ மகமுதற்சற் கன்மங்கள் பொலிவுறவின்
றோர்கள் வாழ்க.

ஷெ விருத்தம்.

கற்றுணர்ந்த புலவர்கள்சொற் பொருணயங்கற் பனாரஸங்கள்
கமழு கின்ற
பெற்றியுள நாடககா வியங்கள்பல வியற்றி நலம்
பெற்று வாழ்க
உற்றிடுநால் வருணத்தி னவரவர்தங் குலதன்மத்
தோங்கி வாழ்க
வெற்றியுறும் ராஜவிசு வாசமுடன் பிரஜைகண்மேன்
மேலும் வாழ்க.

ஷெ விருத்தம்.

அருமைபெறு தமிழ்ப்ரபந்தம் சுபத்திரா பரிணயப்பே
ரமைந்த விந்நூல்
உரிமையடைந் தச்சிடுவித் துலகெங்கும் புகழ்பரவ
வோங்கு கின்றான்
தருமமிகு குலவணிகன் ஆண்டிபட்டிக் கதிபனெனுந்
தக்கோன் மிக்க
பெருமையுடன் பசுபதியின் னருடழைப்பப் பெத்தாச்சி
பிரபுவும் வாழ்க.

ஷை விருத்தம்.

பொன்னரிகை நகர்வாசன் புனல்வேலி முத்துசுப்ப
பூசு ரேந்திரன்
சொன்னயஞ்சேர் செந்தமிழிற் சுபத்திரா பரிணயப்பேர்
சூட்டித் தேன்போல்
நன்னயமா மியற்றியவிந் நாடகத்தி னமுதருந்தி
நாளுஞ் சிந்தை
மன்னியர ஸானந்தக் கடலாடி ரசிகசிகா
மணிகள் வாழ்க.

(வசனம்) "ஆக எல்லாம் இவ்விதமாகவே ஸர்வஜீவதயாபராகிய பரமேச்வரர் கட்டளையிட்டுக் கருணைபாலிக்கட்டும்."

கற்க. (கையை உயர்த்திக்கொண்டு) அவ்விதமேயாகட்டும். அவ்விதமே யாகட்டும்.

கவி.

மன்னர் வாழ்க மறையவர் வாழ்கவே!
இந்நூல் வாழ்க இயாவரும் வாழ்கவே!

[எல்லாரும் சென்றனர்.]




சுபத்திராபரிணய நாடகம் ஸம்பூர்ணம்.

சற்குருசரணந்துணை.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| மு. 5 | 7 | நன்புடையீர்!! | நண்புடையீர்!! |
| 4 | 18 | வாழ்கை | வாழ்க்கை |
| 16 | 14 | டனைகட்க் | டனைகட் |
| 25 | 18 | பட்டிருந்தவளாான | பட்டிருந்தவளான |
| 32 | 4 | இவனொ! | இவனோ! |
| 34 | 17 | தூங்கின்ற | தூங்குகின்ற |
| 48 | 11 | சீர்த்தமிகு | சீர்த்திமிகு |
| 49 | 31 | யத்திலேயா | யத்திலென் |
| 51 | 4 | மெய்ததுதல் | மெய்துதல் |
| 51 | 12 | ஆடீ! | அடீ! |
| 55 | 7 | முயர்ந்த | முயர்த்த |
| 56 | 8 | மெனிப் | மேனிப் |
| 57 | 3 | விளைத்துஞ் | விளைத்ததுஞ் |
| 69 | 29 | நிர்மித்தமாய்க் | நிர்நிமித்தமாய்க் |
| 70 | 22 | முந்தீர்கின்றல்லை | முந்தீர்கின்றதில்லை |
| 82 | 31 | அவள | அவள் |
| 84 | 23 | சோசனை | யோசனை |
| 88 | 22 | மாறாகக்செய்கின்ற | மாறாகச்செய்கின்ற |
| 97 | 7 | இருக்சட்டும் | இருக்கட்டும் |
| 98 | 28 | றோன்றுகின்றர் | றோன்றுகின்றனர் |
| 101 | 18 | தேகஸ்த்தி | தேகஸ்திதி |
| 113 | 20 | சிகாமனி | சிகாமணி |
| 114 | 3 | இதுவெல்கொல்? | இதுவென்கொல்? |
| 115 | 27 | யான | யான் |
| 123 | 27 | வாத்யங்கள் | வாத்தியம் |
| 127 | 17 | ஜொலி | ஜோலி |
| 134 | 28 | ஒருக்காலத்தில் | ஒருக்காலதில் |
| 147 | 11 | றயுவுடன் | றயவுடன் |
| 150 | 6 | காலடிசத்தங் | காலடிச்சத்தங் |
| 156 | 25 | பாதமே | பதமே |
| 159 | 7 | பர்வதத்திற்கு | பர்வ. திற்கு |
| 160 | 20 | கடார்ந்து | க ந்து |
| 176 | 8 | தொற்றுகின்ற | தோற்றுகின்ற |
| 178 | 10 | பயமினிதுயேது? | பயமினியேது? |